பொங்கல் சிறப்பிதழ்

KALKI 15.1.89 ரூ. 2.

# கல்கி

"நடிப்பு என் தொழில்;
ஆன்மீகம் என் வாழ்க்கை"

—ரஜினிகாந்த் மனம்திறந்து பேசுகிறார்

உங்கள் குழந்தைக்கு ஊட்டுங்கள் முட்டையின் புரதச் சத்தூட்டத்தை!



# ஃபாரெக்ஸ்®-எக்

## 6 மாதம் முதல்

புதிய ஃபாரெக்ஸ் எக் — இது, உங்கள் குழந்தையின் முழு நிறைவான வளர்ச்சிக்குத் தேவையான புரதச் சத்தைக் கொண்டுள்ளது. இது, நன்றாக முன்பே பக்குவப் படுத்தப்பட்டது. ஆகவே இது, குழந்தையின் மென்மை யான வயிற்றின் ஜீரண சக்திக்கு ஏற்றதாகும்.

**ஃபாரெக்ஸ்—சுவையுடன் வளரும் வழி**




இதோ ஃபாரெக்ஸ் வளர்ச்சி வழி: 1. பால் சேர்த்த ஃபாரெக்ஸ் சீரியல் 2. ஃபாரெக்ஸ்-வெஜ் 3. ஃபாரெக்ஸ்-எக்

GX/32/203 TML

# சென்னை

## – ஒரு தேர்தல் ரவுண்ட் அப்



துறைமுகம் தொகுதியில் கலைஞர் கருணாநிதி.

தி. மு. கழகம் கோட்டையைப் பிடிக்கிறதோ, கோட்டை விடுகிறதோ, சென்னை நகரைப் பொறுத்தவரை அது தி. மு. கழகத்தின் கோட்டை என்பதை இந்தத் தேர்தல் மீண்டும் நிரூபித்து விடும். சென்னை மாநகரின் பதினான்கு தொகுதிகளில், எப்படியும் பத்துத் தொகுதிகளிலாவது தி. மு. க. ஜெயிக்கும் என்பது நமது கணிப்பு. வேட்பாளர் பட்டியலைப் பார்க்கிற போது, மற்ற கட்சிகள் 'வெயிட்'டான வேட்பாளர்களைப் போடாமல் 'ஜகா' வாங்கியிருப்பதைக் காண முடிகிறது.

ராயபுரம் தொகுதியில் போட்டியிடும் இருபத்தேழு பேரில் முக்கியமானவர்கள் மதிவாணன் (தி.மு.க.), ரமணிபாய் (இ.கா). இங்கு மட்டுமின்றி, பூங்கா நகர் தொகுதியில் ரகுமான் கான், புரசைவாக்கத்தில் ஆற்காடு வீராசாமி, அண்ணா நகரில் அன்பழகன் — இங்கேயெல்லாமும் தி. மு. க. சுலபமாய் ஜெயிக்கும். பெரம்பூரிலும் அப்படியே.

தி. நகர் தொகுதியில் ஜா. அணி சார்பாக ஜேப்பியார்; தி. மு. க. சார்பில் முன்னாள் மேயர் சா. கணேசன்; இ. கா. சார்பாக இதே தொகுதியில் இரு தடவை ஜெயித்த டாக்டர் சௌரிராஜன். தண்ணீர்ப் பஞ்சத்தின் போது தாம் எடுத்த நடவடிக்கைகளைச் சொல்லி வோட்டுக் கேட்கிறார் ஜேப்பியார். தொகுதி மக்களிடையே, 'எளிமையானவர், கைசுத்தமானவர்' என்று பெயர் எடுத்தவர் கணேசன். போட்டி கடுமையாய் இருக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

ஆயிரம் விளக்குத் தொகுதியில் ஜெ. அணி சார்பில் எஸ். எஸ். ராஜேந்திரனின் மகன் நின்றாலும், ஸ்டாலின் வெற்றி பெறுவதில் சிரமம் ஏதுமிருக்காது. 'இந்தத் தடவை ஸ்டாலினை ஜெயிக்க முடியாது என்று பயந்து திண்டுக்கல்லுக்கு கே. ஏ. கே.

* ஒரே மேடையில் பல கட்சி வேட்பாளர்கள். தேர்தல் கமிஷன் அறிவுரைப்படி தி. நகரில் விஜில் நடத்திய கூட்டம்.



* "ஜெயிக்கிறேனா இல்லையா, பாருங்கள்!" — கலைஞரை எதிர்க்கும் காஜா.'



ஓடி விட்டார்' என்று தி. மு. க. சார்பில் சொல்லப்பட்டாலும், உண்மைக் காரணம் கே.ஏ.கே.யுடன் செய்து கொண்ட மறை முக ஒப்பந்தம் என்று கூறப்படுகிறது.

சேப்பாக்கத்தில், முஸ்லிம் லீக் பிளவுக் குப் பின், கலைஞரால் வளர்க்கப்பட்ட லத் தீப் நிற்கிறார். மூன்று தடவை தொடர்ந்து ரகுமான் கான் வென்ற தொகுதி இது. எனவே லத்தீப் வெற்றி பெறுவது சுலபமே!

**க**லைஞர் 67—லும், 71—லும் போட்டி யிட்டு, வென்ற தொகுதி சைதாப்பேட்டை. சுமார் 150 வோட்டு வித்தியாசத்தில் சென்ற முறை ஜெயித்த சைதை துரைசாமி இந்த முறை 'ஜா. அணி சார்பில் நிற்கிறார். தொகு தியில் தனிப்பட்ட முறையில் இவருக்குள்ள செல்வாக்கு அதிகம் எனினும் பிளவுபடாத அ.தி.மு.க. — இ. காங்கிரஸ் கூட்டணி யிருந்த போதே சொற்ப வித்தியாசத்தில் தான் துரைசாமி ஜெயித்தார் என்பதை மறப்பதற்கில்லை. எனவே சைதை இந்த முறை தி. மு. க.வுக்குத்தான் என்கிறார்கள் தி.மு.க.வினர்.

டாக்டர். ராதா கிருஷ்ணன் நகரில் மோதும் முக்கிய வேட்பாளர்கள் சற்குணம் (தி.மு.க. மகளிர் அணி தலைவி) மது சூதனன் (ஜெ. அணி) ராஜசேகரன் (த. மு. மு.). இவர்களில் ஏற்கெனவே இங்கே நின்று ஒரு தடவை வெற்றி பெற்ற ராஜ சேகரன் இப்போதும் வெற்றி பெறுவார் என எதிர்பார்க்கப்படுகிறது.

மயிலாப்பூர் தொகுதியில், சிவசங்கரி நிற்பார் எனக் கிசுகிசுக்கப்பட்டது. திடீரென, ஜெயலலிதா தி. நகரில் நிற்பார் எனச் செய்தி அடிபட்ட போது, சினிமா நடிகை லட்சுமியை தி. நகரில் நிறுத்துவதாய் இருந்ததாம் தி. மு. க. கடைசியில், மயிலாப் பூரில் சரோஜினி வரதப்பன் (இ.கா.) நிற் கிறார். தி. மு. க. சார்பில் வக்கீல் கணபதி. சென்னை நகரிலேயே காங்கிரஸ் கொஞ்சம் சுறுசுறுப்பாய்த் தேர்தல் வேலை செய்கிறது என்றால் அது மயிலாப்பூர் தொகுதியில் தான் எனலாம். முடிவு பக்தவத்சலம் மகளுக்குச் சாதகமாய் இருக்கும் என நம்ப இடமுண்டு.

**நா**ஞ்சில் மனோகரனும், ஹண்டேயும் திருவல்லிக்கேணியில் மோதுகிறார்கள். போட்டி கடுமையானதுதான் என்றாலும், தொகுதியிலுள்ள பிராமணர்களும், மற்றும் முஸ்லிம் வாக்காளர்களின் கணிசமான பகுதியினரும் சேர்ந்து, ஹண்டேயை ஜெயிக் கச் செய்து விடுவார்கள் என்று நம்பப் படுகிறது. எழும்பூர் தொகுதியிலும் தி.மு.க. ஜெயிப்பது சந்தேகம்தானாம்.

**து**றைமுகம் தொகுதியில் ஸ்பெஷலாய் ஒரு ரவுண்டு அடித்தோம். சென்ற தேர்த லில் தி. மு. க. எட்டாயிரம் வோட்டு வித்தி யாசத்தில் அ. தி. மு. க.வை வென்ற தொகுதி இது. இங்கே வேட்பாளர் கலைஞர் கருணாநிதி என்பதே, தி. மு. கழகத் தொண் டர்களைப் புது உற்சாகத்துடன் வேலை செய்ய வைத்துள்ளது. தொகுதியில் உள்ள சுவர்களில் 75 சதம் உதயசூரியன்தான் பிடித்துள்ளது. எதிர்த்துப் போட்டியிடும் 25 பேர்களில் துறைமுகம் காஜா (ஜா. அணி) தவிர, ஒருவருக்காவது டெபாசிட் கிடைக் குமா என்பது சந்தேகமே! காஜா, தொகுதி மக்களிடையே பிரபலமான, பிசினஸ் புள்ளி. துறைமுகம் பகுதியிலேயே வசிப் பவர். கடுமையாய் உழைக்கிறார். தொகுதி யிலுள்ள முஸ்லிம் வாக்காளர்களையும், சிற்சில பகுதிகளிலுள்ள த. மு. மு. வின் செல்வாக்கையும் நம்பியுள்ளார். "ஜெயிக் கிறேனா இல்லையா, பாருங்கள்!" என் கிறார்.

கலைஞர் இதுவரை மூன்று முறை தொகு திக்கு வந்து போய் விட்டார். தேர்தலுக்குள் இன்னும் இரண்டு தடவையாவது வருவார். கலைஞருக்காக, தேர்தல் பணிகளை முன் னின்று கவனிப்பவர், கலைஞருக்கு வேண்டப்பட்ட மோகன்தாஸ் என்பவர். தவிர, முரசொலி மாறன் தினமும் மாலை யில் வந்து கலைஞருக்காக வோட்டு கேட் கிறார். முரசொலி மாறன் வோட்டு சேகரிக் கத் தொகுதிக்கு வந்த போது, நாமும் உடன் சென்று பார்த்தோம். மக்கள் — குறிப்பாகப் பெண்கள், பூதாவி, ஆரத்தி எடுத்து, அவரை வரவேற்றதைப் பார்த்த போது துறைமுகத்தில் கலைஞருக்கு வெற்றி 'Cake Walk' என்றே தோன்றியது.

— நமது நிருபர்.

# நம்பினால் நம்புங்கள் ஜப்பானில் கூட கொசுக்கள் உள்ளன



கொசுக்கள் எங்கேயும் இருக்கின்றன. எப்பொழுதும் இருக்கின்றன. பழைய தலைமுறைக்கான கொசு விரட்டிகள் இந்த கொசுக்களை ஒழிக்க இனி ஒருபோதும் உதவப் போவதில்லை.

ஆனால் அதிர்ஷ்டவசமாய் கொசுக்களை ஒழிக்க ஒரு புதிய ஜப்பானிய வழிமுறை ஒன்றுள்ளது.

# SLEEP-WEL

**Made under Japanese Technique**

**CORDLESS MODEL ALSO AVAILABLE**

15, மேட்டுகள் இலவசம் ஒவ்வொரு ஸ்லீப்வெல் ஹீட்டருடன்

விநியோகஸ்தர்
சாய் எண்டர்பிரைசஸ்
13, பாலாஜி நகர் முதல் மாடி
இரண்டாவது தெரு,
ராயப்பேட்டை, சென்னை — 14,
தொ. பே.: 869924

தயாரிப்பாளர்:
ஸில்வர் ஸ்பார்க் பிரைவேட் லிமிடெட்,
108, கன்சன் ஹவுஸ்,
கரம்புரா,
நியூ தில்லி — 110 015.



# கோவை...

# தேர்தல் களத்தைச்



அரங்கநாயகம் — யாரும் ஸீரிய ஸாக எடுத்துக் கொள்ளவில்லை



நெசமம் நெப் போலியன்!



ஆறுமுகவேலு — தீவிர மாக வேலை செய் கிறார்.



ரமணி — அனுபவ சாலி.



பத்மாவதி — ஒரு பிளஸ்பாயிண்ட் உண்டு.



மோகன் கந்தசாமி— நம்பிக்கை + பெரு மிதம்.

**கோ**வை, கொடுத்து வைத்த நகரம் என்று சொல்லிவிடலாம் போல். தேர்தல் கூச்சல்களோ, கூட்டங்களோ, ஆரவாரங் களோ — ஏன், போஸ்டர்களோ, எதுவுமே இல்லாமல், வழக்கம் போல் அமைதியா கவே இருந்தது. சுவர்கள் கூட அதிகம் பாழ் படுத்தப்பட்டிருக்கவில்லை! (இந்த நிலை முதல் தேதி வாக்கில்...)

சிவகாசி மற்றும் சென்னை அச்சகங்களி லிருந்து சுவரொட்டிகள் எதுவும் வந்து சேரா தது ஒரு காரணம் என்றால், கடைசி நேரம் வரை யார் வேட்பாளர் என்று நிச்சயமில்லாத நிலை இன்னொரு காரணம் என்றார்கள். முதல் வாரத்தில் ஜானகி அம்மையாரும், ஜெயலலிதாவும் பிரசாரத்தில் இறங்குகி றார்கள், பிறகு சூடு பிடித்துவிடும் என்றார் கள். 'தேர்தல் முடியும் வரை சினிமா தியேட் டர்களில் அனுமதி இல்லாத சினிமா படங் களைத் திரையிடக் கூடாது; கட்சிகளின் விளம்பரப் படங்கள் மற்றும் பிரசாரப் படங் கள் காட்டக் கூடாது. இதை மீறினால் கடும் நடவடிக்கை எடுக்கப்படும்' என்று கோவை மாவட்டக் கலெக்டர் கோவிந்தன் ஓர் அறிக்கை வேறு வெளியிட்டிருக்கிறார்!

சரி; வேட்பாளர்கள் யார், யார், அவர் கள் பின்னணி, என்ன? மக்களிடம் இவர் கள் செல்வாக்கு எப்படி?

விசாரிக்கத் தொடங்கினோம்:

## கோவை மேற்கு:

அப்துல் ஜபார் (இ. கா. — முஸ்லிம் லீக்) அரசியலுக்குப் புதியவர். தொகுதிக்கும் புதியவர். அரங்கநாயகத்தை யாரும் ஸீரிய ஸாக எடுத்துக் கொள்ளவேயில்லை. ஜெ. அணியில் கர்தார் பெயர் அடிபட்டுக் கடைசியில் பாலசுப்பிரமணியம் நிறுத்தப் பட்டிருக்கிறார்.

தி. மு. க. வேட்பாளர் மு. ராமநாதனை நாங்கள் சந்தித்தபோது, மும்முரமாக முஸ்லிம் பகுதி ஒன்றில் வோட்டுக் கேட்டுக் கொண் டிருந்தார். கூடவே ஹாஜியாரும், பிற முஸ் லிம் சமுதாய மக்களும், தி. மு. க. தொண் டர்களும் இருந்தனர். "யாருக்கு உங்கள் வோட்டு?" என்று நம்மையே கேட்கச் சொன் னார்கள். கேட்ட இடத்தில் எல்லாம் வந்து பதில் "உதய சூரியனுக்கு... சூரியனுக்கு..."

ஒரு பெண்மணியிடம் 'ஏன் சூரியனுக்குப் போடுகிறீர்கள்?' என்று கேட்டோம். "இவர் நம்ம ஆளுங்க!" என்று அடித்துச் சொல்லி விட்டார். வேட்பாளர் ராமநாதனுக்குப் பெரு மிதம். சரிப்பட்டு வராத வாக்குறுதிகளை

# சுற்றிவந்த போது...

இவர் அளிப்பதில்லை. முன்பு சட்டமன்ற உறுப்பினராக இருந்தபோது ஆற்றிய பணிகள் தவிர, கார்ப்பரேஷன் கவனிக்க வேண்டிய பிரச்னைகள் சிலவற்றில் இவர் செலுத்தும் கவனம் இவருக்குக் கைகொடுக்கும் என்கிறார். ராமநாதனின் அடக்கம், உழைப்பு, பரவலான ஆதரவு எல்லாம் சேர்ந்து, இவர் வெற்றி வாய்ப்பைப் பிரகாசமாக்கியிருக்கின்றன. ராதிகா, கலைஞர் பிரசாரம் வேறு இருக்கவே இருக்கிறது!

இந்து முன்னணி ஆதரவோடு நிற்கும் வக்கீல் ரங்கராஜன் (பி.ஜே.பி) கொஞ்சம் வோட்டுக்களைப் பிரிப்பார் என்பதும் இங்கே அடிபடும் செய்தி!

**கோவை கிழக்கு:**

திருப்பூர் மணி மாறன் (ஜா) தொகுதி மாறி நிற்கிறார். அனுபவசாலியான கே. ரமணி (இடது கம்யூனிஸ்ட்) இருக்கிறார். ஆனால் ஈ. ராமகிருஷ்ணனுக்கே (இ. காங்.) வெற்றி வாய்ப்பு அதிகம். பழைய பத்திரிகையாளர்; இப்போது அமைச்சர் பிரபுவின் உதவியாளர். பணம் வேறு நிறையச் செலவழியும். காலை எட்டு மணிக்கே சுறுசுறுப்பாக வேலை தொடங்கிவிடுகிறார்கள், இவர் சார்பில்.

**சிங்காநல்லூர்:**

பழைய எம். பி. யான தி. மு. க. வேட்பாளர் இரா. மோகனுக்கும், ஐ. என். டி. யு. சி. மாநிலச் செயலர் பி. எல். சுப்பையாவுக்கும் வெற்றி வாய்ப்பு சமவிகித்தில் இருப்பதாகச் சொல்கிறார்கள்.

**பல்லடம்:**

மாவட்ட இளைஞர் காங்கிரஸ் தலைவரும் உள்ளூர்க்காரருமான சிவாஜி கந்தசாமிக்கே வெற்றி வாய்ப்பு அதிகம் என்று தெரிகிறது. இவரை எதிர்க்கும் இரண்டு பண முதலாளிகளுக்கும் (ஜெ — ஜா) ஒரு முன்னாள் அமைச்சருக்கும் (தி. மு. க.) அந்த அளவுக்கு ஆதரவு கிடைப்பது சந்தேகமே.

**அவிநாசி:**

இரண்டு முன்னாள் எம். பிக்களும் ஒரு முன்னாள் எம். எல். ஏ. யும் மும்முனைப் போட்டியில் இறங்கியிருக்கிறார்கள். தி.மு.க. சி. டி. தண்டபாணி வேலை சற்று மந்தம் என்று கருதப்படுகிறது. ஜெ. அணி அண்ணா நம்பிக்குத்தான் சான்ஸ் கூடுதல். என்றாலும் இ. காங்கிரஸுக்குப் பிடிப்புள்ள தொகுதி என்றும் கூறுகிறார்கள். எனவே பழனிச்சாமி நம்பிக்கையோடு இருக்கிறார்.

**பொங்கலூர்:**

இங்கு புகையிலைச் சாகுபடி அதிகம். அதனால் விவசாயத் தலைவர் செல்லமுத்து ஆதரவு பெற்ற பழனிச்சாமி (ஜெ. — கூட்டணி)க்கு வெற்றி வாய்ப்பு. லேடி காண்டிடேட் என்பதற்காக மட்டுமே கலைஞர், விஜயலட்சுமி பழனிச்சாமிக்கு இந்தத் தொகுதியைக் கொடுத்தாராம். யாரும் ஸீரியஸாக எடுத்துக் கொள்ளக் காணோம். ஆனால் இ. காங்கிரஸ் எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் இந்தத் தொகுதிக்காரர் என்பதோடு மாநிலத் துணைத் தலைவராகவும் இருப்பதால் இது எதிர்பார்க்கப்படுகிற ஸீட் என்கிறார்கள்.

**வால்பாறை:**

நரிக்கறிப் புகழ் தங்கவேலு (இ. காங்) பலமுறை உண்ணாவிரதம் அறிவித்தும் ஒரு முறைகூட இருந்ததில்லை என்கிறார்கள். தி. மு. க. சார்பில் நிற்கும் மிகப் பழைய எம். எல். ஏ. சண்முகம் மட்டுமே தொகுதிக்குச் சம்பந்தப்பட்டவர். வெற்றி வாய்ப்பும் பெற்றவர்.

**உடுமலைப்பேட்டை:**

தி. மு. க. சாதிக்பாட்சா, ஜெ அணி குழந்தைவேலு இருவருக்குமே ஓர் ஒற்றுமை, தொகுதிப் பக்கம் தலைகாட்டாதவர்கள் என்பது! இப்போது இருவருமே தீவிரமாக வேலை செய்கிறார்கள். கவுண்டர் வோட்டு முழுதும் பெற்று ராஜீவ் அலையும் உதவினால் பெரியவர் திருமலைசாமி கவுண்டர்



* மு. ராமநாதன் — மும்முரமான பிரசாரம்.

* கோவை போஸ்டர்!

— வெகு நாளைய எம். எல். ஏ. — ஜெயிக்கலாம்.

**பொள்ளாச்சி:**

ஜனதா அரசு, இந்திரா காந்தியைச் சிறையில் அடைத்ததை எதிர்த்து மறியல் செய்து ஒன்றரை மாதக் கைக்குழந்தையுடன் சிறைக்குப் போனார் என்பது பத்மாவதிக்கு ஒரு பிளஸ் பாயிண்ட். ஆனால் 'விலைவாசி குறைய இ. காங்கிரஸுக்கு வோட்டுப் போடுங்கள்' என்று இவர் பிரசாரம் செய்வதைப் பார்த்துப் பாமரரும் சிரிக்கிறார்கள். கோவை மாவட்ட வேட்பாளர்களிலேயே மிகக் குறைந்த வயதுடையவர் (29) தி. மு. க. பி. டி. பாலு. இவர் புதியவரானாலும் பத்மாவதிக்குக் கடுமையான போட்டி அளிக்கிறார். இன்னும் இரு பணம் படைத்தவர்கள் சிவாஜி அணியிலும் நெடுஞ்செழியன் அணியிலும் நிற்கிறார்கள். பணம் கரைவதுடன் சரி.

**கிணத்துக்கடவு:**

வேறு யார்? 'நெகமம் நெப்போலியன்' கந்தசாமிதான் இம்முறையும் ஜெயிப்பார் என்கிறார்கள். வேட்பு மனு தாக்கல் செய்த அன்றே தம்மை எதிரிகள் கத்தியால் குத்த வந்ததாகப் பரபரப்பு (ஸ்டண்ட்?) உருவாக்கியிருக்கிறார்!

**மேட்டுப்பாளையம்:**

தொழிலதிபர் கோபாலகிருஷ்ணனுக்கு (இ. காங்) தொழிலாளர் ஆதரவு முழுதும் கிட்டும் என்று பேசப்படுகிறது. ஜெ. அணியில் பாக்கியலட்சுமியின் மனு நிராகரிக்கப்பட்டு சீட்டுக்கே விண்ணப்பிக்காத பொள்ளாச்சி ஜெயராமனுக்குக் கொடுத்து விட்டார்கள் என்பதால் சசமுசு. இப்போது சமரசம் ஆகிவிட்டதாகக் கேள்வி.

**திருப்பூர்:**

இ. காங். வேட்பாளர் வக்கீல் கிருஷ்ணனுக்கும் பழைய கம்யூனிஸ்ட் எம். எல். ஏ. சுப்பராயனுக்கும்தான் கடுமையான போட்டி.

**தொண்டாமுத்தூர்:**

ஜானகி அணி சின்னராஜு பல காலமாக எம். எல். ஏ. ஆக இருந்தவர். என்றாலும் இந்தியன் கம்யூனிஸ்ட் கட்சி — இ. காங். கூட்டணியில் போட்டியிடும் சுவாமிநாதன் முன்னவரின் மறு வெற்றி வாய்ப்பைக் குறைப்பார் என்று கருதப்படுகிறது. காரணம் சுவாமிநாதன் தொழிலாளர் மத்தியில் பிரபலமானவர் என்பதோடு தொண்டாமுத்தூர் பஞ்சாயத்து யூனியன் காங்கிரஸ் வசம்தான் உள்ளது. மத்திய அமைச்சர் பிரபுவின் தொகுதியில் தொண்டாமுத்தூர் இருப்பதையும் சுட்டிக்காட்டுகிறார்கள்.

**பேரூர்:**

முன்னாள் எம். எல். ஏ. நடராஜனுக்கு (தி. மு. க.) ரொம்ப நல்ல பெயர். சென்றமுறை பிளவுபடாத அ. தி. மு. க.வைவிட இரண்டாயிரம் வோட்டு அதிகம் பெற்று வென்றவர். இ. காங் — இந்தியக் கம்யூனிஸ்ட் கூட்டணி வேட்பாளர் வக்கீல் ராதாகிருஷ்ணன் தொகுதிக்குச் சம்பந்தமில்லாதவர். மேலும் பொன் விஜயராகவனின் ஜனதா அணிக்கு ஜெ. இந்தத் தொகுதியைக் கொடுத்ததில் ஜெ அணி தொண்டர்கள் 'அப்செட்' ஆகியிருக்கிறார்கள்.

**கோ**வையில் இ. காங்கிரஸ் தேர்தல் அலுவலகங்களைக் கவனிக்கும் மோகன் கந்தசாமி தங்களுக்கு இருக்கும் ஆதரவைப் பெருமிதத்தோடு விவரித்துப் பிரசார திட்டங்களையும் கூறினார். ஆனால் இன்னொரு இ. காங்கிரஸ் புள்ளி, ''மாவட்ட காங்கிரஸ் சிபாரிசு எதுவுமே எடுபடவில்லை; மேல்மட்டத்தில், கோவை — நீலகிரியைப் பொறுத்தமட்டில் ஆதிக்கம் செலுத்தியவர் அமைச்சர் பிரபுதான். அவர் ஆதரவு வேட்பாளர்கள்தான் அதிகம்'' என்று குறைப்பட்டுக் கொண்டார்.

பதினைந்து தொகுதிகளையும் ஒரே தம்மில் சுற்றிப் பார்த்துத் திரும்பியதில் ஏற்பட்ட எண்ணம்: எதிர்பாராதவிதமாக ராஜீவ் அலை பொங்கிப் பிரவகித்தாலொழிய கோவை மாவட்டத்தில் அதிக இடங்கள் தி. மு. க. வுக்கே!

— **நமது நிருபர்.**

புகைப்படங்கள்: **யோகா, திருப்பூர்**
**ஸ்ரீ சங்கர் ஸ்டுடியோ.**

# 'கல்கி' வாசகர்களுக்கு லிப்கோவின் பொங்கல் நல்வாழ்த்துக்கள்!

## லிப்கோவின் மகத்தான வெளியீடு!

கீர்த்தனாசார்ய **ஸ்ரீ உ.வே. C.R. ஸ்ரீநிவாஸய்யங்கார்** அவர்களின்



# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

தமிழ் வசனம் ★ ஐந்தாம் பதிப்பு
பால காண்டம் முதல் யுத்த காண்டம் முடிய
இரண்டு பாகங்களில் மொத்தம் 1800 பக்கங்கள்

**2 பாகங்களும் சேர்ந்து ப்ளாஸ்டிக் உறையுடன் ரூ. 125**

ஸ்ரீராம நவமியை முன்னிட்டு 15-4-1989 முடிய சலுகை விலை ரூ. 110
தபாலில் பெற விரும்புவோர் ரூ. 123-50 (M.O. அல்லது டிராப்ட்) அனுப்புக.

| | | |
|---|---|---|
| 1. | ஸுந்தர காண்டம் (ஸம்ஸ்க்ருத மூலம்) | ரூ. 14-00 |
| 2. | ஸுந்தர காண்டம் (தமிழில் மூலம்) | ரூ. 14-00 |
| 3. | ஸ்ரீராம ஸ்தோத்ரமாலா | ரூ. 6-00 |
| 4. | ரகுவம்ச மஹாகாவ்யம் | ரூ. 55-00 |
| 5. | கம்ப ராமாயணம் (வசனம்) | ரூ. 15-00 |
| 6. | ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் ஸ்ரீமத் திராவிட வேதங்களும் (ஸ்தோத்ரமாலையுடன்) | ரூ. 16-00 |
| 7. | தசாபுக்திகளும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் - தசை ஒவ்வொன்றும் | ரூ. 2-00 |
| 8. | ஸ்ரீ ராம ஸஹஸ்ரநாமம் | ரூ. 1-50 |
| 9. | ஸ்ரீ ஆஞ்சநேய ஸஹஸ்ரநாமம் | ரூ. 1-50 |
| 10. | ஸ்ரீமத் ராமாயண பாராயண வகைகளும் முறைகளும், ஸ்ரீ ராமபூஜா மந்த்ராநுஷ்டான க்ரமமும் | ரூ. 2-00 |
| 11. | ஸ்ரீ ரகுவீர கத்யம் (ஸம்ஸ்க்ருத, தமிழ் மூலம்) | ரூ. 0-60 |
| 12. | இக்ஷ்வாகு குலதனம் என்னும் ஸ்ரீரங்க மாஹாத்ம்யம் | ரூ. 8-00 |
| 13. | Smd. Ramayanam & All-Round Success (Skt. & Eng.) | Rs. 9-00 |
| 14. | Sangraha Sri Valmiki Vachana Ramayanam | Re. 1-25 |

தபால் செலவு ப்ரத்யேகம்.
இலவச முழு விலைப் பட்டியலுக்கு எழுதுக.

**THE LITTLE FLOWER CO.,**

போன்: 441538 P.B.NO. 1028, T.NAGAR, MADRAS-600 017. 60-ஆம் ஆண்டு!

**வளம் தரும் நூல்களுக்கு வாருங்கள் லிப்கோவிற்கு!**

## நீங்கள் கேட்டவை — தராசு

* எல். மாறன், மேல்பட்டி.

**? "குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரும் தனித்தனி கட்சிக்கு வாக்களிக்க வேண்டும்" என்று முன்பு உதயமூர்த்தி சொன்னதைக் 'குழப்புகிறார்' என்றார் தராசு. இப்போது, 'தேர்தலில் வாக்காளருக்கு அறிவுரை என்ன?' என்ற கேள்விக்கு, "உதயமூர்த்தி கட்டுரையைப் படியுங்கள்" என்கிறார்! எதற்காகத் தராசு இப்படிக் குழப்புகிறார்?**

! இதில் எனக்கு எவ்விதக் குழப்பமும் இல்லை. முன்பு 'குடும்பத்தில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கட்சிக்கு வாக்களிக்க வேண்டும்' என்று உதயமூர்த்தி கூறிய கருத்தை நான் சரியானது என்று கருதவில்லை. அதனால் 'குழப்புகிறார்' என்று பதிலளித்தேன். தற்போது — 1.1.89 கல்கி இதழில் உதயமூர்த்தி வெளியிட்டுள்ள யோசனை சிறப்பானது. அதனால் வரவேற்கிறேன். ஆனால் இதுவும் லட்சிய நோக்கில் தான் சரி என்பதையும் மக்கள் இந்த யோசனையை ஏற்று அமுல்படுத்தக் கூடிய அளவுக்குக் கல்வி அறிவோ மனப்பக்குவமோ இன்னும் பெறவில்லை என்பதையும் எடுத்துக் காட்டியிருக்கிறேன். ஒருவரை ஒரு

# பாக்யராஜின் புதுக்கட்சி தாக்குப்பிடிக்குமா?

முறை தாக்கி விட்டால் சாகும் வரை அவர் கூறுவது எதையுமே ஏற்காமல் தாக்கிக் கொண்டே இருக்க வேண்டுமா என்ன!

* கே. எஸ். குமார், மதுரை.

**? வானொலி, ட. வி. ஆகியவற்றில் செய்திகள் என்பதற்குப் பதில் 'இ. காங்கிரஸ் பிரசாரம்' என்று பெயர் மாற்றம் செய்து விடலாமே!**

! அதைவிட 'இ. காங்கிரஸ் ஓ. சி. விளம்பரம்' என்பது பொருத்தமாயிருக்கும்.

* செல்வன்ஜி, திருச்சி.

**? பாக்யராஜ் புதுக்கட்சி ஆரம்பிக்கிறாரே? தாக்குப் பிடிப்பாரா?**

! எதையும் தாங்கும் இதயம் படைத்த தமிழ் மக்கள் இதையும் தாங்கிக் கொள்வார்கள்! எனவே, அவரும் தாக்குப் பிடிக்க முடியும்.

* ஆர். அப்துல்சலாம், திருச்சி.

**? தேர்தல் சின்னங்களான புறா, சேவல்**



• "ஐயகோ! தமிழா!"



• '...ஈ' வின் தந்திரம்.....



• .....விருந்துக்கு வருகிறாள்.





• ஆட்சியின் சாதனை....



• புதுக்கட்சி

**ஆகியவற்றைச் சித்திரவதை செய்கிறார்களே?**

! இதைத் தடுக்காத தலைவர்கள் பதவிக்கு வந்தால் நாளை உங்களையும் என்னையும் என்ன பாடுபடுத்தப் போகிறார்களோ!

* **எஸ். திருமலை, கோவை.**

**? 'அக்ரஹாரத்தில் கழுதை' படத்தை ட. வி. யில் ஒளிபரப்பினால் பிராமணர் வோட்டு இ. காங்கிரஸுக்கு விழாது என்பதால்தான் திரையிடவில்லையாமே?**

! மூடப் பழக்கங்களைக் கிண்டல் செய்வதற்காக எடுக்கப்பட்ட படமாம். மூடப் பழக்கம் என்பது எல்லா ஜாதிகளிலும் எல்லா மதத்தவரிடமும் உண்டு. பிராமணர்களை மட்டும் கேலி செய்து, அதையும் அபத்தமாகவும் அநாகரிகமாகவும் படம் எடுத்தது தவறு. அதற்குப் பரிசு கொடுத்தது அதைவிடப் பெரிய தவறு. அதை ட. வி. யில் காட்டுகிறேன் என்றது மூன்றாவது மாபெரும் தவறு. நல்லவேளை, சில பத்திரிகைகள் அந்தக் கதையை வெளியிட, எதிர்ப்புக் கிளம்பி, அரசு வாபஸ் பெற்றது. தேர்தல் இல்லாமல் இருந்திருந்தால் வாபஸ் பெற்றிருக்க மாட்டார்கள் என்று கருத இடம் இருக்கிறது. நான்காவது இமாலயத் தவறு (எதிர்ப்பை மதிக்காமல் உதாசீனம் செய்வது) நிகழ்ந்திருக்கும்.

* **மணிகண்டபிரபு, போடிநாயக்கனூர்.**

**? கிட்டத்தட்ட ஓராண்டு காலமாக நடைபெறும் கவர்னர் ஆட்சி சாதித்தது என்ன?**

! காங்கிரஸுக்குத் தனியாகப் போட்டியிடும் அளவுக்குத் துணிச்சலை அளித்திருப்பதுதான்.

* **ப. சுகுமார் ராஜ், தூத்துக்குடி.**

**? ஜெயலலிதா — நிர்மலா காம்பினேஷன் எப்படி?**

! காம்பினேஷனாவது? கதையையே மாற்றி விட்டீரே ஐயா! ஒருவரை ஒருவர் எதிர்க்கிறார்கள் சார்! எதிர்க்கிறார்கள்! அது போக, ஜெயைத் தொகுதியிலேயே மடக்கிப் போட ஜா செய்த ரசிக்கக் கூடிய இந்தத் தந்திரம், தேர்தல் சாப்பாட்டில் தொட்டுக் கொள்ள ஊறுகாய்.

* **சம்பத், வேலாயுதம்பாளையம்.**

**? அடுத்த பிறவி நிஜமெனில் யாராகப் பிறக்க விரும்புகிறீர்கள்?**

! கடந்த பிறவி, இப்பிறவி, அடுத்த பிறவி இவற்றில் நம்பிக்கை உள்ளவனாக நான் இருப்பேனேயானால் பிறவா வரம் ஒன்று இருப்பதையும் நம்பி, அதைத்தான் வேண்டிப் பிரார்த்திப்பேன்.

* **அ. கிருஷ்ணமூர்த்தி, நரிப்பாளையம். ***

**? இந்தப் பொதுத் தேர்தலின் முடிவு தங்கள் கட்சிக்குத் தோல்வியைத் தருமானால் மூப்பனார், கருணாநிதி, ஜெயலலிதா, ஜானகி, சிவாஜி ஆகியோரின் அறிக்கைகள் எவ்வாறு இருக்கும்?**

! மூப்பனார்: ''தேசிய நீரோட்டத்தில் சேரத் தமிழருக்கு ஏன் இன்னும் தயக்கம் என்று புரியவில்லை.'' கருணாநிதி: ''முந்தைய தேர்தலை விட இந்தத் தேர்தலில் கழகத்துக்கு அதிக வோட்டுக்கள் கிடைத்திருப்பதை, உடன் பிறப்பே, உன் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன்!'' ஜெயலலிதா: ''இது கருணாநிதியின் சதி!'' ஜானகி: (கண்ணீருடன்) ''புரட்சித் தலைவரை மட்டுமின்றிப் புறாக்களையும் மறந்து விட்டீர்கள்!'' சிவாஜி: ''ஐயகோ! தமிழா! இந்தச் சிங்கத் தமிழனை இன்னுமா நீ புரிந்து கொள்ளவில்லை!''

* **ராஜகோபால், தாம்பரம்.**

**? புத்தாண்டுக்கு டயரி வேட்டை ஆடுவதுண்டா?**

! தன்மானத்தை விட்டு, 'கெஞ்சிக் கூத்தாடியேனும் இந்த டயரியைப் பெற்றுவிட வேண்டும்' என்று எண்ண வைத்தது நேரு நூற்றாண்டு கமிட்டி வெளியிட்டுள்ள நேரு டயரி. அவருடைய வாழ்க்கையின் முக்கிய நிகழ்ச்சிகளின் மகத்தான புகைப்படங்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றைப் பார்க்கும் போது மெய்சிலிர்ப்பு ஏற்படுகிறது. எவ்வளவு கஷ்டப்பட்டுக் கிடைத்த சுதந்திரம்? இந்த நாட்டை வளப்படுத்தி உன்னத நிலைக்குக் கொண்டு வர மீண்டும் அத்தகைய ஒரு லட்சிய நோக்கு எப்போது, யாரிடமிருந்து பிறந்து மக்களிடையே உருவப் போகிறது என்ற ஏக்கமே பிறந்து விடுகிறது. இந்த டயரியில் ஒரே ஒரு குறை: எழுதவே மனம் வராது!

* **பாக்யமுத்து, திருச்சி — 20.**

**? தமிழக சட்டமன்றத் தேர்தலில் பன்னிரண்டு எம். பிக்கள் போட்டியிடுவது குறித்து...?**

! தாங்கள் ஜெயித்து, தங்கள் கட்சியும் பதவிக்கு வந்தால் மந்திரி பதவி. இல்லையென்றால் இருக்கவே இருக்கிறது எம். பி. பதவி.

* **ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**அ. கிருஷ்ணமூர்த்தி,**
**நரிப்பாளையம்,**
**— 607 201.**



# கல்கி

1989 ஜனவரி 15
மலர் 47 இதழ் 24
விபவ தை 2



## யாருக்கு வோட்டு? வாக்காளரின் கடமை என்ன?

தேர்தல் நெருங்க, நெருங்க, யாருக்கு வோட்டுப் போட வேண்டும், யாருக்குப் போடக் கூடாது என்பது குறித்து ஏகப்பட்ட அறிவுரைகள் மக்களுக்கு வழங்கப்படுகின்றன. 'நல்லவருக்கு வோட்டுப் போடுங்கள்' என்று கூறிச் சிலர் வேட்பாளருக்கு இருக்க வேண்டிய தகுதிகளைப் பட்டியலிடுகின்றனர். இந்தப் பட்டியலுக்கு ஏற்ப ஒரு வேட்பாளரைத் தமிழகம் முழுதும் தேடினாலும் அகப்பட மாட்டார். 'சினிமா நட்சத்திரங்களுக்கு வோட்டுப் போடாதீர்கள்' என்று ஓர் உபதேசம். ஏதோ சினிமாவில் சேராத அரசியல் வாதிகளெல்லாம் ஒழுக்கசீலர்களாக இருப்பது போலவும், சினிமா நட்சத்திரங்கள்தாம் மோசமானவர்கள் போலவும் தொனிக்கும் இந்த யோசனையிலும் சாரமில்லை. 'கட்சிக் கண்ணோட்டத்தில் வோட்டுப் போட்டாலும் ஊழல் தலைவர்களைத் தோற்கடியுங்கள்; புதிய தலைமை உருவாகட்டும்' என்ற யோசனை உதயமூர்த்தி வழங்குவது.(கல்கி 1.1.89) 'ஊழல் தலைவர் தோற்கடிக்கப்பட்டாலும் ஆட்சிக்கு வெளியே இருந்து ஆள மாட்டாரா? மேலவை மூலம் ஆட்சிக்குள் புகமாட்டாரா? துணைத் தேர்தலில் வென்று வர மாட்டாரா?' என்றெல்லாம் கேட்கப்படலாம். என்றாலும் தேர்தலில் தோற்ற தலைவர் செல்வாக்கு இழப்பார் என்பதும், புதிய தலைமை, வாக்காளரின் சக்தி கண்டு அஞ்சும் என்பதும் உண்மை. எனவே இது நல்ல யோசனைதான். ஆனால் நமது வாக்காளர்கள் இந்த அளவுக்கு இன்னும் மனப்பக்குவமோ கல்வி அறிவோ பெறவில்லை. அவர்களில் மிகப் பெரும்பான்மையினர் இன்னமும் தலைவரைப் போற்றித்தான் கட்சிக்கு — அவரது சின்னத்துக்கு — வாக்களிக்கிறார்கள். சிந்தித்து, கொள்கைகளைப் புரிந்து கொண்டு அல்ல. எனவே, 'தேர்தல் அறிக்கைகளைப் படித்துப் பார்த்து அந்த அடிப்படையில் ஒரு கட்சிக்கு வோட்டளியுங்கள்' என்று வாக்காளரைக் கோருவதும் அபத்தமாகிறது. மேலும் தேர்தல் நேரத்தில் அள்ளி வீசப்படும் வாக்குறுதிகள் நிறைவேற்றப்பட வேண்டும் என்று சட்டமில்லை. அத்தகைய சட்டம் இயற்றுவது சாத்தியமில்லை. அது வேறு பல சிக்கல்களைத் தோற்றுவிக்கும். மக்களிடையே கல்வி அறிவும் பொது அறிவும் வளர்வதுதான் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு. அது உடனடியாக நடக்கக் கூடியது அல்ல. இன்று வாக்காளர்கள் செய்யக் கூடியது, செய்ய வேண்டியது என்ன? அதைக் கவனிப்போம்.

ஜனாதிபதி ஆட்சியை நீடிக்கச் செய்யக் கூடாது; மக்கள் ஆட்சியை மலரச் செய்ய வேண்டும் — இதுதான் இன்று வாக்காளர் கடமை. ஜனாதிபதி ஆட்சி நீடிப்பது ஜனநாயகத்தை அர்த்தமற்றதாக்கும் என்பதுடன் அதிகார வர்க்கத்தின் ஆணவம் அதிகரிக்க வழிவகுக்கும். மக்கள் ஆட்சி மலர்வது எனில் ஏதேனும் ஒரு கட்சி நிலையான ஆட்சி அமைக்க வாக்காளர் வழிவகுக்க வேண்டும். பெரும்பான்மை பலத்துடன் அக்கட்சியைச் சட்டசபைக்கு அனுப்ப வேண்டும். கூட்டணி ஆட்சிக்கு இடமளிப்பது போல் வாக்காளர் நடந்து கொண்டால், அந்த ஆட்சியின் ஆரம்பமே விலை பேசுவதில் — பேரத்தில் — ஏலத்தில் தொடங்கும். அத்தகைய ஆட்சி உருப்படுமா? சில காலம் சென்று மீண்டும் பொதுத் தேர்தல் எனில் என்ன செலவு! வரிப்பணம் எத்தனை விரயம்! எனவே ஒரு கட்சிக்கு ஆட்சி அமைக்க வசதியான பெரும்பான்மை தருவதும் மற்றொரு கட்சிக்குச் சக்தி வாய்ந்த எதிர்க்கட்சியாகச் செயல்படும் அளவுக்குச் சட்டசபையில் போதிய இடங்களை அளிப்பதும் வாக்காளரின் கடமையாகிறது. அந்த இரு கட்சிகள் எவை என்று தீர்மானிக்குமுன் எவை அல்ல என்று ஒதுக்குவது சுலபம்.

எம். ஜி. ஆர். மறைவுக்குப் பின் கோடிக்கணக்கான ரூபாய் ஊழல்களை அம்பலப்படுத்திக் கொண்டு, ஒருவரை ஒருவர் ஆபாசமாகத் திட்டிக் கொண்டு, கொள்கையின்றி நான்கைந்து பிரிவுகளாகப் பிளவுபட்டுக் கிடக்கும் அ. தி. மு. க. அணிகளை நிச்சயமாகவும் சுலபமாகவும் ஒதுக்கி விடலாம். ஜனநாயகத்தில் சொத்துக்குத்தான் வாரிசு உரிமை உண்டே தவிர, ஆட்சிக்கு அல்ல. இவர்களில் யாரையுமே தமது வாரிசாக எம். ஜி. ஆர். கருதவில்லை என்பதையும் எம். ஜி. ஆரின் நடவடிக்கைகளைக் கவனித்து வந்துள்ள அனைவரும் அறிவர். 'எரிகிற வீட்டில் அகப்பட்டதைப் பிடுங்கலாம்' என்று செயல்படும் இந்தச் சுயநலமிகளை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால் எஞ்சி இருப்பவை முக்கியமாக இரண்டு கட்சிகளே. ஒன்று காங்கிரஸ்; மற்றது தி. மு. க.

இவ்விரண்டில் எதனை நிலையான ஆட்சி அமைக்கச் செய்வது, எதனை பலமான எதிர்க்கட்சியாக விளங்கச் செய்வது? இதைத்தான் இன்று தமிழக மக்கள் தீர்மானிக்க வேண்டும். வன்முறையின்றி, விவேகத்துடன், வாக்குரிமையை விற்காமல், வீணாக்காமல் செயல்படுவோம்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

நான்

புதிய காமதேனு

கூட்டுறவுச் சிறப்பங்காடியிலேயே

எல்லாப் பொருட்களையும்

வாங்குகிறேன். ஏன் தெரியுமா?

ஒன்றா...இரண்டா!

## 12 காரணங்கள் உண்டு!

1. தரமான பொருட்கள் கிடைக்கும்.
2. பொருட்கள் ஒழுங்காகவும் கவர்ச்சியாகவும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. பொருட்களை எளிதில் தேர்ந்தெடுக்கலாம்.
3. பொருட்கள் சரியான எடை, அளவில் உள்ளன. பணத்துக்கேற்ற பொருள் கிடைக்கும்.
4. நியாயமான விலை—பேரத்திற்கு இடமே இல்லை.
5. விரைவில் நவீன முறையில் பட்டியல் தயாரிக்கும் கருவிகள் உண்டு.
6. எப்போதும் தேவையான பொருட்கள் தயாராக இருப்பில் உண்டு.
7. புதிய காய் கனிகளும் கிடைக்கும்.
8. வாகனங்களை வசதியாக நிறுத்தலாம்.
9. சுவையான தின்பண்டங்கள் ஏராளம்.
10. காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி—ஆதரிக்க வேண்டியது: இது ஒருவருக்கொருவர் நன்மையடையும் முயற்சியும் கூட
11. நிரந்தர வைப்பு 6 மாதத்திற்கு மேல் 12%மாதாந்திர வட்டி வழங்கப்படுகிறது.
12. Mercard, Cancard, Andhra Card, Vijaya Bank Card போன்ற Credit Cardகளையும் அனுமதித்து தரமான பொருட்களை வழங்குகிறார்கள்

# புதிய காமதேனு
## கூட்டுறவுச் சிறப்பங்காடி

தேனாம்பேட்டை சென்னை - 18. ஞாயிற்றுக்கிழமை விடுமுறை

கிளைகள்: பெஸன்ட் நகர், அசோக்நகர், பழைய காமதேனு, திருவல்லிக்கேணி நுங்கம்பாக்கம் (குளிர்சாதன வசதியுடன்) ராஜா அண்ணா மலைபுரம், திருவான்மியூர், மற்றும் ரெடிமணி (குளிர்சாதன வசதியுடன்)

# சுட்டிப் பூனை

உங்களால் கவிதையை ரசிக்க முடியுமா? இயற்கை எழிலைப் பாராட்ட முடியுமா? உங்களுக்கு வாயில்லா ஜீவன்களிடம் பிரியம் சுரக்குமா? விளையாட்டை ரசிக்கிற குழந்தை மனசு உண்டா? அப்படியானால் ம ட் டு ம் ஜப்பானிலிருந்து இறக்குமதியான சுட்டிப் பூனையை எட்டிப் பார்க்கப் போகலாம்.

குட்டியாய் இருக்கும் போது ஒரு பூனையைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்ட காமெரா, அந்தக் குட்டி வளர்ந்து நாலு குட்டிகளுக்குத் தகப்பன் ஆகிற வரை தொட்டுக் கொண்டே போயிருப்பதைக் காணப் பிரமிக்காமல் இருக்க முடியவில்லை. இதே ரீதியில் இதற்குத் தோழனாக வரும் நாய்க்குட்டி வேறு! சதா ஒரு சோக மூஞ்சியுடன் காட்சி தரும் புல்டாக் ஜாதி.

"உங்களுக்கெல்லாம் அறிமுகம் பண்ணி வைக்கிறேன் சத்ரனை" என்று ஏழெட்டு



வாண்டுகளுடன் தோன்றும் ஷாலினிதான் ஏதோ ஒட்ட வைத்திருப்பதால் — மனித முகம் தெரியும் காட்சியாய்த் தெரிகிறதே தவிர, படம் முழுவதிலும் அசதி மறதியாய்க் கூட ஆறறிவு முகம் ஏதும் தட்டுப்படவில்லை.

சுட்டிப்பூனை தன் தோழன் நாய்க் குட்டியுடன் ஒளிகிற விளையாட்டு விளையாடிக் கொண்டே வந்து ஆற்றோரமாய் இருந்த ஒரு மரப்பெட்டிக்குள் — ஏதோ பார்சல் வந்த பிளைவுட் பெட்டி போலிருக்கிறது — பதுங்கிக் கொள்ள, அது திடுதிப்பென்று ஆற்றோடு போக, அப்புறம் ஆரம்பமாகிறது பாருங்கள் ஒரு நெடும் பயணம்! கரையோரமிருந்து அதைப் பார்த்துவிட்ட நாய்க்குட்டி, ஆற்றுக்குள்ளும் இறங்க முடியாமல், நண்பனை விட்டுப் பிரியவும் மனமில்லாமல் கரையோரமாகவே குரைத்துக் கொண்டு அந்தப் பெட்டியைத் தொடரும் உருக்கம்! நடுவிலே கரடி வில்லன் ஒன்று குறுக்கிட, அத்துடன் நாய்க்குட்டி ஆவேசமாய் மோத, அத்தனை பெரிய ஜீவன் அதனைப் போட்டு நசுக்கிய கொடுமையில் நாய்க்குட்டி திசை மாறிப் போக —

ஐயோ! அந்த ஆற்றோடு போன பெட்டி நீர் வீழ்ச்சியை நோக்கி நகர... நம்ம சத்ரனுக்கு என்ன ஆச்சு? பெட்டி உருண்டு நிமிரும் போது சத்ரன் அதற்குள்ளிருந்து எட்டிப் பார்க்கும் போது மனசுக்கு எத்தனை நிம்மதி! ஏதோ ஒரு தட்டு முட்டுப் பகுதியில் பெட்டி மாட்டிக்கொண்டு நிற்க, ஒருவழியாய் அதிலிருந்து வெளிவந்து கரையேற —

அந்த வெள்ளைப் பூக்காட்டிலே துள்ளியோடும் புள்ளிமான். அதற்குச் சரியாய்



அதே போல் துள்ளிப் பாய்ந்து அதனுடன் சினேகம் பண்ணிக் கொண்டு அதனுடைய அணைப்பிலே இதம் கண்டு இரண்டு ஜீவன்களும் உறங்கும் நேர்த்தி — அன்பின் சங்கமம்!

தன் தோழன் நாய்க்குட்டியை ஒருவழியாய்ச் சந்தித்ததும் — பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ — அந்தச் சந்தோஷத்தை இரண்டும் ஓடியாடி விளையாடும் உற்சாகம் நம்மையும் தொற்றிக் கொள்கிறது. அந்தக் கொண்டாட்டத்தில் மாட்டு மந்தைக்குள் அதுகள் புகுந்துவிட, ஆ வே ச மாடொன்று துரத்த.....

இப்படியே மேலும் சில ஆபத்துக்கள் — பரிதவிப்புகள் — வெற்றிகள் என்று தொடர்கிறது படம். சில ஆபத்துக்களிலிருந்து தப்புகிற விதம், பயிற்சியளித்த செயற்கைத்தனமாய்த் தெரிகிறது. இருந்தாலும் ரசிக்க முடிகிறது.

படத்தை ரசிக்கக் கொஞ்சம் கலையுணர்வு வேண்டும். அது இல்லாத சிலர் நடுவில் எழுந்து போவதைக் காணப் பரிதாபமாய் இருக்கிறது.

— பி. எஸ். எஸ்.

Phone : 3360




# THE MAYAVARAM FINANCIAL CHIT CORPORATION LIMITED

(Incorporated under the Indian Companies Act, 1913)

Regd. Office : 13-H, Cutchery Road,

Admn. Office : 13-A1, Cutchery Road,

MAYILADUTURAI-609 001. Tamil Nadu

## Schedule of Progress Achieved for Previous 5 years (1984-1988)

| Particulars | Year ended (31-3-84) 1984 Rs. | Year ended (31-3-85) 1985 Rs. | Year ended (31-3-86) 1986 Rs. | Year ended (31-3-87) 1987 Rs. | Year ended (31-3-88) 1988 Rs. |
|---|---|---|---|---|---|
| Paid-up Capital | 2,25,000 | 2,25,000 | 2,64,000 | 3,05,000 | 3,05,000 |
| Reserves | 4,81,740 | 5,13,740 | 5,94,740 | 7,42,240 | 9,46,762 |
| Business Secured | 26,03,70,000 | 27,01,80,000 | 33,23,80,000 | 43,64,50,000 | 49,69,40,000 |
| Gross Income | 24,37,895 | 25,11,790 | 27,04,767 | 34,39,418 | 40,23,534 |
| Net Profit before Taxation | 2,34,901 | 2,78,174 | 3,25,382 | 4,08,728 | 6,14,862 |
| Chit Dividend distributed | 1,04,25,513 | 99,70,337 | 1,16,30,354 | 1,62,33,131 | 1,92,17,018 |
| Percentage of Dividend to individual Chits | 36% | 35% | 37% | 42% | 30% |
| Number of Share holders | 432 | 432 | 440 | 446 | 447 |
| Percentage of Share Dividend declared | 16% | 16% | 18% | 18% | 18% |

(Figures rounded-up to the nearest Rupee)

Mayiladuturai
31-12-1988



* ஸி. ஆர். — ''பாரத ரத்னா''

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VI
ராஜ்மோகன் காந்தி

எழுதி முடித்துவிட்டேன். சீதையிடம் போர்க்களத்தில் அநாகரிகமாக நடந்து கொண்ட ராமனை ஒருவழியாக அயோத்திக்கு அனுப்பி வைத்து விட்டேன்.''

தமிழ்த் தொடர் முடிந்த பிறகும் ஓராண்டுக்கு ஆங்கிலத் தொடர் வந்து கொண்டிருந்தது. மலிவுப் பதிப்பாக ராஜாஜியின் ராமாயணமும் அதற்கு முன்னர் அவர் கல்கியில் எழுதியிருந்த மகாபாரதமும் வரலாறு காணாத அளவில் விற்பனையாயின.

# ராமாயணம் எழுதிய 'பாரத ரத்னா'

(1)

நுரையீரலைப் பாதித்திருந்த நிமோனியா நோய் ஆன்டிபயாடிக் மருந்துக்குப் பணிந்து விட, இனி தாம் என்ன செய்ய வேண்டும் என்று தீர்மானிப்பது ஸி. ஆருக்குக் கஷ்டமாகவேயில்லை. மாகாண முதல்வர் பதவியை வகிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதன் காரணமாக ஒத்திப் போட்டிருந்த ஒரு பணியை மேற்கொண்டார். அது, ராமாயணத்தைத் தமிழில் எழுதுவது என்பதுதான். வெகு சீக்கிரமே வால்மீகியின் ராமாயணம் அவரை முழுமையாக ஆட்கொண்டது. அவரது அறிவுக் கூர்மைக்கு நல்ல பயிற்சியாக அமைந்து, மனசுக்கும் உற்சாகமளித்தது. கல்கியில் வாரா வாரம் ராமாயணக் கதையை மிக எளிய நடையில் எழுதி வந்தார். வெகு சீக்கிரமே ''ஸண்டே ஸ்டாண்டர்ட்'' பத்திரிகை அதனை ஆங்கிலத்திலும் தொடர்ந்து வெளியிட ஆரம்பித்தது. ஸி. ஆருக்கு இந்தப் பணி மிகவும் பிடித்திருந்தது. அவரது வாசகர்களோ, அவருடைய எளிய, மனப்பூர்வமான நடையை விரும்பி வரவேற்றார்கள். ஆங்கில வடிவத்துக்கு ராமராவின் உதவியை ஸி. ஆர். ஏற்றுக் கொண்டார். ஆனால் பிரதானமான பணி ஸி. ஆருடையதாகத்தான் இருந்தது. சில இடங்களில் மட்டும், 'வால்மீகி எந்த அர்த்தத்தில் இப்படிச் சொல்கிறார்?' என்று விளங்காமல் அவர்கள் போராடினார்கள். மற்றபடி வால்மீகி அவர்களைப் பிரமிப்பில் ஆழ்த்தினார். ஆயினும் சீதையிடம் அன்பில்லாமல் இராமர் கடைசியாக நடந்து கொண்டதை ஸி. ஆரால் மன்னிக்க முடியவில்லை. பதினெட்டு மாதங்கள் உழைத்த பிறகு ஸி. ஆர். பெங்களூரில் இருந்த தமது நண்பர் ராமராவுக்கு எழுதினார்: ''வால்மீகி ராமாயணம் தமிழ் வடிவத்தின் கடைசி அத்தியாயத்தை நேற்று

அவர் விழித்திருந்த நேரமெல்லாம் ராமாயணம் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தார். இதனால் அவர் பொது வாழ்விலிருந்து ஓய்வு பெற்று விட்டதாகவே பலர் எண்ணினர். ஒருவேளை இந்த நம்பிக்கையின் அடிப்படையில்தான் அவருக்கு ''பாரத ரத்னா'' பட்டம் வழங்கப்பட்டதோ என்னவோ, தெரியாது! ஆனால் பாரத ரத்னா வழங்கியதானது, 'அவர் ஓய்வு பெற்று விட்டார்' என்ற நம்பிக்கை வளரக் காரணமாயிருந்தது. முதல் அமைச்சர் பதவியிலிருந்து அவர் ராஜினாமா செய்து நான்கு மாதங்களுக்குப் பிறகு, 1954 ஆகஸ்டு 15—ஆம் தேதி அந்த அறிவிப்பு வந்தது: 'சுதந்திர இந்தியாவின் மிக உன்னதமான பாரத ரத்னா பட்டத்தை முதன் முதலாகப் பெறப் போகிறவர்: ராஜாஜி.' ஆனால் குடியரசுத் தலைவர் ராஜேந்திர பிரசாத் அதனை வழங்கியது 1955 ஜனவரி 26—இல்தான். சாமானியரிடமிருந்தும், மிகப் பெரிய மனிதர்களிடமிருந்தும் கடிதங்களும் தந்திகளும் வந்து குவிந்தன. இத்தகைய ஒரு பெரிய கௌரவம் அவரது வாழ்க்கைப் பணி முடிந்து விட்டதை உணர்த்துவது போல்தான் அமைந்திருந்



* மோனிகா ஃபெல்டன்: ''தூண்டுகோல்



ந்தது. ஸி. ஆரும் தமக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியையும் நெகிழ்ச்சியையும் ஒளிக்காமல் வெளியிட்டார்: "எனது நண்பர்களும் சகாக்களும் எனக்கு அன்புடன் வழங்கியுள்ள இந்தக் கௌரவத்தைக் கண்டு எனக்கு மகிழ்ச்சி ஏற்படாதது போல் என்னால் நடிக்க முடியாது" என்று அவர் இட்டக் கமிஷன் துணைத் தலைவர் வி. டி. கிருஷ்ணமாச்சாரியாரிடம் தெரிவித்தார்.

**ஸி**. ஆர். படித்தது வால்மீகியை மட்டுமல்ல; வேறு பல ஆங்கில இலக்கியங்களையும் படித்தார். தவிர, பல்வேறு தூதரகங்களும் அனுப்பிய பத்திரிகைகளும் வந்து சேர்ந்தன. இப்போது நேரம் அதிகம் இருந்ததால் இவற்றைப் பார்வையிட முடிந்தது. **I meet Rajaji** என்ற நூலை எழுதிய மோனிகா ஃபெல்டன், ராஜாஜியுடன் தாம் நடத்திய உரையாடல் ஒன்றினைப் பின்வருமாறு எழுதுகிறார்:

ராஜாஜி ஓர் உறையைக் காகிதக் கத்தி பயன்படுத்திக் கிழித்தார். "ஒரு யூதப் பத்திரிகையிலிருந்து இந்தக் கடிதம் வந்திருக்கிறது. ஒரு சமயம் இவர்களுக்குச் சிநேக பாவத்துடன் ஒரு செய்தி அனுப்பினேன். அப்போது முதல் சந்தா கோரி அடிக்கடி எழுதுகிறார்கள். ஆனால் நான் இதற்கோ அல்லது வேறு எந்தப் பத்திரிகைக்குமோ சந்தா கட்டியதேயில்லை. பத்திரிகைகளையும் சஞ்சிகைகளையும் நான் காசு கொடுத்து வாங்குவதேயில்லை!"

ஃபெல்டன்: "எந்தப் பத்திரிகையையும் வாங்குவதில்லையா?"

ஸி. ஆர்.: "இல்லை. எனக்கு அனுப்பப்படுகிறவற்றைப் பார்க்கிறேன். எனக்குத் தேவையானவற்றைக் கேட்டுப் பெற்றுக் கொள்கிறேன்."

ஃபெல்டன்: "தேவலாமே! உன்னத நிலைக்கு உயர இதுவே ஒரு தூண்டுகோல் தான்!"

ஸி. ஆர்: "தூண்டுகோல் இல்லை; பின் விளைவு!"

ஸி. ஆர். சிரித்தார். "நான் பத்திரிகைகளைக் காசு கொடுத்து வாங்குவதில்லை என்று இவர்களுக்கு எழுதித் தெரிவிக்கட்டுமா?"

ஃபெல்டன்: "ஏன், தெரிவிக்கலாமே!"

ஸி. ஆர். தொடர்ந்து சிரித்துக் கொண்டே சொன்னார்: "உலகின் இந்தப் பக்கத்தில் ஆரியர்கள்தான் யூதர்கள் என்று நான் சொன்னால் இவர்களுக்குப் புரியவா போகிறது!"

**அ**னுகுண்டு பற்றி அவர் ஆங்கிலத்தில் கவிதைகள் எழுதினார். அவற்றை "ஹிந்துஸ்தான் டைம்"ஸில் வெளியிட தேவதாஸுக்கு அனுப்பியும் வைத்தார். "சமீபத்திய சம்பவங்கள் காரணமாக இந்தக் கவிதைகள் காலங்கடந்தவையாகி விட்டன" என்று கூறிய தேவதாஸ், கவிதைகளைப் பிரசுரிக்காததுடன், "இவற்றை என் சொந்தச் சேகரிப்பில் வைத்துக் கொள்கிறேன்" என்று கடிதம் எழுதினார். "உங்கள் உரைநடை மிகவும் அழுத்தம் திருத்தமாக அமைந்திருக்கும் போது அதை விட்டுவிட்டு நீங்கள் கவிதை எழுதிச் சிரமப்பட மாட்டீர்கள் என்று நம்புகிறேன்" என்பதாகவும் கடிதத்தில் குறிப்பிட்டார். ஆனால், "பவன்ஸ் ஜர்னல்" அந்தக் கவிதைகளை வெளியிட்டது. அவற்றைப் படித்த ராமராவ், அவை சிரமப்படுத்துவதாகக் கருதவில்லை. "ஆங்கிலத்தில் கவிதை எழுதும் ஆற்றல் உங்களுக்கு இருப்பது எனக்கு இனிமையான ஆச்சரியத்தை அளிக்கிறது" என்று குறிப்பிட்டு அவர் கடிதம் எழுதினார். கம்பராமாயணத்தின் ஒரு நீண்ட படலத்துக்கும் ஸி. ஆர். ஆங்கிலக் கவிதை வடிவம் தந்தார். அது உரிய கௌரவத்தைப் பெற்றது. உருக்கமாகவும் அமைந்திருந்தது.

**நா**ற்பது ஆண்டுகளாகத் தமது நண்பராக விளங்கி வந்த ஏ. வி. ராமன் வீட்டுக்கு அநேகமாக ஒவ்வொரு நாள் மாலையும் செல்வார் ஸி. ஆர். ஓய்வு பெற்ற இன்ஜினியரும் சிறந்த படிப்பாளியுமான அவரது அப்பட்டமான பேச்சும் கூர்ந்த மதியும் ஸி. ஆருக்கு மிகவும் பிடித்தவை.

இலைகள் உதிர்ந்து கொண்டிருந்தன. 1954 தொடக்கத்தில் ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் காலமானார். அதே ஆண்டின் இறுதியில் 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி திடீரென்று மரணமடைந்தார். 1920-களில் காந்தி ஆசிரமத்தில் 'விமோசனம்' பத்திரிகையை ராஜாஜி நடத்த உதவியவர் அவர். அப்போது முதலே மிகவும் நெருங்கியவராக இருந்து வந்தார். அவர் நடத்தி வந்த கல்கி பத்திரிகை ஸி. ஆரின் எண்ணங்களையும் எழுத்துக்களையும் சுமந்து தமிழ் கூறும் நல்லுலகம் எங்கும் பரப்பி வந்தது. ஆனால் அவர்களிடையே இருந்த உறவு இதெல்லாவற்றையும் விட மிகவும் ஆழமானது. நிருபர்கள் ஸி. ஆரின் மனநிலை பற்றிக் கேட்டபோது அவர், "ஆழ்ந்த வேதனை அளிக்கும் எனது துயரம் சொல்லில் அடங்காதது" என்றார்.

(தொடரும்)

தமிழாக்கம்: **கி. ராஜேந்திரன்**

## 7,50,000 வங்கி ஊழியர்க்கு,
## ஓர் இதயங்கனிந்த நற்செய்தி...
## மிக விரைந்து வளர்ந்து வரும்
## நிதிநிறுவனத்தின் தலைவரிடமிருந்து.

---

உங்களனைவர்க்கும் எங்களது மனமார்ந்த பாராட்டுகள்.

250 கோடி ரூபாய்க்கும் அதிகமான செல்வக் களஞ்சியத்தை ஊதியப் பாக்கியாக நீங்கள் அனைவரும் பகிர்ந்து கொள்ளப் போவதைச் செய்தி இதழ்களின் வழியாக அறிகிறோம்.

மிக உயர்ந்த வருவாய் தரும் முதலீடுகள் பற்றி உங்களுக்கு ஆலோசனை தர சக்தி நிதி நிறுவனம் காத்து நிற்கிறது. இந்திய நாட்டின் ஆறு மாநிலங்களிலுள்ள 35 கிளைகளில் ஏதாவதொன்றிற்கு வருகை தருக அல்லது எங்களது பதிவு அலுவலகத்திற்கு எழுதுக.



எஸ்.என். பை
நிர்வாக தலைவர்




# சக்தி
# பைனான்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம்; 475 டாக்டர் நஞ்சப்பா சாலை,
கோயம்புத்தூர் - 641 018

UIPC SF:1888



மடமையைக் கொளுத்துவோம்!

# மணி கட்டப்பட்ட பெண் பூனைகள்!

அர்ச்சனாவுக்குத் திருமணமானபின்பு தான் அந்த உண்மை தெரிந்தது. அவள் கணவன் ஏற்கெனவே ஒரு பெண்ணைக் காதலித்து மணந்தவன். பெற்றோரிடம் சொல்லப் பயந்து கொண்டு, அவர்கள் 'ஆணை'ப்படி அர்ச்சனாவுக்குத் தாலி கட்டியிருந்தான்! அர்ச்சனாவின் பெற்றோர்கள் அவள் விரும்பினால் விவாகரத்துக் கோரிப் பெறலாம் என்று தைரியம் அளித்தார்கள். ஆனால் படித்து, பட்டம் பெற்ற பெண்ணான அர்ச்சனா தனக்குத் தாலி கட்டிய 'கணவனு'டனேயே தன் வாழ்நாளைக் கழிக்கப் போவதாகக் கூறிவிட்டாள்!

— ஓர் ஆங்கில இதழில் வெளியான உண்மைச் சம்பவம்.

பெண்மையைச் சக்திக் கடவுளாக்கிய நாடு நம் நாடு. இங்கேதான் பொருளாதாரச் சார்பினாலும் கல்வி அறிவில்லாததாலும், அடங்கியே பழகி விட்டதாலும் பெண்கள் அவலப்படுகிறார்கள். இவர்களுக்காகக் கண்ணீர் விடலாம். உதவிக் கரம் நீட்டலாம், உயர்ந்து வளர வழிகாட்டலாம்.

ஆனால், உதைத்துத் தள்ளும் கணவனை, அவன் ஆண் என்ற ஒரே காரணத்துக்காகப் பூஜிக்கும் பெண்களை என்னதான் செய்வது? 'ஆணைச் சார்ந்து நிற்கும் திருமணமான பெண்களுக்குத்தானே இந்தச் சமுதாயத்தில் — குறிப்பாக நடுத்தர வர்க்கத்தினரிடையே — அந்தஸ்து உள்ளது' என்று வாதிடலாம். ஆனால் திருமணம் என்பது இரு மனம் ஒப்பிய அன்பு பந்தம். அதற்கென்று விதி முறைகள் உண்டு. அந்த விதிமுறைகளை மதிக்காத ஆணைக் கட்டாயம் பெண்கள் துணிந்து எதிர்க்கத்தான் வேண்டும். என்னைப் பொறுத்தவரை இத்தகைய ஆண்கள் குடும்பம் என்ற அமைப்பு தோன்றுவதற்கு முன் வாழ்ந்திருக்க வேண்டிய காட்டுமிராண்டிகள். இத்தகைய அநாகரிக மனிதர்களைப் பெண்கள் உதறிவிட்டு வாழக் கற்றுக் கொள்ள வேண்டும்.

அடுத்த வேளைச் சோற்றுக்குக் கணவனை நம்பியுள்ள பெண் கணவனை எப்படி எதிர்ப்பாள்? எனவே பெண்களுக்கு எதிரான அநியாயங்களுக்கு முடிவு காண ஒரே வழிதான் உண்டு. கல்வி அறிவும் வேலை வாய்ப்பும் அளிக்கும் பொருளாதாரச் சுதந்திரம்தான் அது. பெண்ணுக்குத் தன்னம்பிக்கையும், சுயமதிப்பும் வளர அது ஒன்றே வழி. நம் சமூகக் கோளாறுகளின் பின்னணி பொருளாதாரக் கோளாறுதான். 'பொருளாதாரச் சுதந்திரம் ஒரு பெண்ணுக்கு இருப்பதாகவே வைத்துக் கொள்வோம். அவளை அண்டியுள்ள குழந்தைகளின் கதி என்ன? அவர்களுக்கு ஒரு தந்தை வேண்டாமா?' என்று சிலர் கேள்வி தொடுப்பார்கள். ஆனால், 'ஒழுக்கமற்ற நற்குணங்களற்ற ஒரு தந்தை குழந்தைகளின் நல்ல வளர்ச்சிக்கு உதவிட முடியுமா?' என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

இது இப்படியிருக்க, படித்த, சுயமாகச் சம்பாதிக்கும் பெண்கள் கூட வேறொருவரின் குடும்ப வாழ்வைக் கெடுத்து இரண்டாம் மனைவி(?)களாகவும், 'சின்ன வீடு'களாகவும் இருப்பதையும் காண்கிறோம். இது கல்வியோ, பணமோ, பெண்களுக்குச் சுயமதிப்பை அளிப்பதில்லை என்றும் எண்ண வைக்கிறது. குறிப்பாக, கலை உலகில் மிகவும் மலிவாகப் பரிமாறப்படுவது செக்ஸ் உறவு. இங்கே காதல் என்ற பேச்சுக்கே இடமில்லை. திருமணம் என்ற ஒரு முத்திரை இன்றியே சுலபமாகப் பெறக் கூடிய ஒன்றுக்குச் சுலபமாகச் சமுதாய அந்தஸ்து கிடைக்கிறது. முதல் மனைவியும் மண முறிவை நாடுவதில்லை! இந்த நிலையில் பெண்ணே, பெண்ணுக்கு எதிரியாகிறாள். முதல் மனைவி தியாகியாகிறாள். ஆண் (இரண்டு பெண்டாள்பவன்) ஹீரோவாகிறான்.

பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளில் திருமண பந்தத்துக்கு உட்படாமல் ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழ்வது சகஜமாகி விட்டது. அங்கு கூட ஒரு ஆணுக்கு ஒரு பெண் என்ற நியதிக்குக் கட்டுப்படுகிறார்கள். கட்டுப்பாட்டை மீறினால், உறவு முறிகிறது. நம் நாட்டிலோ, ஓர் ஆணுக்கு, இரண்டு மூன்று 'மனைவிகள்' கூட. எப்படியானாலும் ஆணுக்குப் பாதிப்பு இல்லை!

பெண்களுக்குத் தங்களைப் பற்றிய எண்ணங்கள் மாறும்வரை, நிமிர்ந்து நிற்கும் துணிவு வரும்வரை, சினிமாவும், பத்திரிகைகளும் இத்தகைய ஆண்களைப் போற்றி, ஆராதிக்கும் வரை, இந்நிலை மாறாது.

அதிகார ஆண் வர்க்கத்தினர் இந்தியப் பெண் பூனைகளுக்கு ஏற்கெனவே மணி கட்டி விட்டனர். அவர்களுக்குத் தங்கள் மணி ஓசையில் ஒரு கிளுகிளுப்பு... மயக்கம்! அது எப்போது தெளியும்?

— உஷா சுப்பிரமணியன்.

# சுக போகத் தீவுகள்



கிருஷ்ணமூர்த்திக்கு விழிப்புத் தட்டியது. எழுந்து மேசைமேல் இருந்த கைக்கடிகாரத்தில், விடிவிளக்கின் வெளிச்சத்தில், மணியைப் பார்த்தான். மணி மூன்று இருபது ஆகியிருந்தது. நான்கு மணிக்கு மேல் எழுந்திருந்தால் கூடப் போதும்தான். மதுரை பஸ்ஸைப் பிடித்து அங்கிருந்து சென்னைக்கு ஆறு மணி வாக்கில் கிளம்பும் பஸ்ஸில் ஏறி உட்கார்ந்தால், இரவு எட்டு மணிக்கெல்லாம் சென்னை சென்று சேர்ந்து விடலாம்.

மீண்டும் படுக்க முடியாது. மனமும் மூளையும் முற்றாக விழித்துக் கொண்ட பிறகு உறக்கம் எங்கிருந்து வரும்? தவிரவும், முதல் முதலாகத் தனித்து, அவன் செய்யப் போகும் நீண்ட பயணம் அது என்பதால், அவனுக்குள் மூண்டிருந்த பரபரப்பு அவன் உறக்கத்தை முற்றாக அடித்து விட்டிருந்தது.

கிருஷ்ணமூர்த்தி தனியாக மேற்கொள்ள இருக்கும் பயணம்! நினைக்கவே எவ்வளவு சுகமாக இருக்கிறது? ப்ள்ளி இறுதி வகுப்பு வரையிலும் கோடை விடுமுறைகளைக் கழிக்க, மூர்த்திக்கு மதுரை மாமா வீடுதான் வாய்த்திருந்தது. உத்தமபாளையத்திலிருந்து மதுரை அப்படி என்ன மகா தூரம்? காலைச் சிற்றுண்டியை முடித்துக் காரியஸ்தர் மணி மாமாவுடன் பஸ்ஸில் ஏறி உட்கார்ந்தால், பத்து மணிக்கெல்லாம் மீனாட்சியம்மன் கோயில் கோபுரம் தெரிந்து விடாதா? இந்த இரண்டு மணி நேரப் பயணத்துக்குத்தான் அப்பாவும் அம்மாவும் எவ்வளவு மலை மலையாகப் புத்திமதி சொல்வார்கள்?

"மணி, பையனை பஸ் ஓரமா உட்கார வைக்காதே. வெளியிலே கையை நீட்டுவான். எதிரில வர்ற பஸ்காரன் கையை எடுத்திட்டுப் போயிடுவான்!"

— இது மணி மாமாவுக்கு அப்பா சொல்லும் உத்தரவு. அப்புறம் இவன் பக்கம் திரும்பிச் சொல்வார்.

"ஜாக்கிரதை. தெருவைக் கடக்கணும்னா, ரெண்டு பக்கமும் நல்லாப் பார்த்துட்டு, வண்டி, வாகனம் ஏதும் இல்லேன்னு தெரிஞ்சுக்கிட்டுக் கடக்கணும். பாதையில ஓரமாத்தான் நடக்கணும். வெளியே எங்கே போனா

# பிரபஞ்சன்

னும் இருட்டுவதற்கு முன்னால் வீடு திரும்பிடணும். கூடுமான வரைக்கும் வெளியே தனியே போகாதே. மாமா, மாமியோடு போ! அவங்க, என்ன போட்டாலும் சாப்பிடணும். விருந்தாளியாத் தங்கப் போகிறவனுக்கு என்று சில ஒழுக்கங்கள் இருக்கு அதை மீறிடக் கூடாது.''

அம்மாவுக்கு அவன் பங்குக்குச் சில சொல்ல வேண்டியிருக்கும். அது, தினம்தோறும் எழுந்ததும் பாயைச் சுற்றி வைத்தல், காலையிலேயே குளித்து விடுதல், மறக்காமல் நெற்றிக்கு இட்டுக் கொள்ளுதல், மாமா, மாமிக்கு இயன்றவரை உதவுதல், மாமாவின் பெண் சக்கு என்கிற சகுந்தலாவைத் தொட்டுப் பேசாமல் இருத்தல், தொட்டால் கட்டாயம் இரவில் சாமி கண்ணைக் குருடாக்கிவிடும் என்பதை நம்புதல், சனி மற்றும் புதன் கிழமைகளில் எண்ணெய்க் குளியலைச் செய்தல், சட்டை பேண்ட்டுகளைத் தானே துவைத்துக் கொள்ளுதல், பெரியவர்கள் யாரேனும் வீட்டுக்கு வந்தால் எழுந்து அவர்களுக்கு ஆசனம் அளித்தல், பெரியவர்கள் பேசும் இடத்தில் கூடுமானவரை இல்லாமல் இருத்தல், இருக்க நேர்ந்தால் கூடுமானவரை தும்மாமல், மற்றும் கொட்டாவி விடாமல் இருத்தல் — முதலியவையாய் இருக்கும். சுமார் ஒரு மணி நேரத்துக்குக் குறையாமல் அம்மா, அப்பாவின் போதனைகள் இருக்கும். பள்ளி இறுதி வகுப்பு முடிந்து, மாமாவின் வீட்டில் மதுரையில் இருந்து கொண்டு பி. ஏ. வும், அதற்குப் பின் எம். ஏ. யும் முடிக்கும் வரையில் கூட அந்தப் போதனைகள் கிருஷ்ணமூர்த்திக்குத் தொடர்ந்தன. அம்மா, ஒன்றை மட்டும் அவன் கல்லூரியில் படிக்கும் போது விட்டு விட்டாள். அது, சக்குவைத் தொட்டுப் பேசினால், சாமி கண்ணைக் குத்தும் என்கிற பயங்கர எச்சரிக்கை. அம்மாவுக்கே அதன் பொய்த் தன்மை உறுத்தியிருக்கும் போலும்!

கிருஷ்ணமூர்த்தி ஜன்னல் ஓரம் வந்து நின்று, திரையை விலக்கி வெளியில் பார்த்தான். உலகம் இருட்டுப் போர்வையைச் சுற்றிக் கொண்டு உறங்கிக் கொண்டிருந்தது. மரங்கள் மற்றும் வேலி ஓரச் செடிகளில் கொத்துக் கொத்தாக இருட்டு காய்த்துத் தொங்கிக் கொண்டிருந்தது. இருளின் மூச்சுக் காற்று எப்பவுமே ஊதல் காற்றாய், குளிர்ச்சியாகத்தான் இருக்கும் போலும். உடம்பு ஒரு முறை சிலிர்த்துக் கொண்டது அவனுக்கு.

குளியல் அறைக்குள் சென்று, தீ மாதிரி உறைந்த நீரைத் தலையில் ஊற்றிக் கொண்டு, தலையைத் துவட்டியபடி, வெடவெடவென நடுங்கிக் கொண்டே வெளியே வந்தான்

(1)



மூர்த்தி. எதிரே அம்மா காப்பியை வைத்துக் கொண்டு நின்றிருந்தாள்.

இதுதான் அம்மா. இப்படித்தான் அம்மா. இயன்ற வரை குளியல் அறைச் சத்தம் வெளி வராமல் குளித்தான் மூர்த்தி. எனினும் இந்த அம்மாவுக்கு எப்படிச் சத்தம் கேட்டு, எழுந்து, காப்பி வைத்து, எடுத்துக் கொண்டு வந்திருக்கிறாள்? அம்மா மனதால் ஓசைகளைக் கேட்கிறாள். அம்மாக்களுக்குப் பிள்ளைகளின் அசைவுகளைச் சொப்பனத்திலும் அறிய முடிகிறது.

மூர்த்தி காப்பியை வாங்கிக் கொண்டான்.

''நீ தூங்கவே இல்லையாம்மா?''

''தூக்கம் எங்கேந்துடா வரும்? ஒத்தைக்கு ஒரு பிள்ளையா இருக்கிற நீயே, ஏதோ வேலைக்குப் போறேன், சம்பாதிக்கப் போறேன்னு எங்களை விட்டுப் பட்டணம் போறேன் என்கிறாய். நீ சம்பாதிச்சுத்தான் நம்ம குடும்பம் நடத்த வேண்டிய நிலைமையிலயா நாம் இருக்கோம்?''

அம்மாவின் கண்களில் நீர் திரண்டது.

மூர்த்தியின் மனம் சங்கடப்பட்டது. அவன் சொன்னான்.

''படிச்சுட்டு, வீட்டில் சும்மா உட்கார்ந்திருப்பது ரொம்பக் கஷ்டமா இருக்கும்மா... கொஞ்ச நாளைக்கு வெளியூருக்குப் போய் வேலை பார்க்கலாம்னு இருக்கு. தவிரவும், வேலை செய்யறதும், சம்பாதிப்பதும் சோற்றுக்கு மட்டுந்தானா? என்னாலேயும் ஏதேனும் உபயோகமா ஒரு காரியம் செய்ய முடியும், என்னாலேயும் என் வாழ்க்கைக்குப் போதுமானதைச் சம்பாதிக்க முடியும்னு எனக்கே விளங்கிக் கொள்ளவாவது நான் வேலை செய்ய வேண்டாமா? என் மேலேயே எனக்குக் கௌரவம் வர வேண்டும் இல்லையா? என்னை நான் மனுஷனா உணர வேண்டாமா? அதுக்காகத்தான் பட்டணம் போறேம்மா....

அவன் காப்பியைக் குடித்தான். காப்பி இனிச்சுக் கிடந்தது. அம்மாவுக்குக் காப்பியைப் பாயசமாக அடித்தால்தான் திருப்தியாய் இருக்கும். அன்பு செய்வதிலாகட்டும், பிறருக்குக் கொடுத்து மகிழ்வதிலாகட்டும், அபரிமிதம் அவள்.

''இன்னும் கிளம்பலியா? வெளுக்கிறதுக்கு முன்னால் புறப்பட்டால்தானே இருட்டறதுக்கு முன் போய்ச் சேர முடியும்?'' என்றார் அப்பா வந்து கொண்டே. அவருக்கு முன் அவர் புகைக்கும் சுருட்டுப் புகை மணம் வந்தது. அப்பாவிடம் உள்ள கெட்ட பழக்கம் என்று ஒன்றைச் சொல்ல வேண்டுமெனில் அது இந்தப் புகைப் பழக்கம் ஒன்றுதான். எனினும் அவனுக்கு அப் புகை மணம் விருப்பமாகவே இருந்தது. சின்னஞ் சிறு வயது முதல் அப்பாவின் ஞாபகம் என்பது சுருட்டுப் புகை மணத்துடன்தான் அவனுக்கு வந்து கொண்டிருந்தது. அந்த மணத்தைக் கழித்து விட்டால், அப்பா ஏதோ குறைப்பட்டு விடுவார் என்பது போல் அவனுக்குத் தோன்றுவது உண்டு. அன்பு




கொண்டோரின் குறைகளும் கூட நிறைவாகத் தோன்றுவது, விசித்திரம்தான்.

''அவன் புறப்பட்டுக் கொண்டு இருக்கிறான். அவனிடம் போய்ப் போகாதே என்றா சொல்வது? வயசாக வயசாக உனக்குப் புத்தி கெட்டுக் கொண்டு வருகிறது, கற்பகம்'' என்றார் அப்பா, அம்மாவைப் பார்த்து.

அம்மா அமைதி காத்தாள்.

மூர்த்தி அறைக்கு வந்தான். ஆடை அணிந்து கொண்டு தலைவாரிக் கொண்டான். புத்தக அலமாரியும், கண்ணாடியும் இணைந்த அலமாரி அது. புத்தகங்கள். அவன் உயிரினும் மேலாக நேசித்த புத்தகங்கள். அவன் கவலைகளில் பங்கு கொண்டு, அவனுக்கு ஆறுதல் சொல்லி, அவன் அறிவை விசாலித்து, அவனைக் கிளர்ச்சியடையச் செய்து, பொங்கவிட்டு, வடிய விட்டு, அவனை இளகச் செய்து, அனைத்துக்கும் சிகரமாக, பக்குவப்படுத்திய புத்தகங்கள். அவற்றை விட்டுப் போவது மனசுக்குக் கஷ்டமாகவே இருந்தது.

கண்ணாடியின் வழியாக சரசு தெரிந்தாள்.

''என்ன சரசு, நீ கூட எழுந்திட்டையா? எட்டு மணிக்கு, சாவகாசமா எழுந்திருக்கிறவள் நீ?''

சரசு அதற்குள் குளித்து, கூந்தல் ஈரம் காய அதைப் பரத்தி விட்டிருந்தாள். மஞ்சள் வாசனை அவளிடமிருந்து மிருதுவாக எழுந்தது.

''அம்மா, நீ புறப்படறதுக்கு முந்தி குளிக்கணும்னு சொன்னாங்க, அண்ணா! புறப்பட்டுப் போன பிறகு, தலை முழுகறது அபசகுனம்னு சொன்னாங்க...'' என்றாள் சரசு.

''உனக்கு என்ன வேணும் சரசு? சொல். வாங்கியாறேன்.''

சரசு, கூந்தலுக்கு முடிச்சு போட்டவாறு யோசித்தாள். தலையை அண்ணாந்து, கூரை முகட்டைப் பார்த்தவாறு, கண்கள் அரை




— வாசிஜான்.

வாசி சொருக, எங்கோ பார்த்தால், யோசிப்பது என்று அர்த்தம் சரசுவுக்கு.

"ஹேர்—பின் வாங்கி வா, அண்ணா. பட்டணத்தில் நல்ல டிசைன் எல்லாம் கிடைக்கும். அப்புறம்..."

"அப்புறம்....?"

"இரு, சொல்றேன்."

"ஒரு அழகான, படிச்ச,"

"படிச்ச...?"

"உன்னைக் கண்ணில் வைச்சுக் காப்பாற்றுகிற...."

"காப்பாற்றுகிற....?"

"எங்க சரசுவுக்குக் காலைல எட்டு மணிக்குக் காப்பி கொடுத்து, பல் தேய்ச்சு விட்டு, வெந்நீர் வைச்சு விளாவி..."

"விளாவி...?"

"வீடு பெருக்கி, துணி துவைச்சு, உலர்ந்ததும் இஸ்திரி போட்டு பெட்டியில் அடுக்கி வைக்கிற மாதிரி...."

"மாதிரி....?"

"ஒரு நல்ல புருஷனையும் வாங்கியாறேன்.

"சீய்....!"

'சீய்' என்று இளம் பெண்கள் எதைக் குறித்தாவது சொன்னால், அதை அவர்கள் வெறுக்கிறார்கள் என்று பொருள் அல்ல! மாறாக, அவர்கள் அதை விரும்புகிறார்கள் என்றே பொருள். அப்போது அவர்கள் முகம் சிரிக்கும். கண்கள் சிரிக்கும். தலையைச் சற்றே குனிந்து, நெற்றியைச் சுருக்கி, உதட்டை முறுக்குவார்கள். 'இன்னும் கொஞ்சம் நெய் விடேன்' என்பதே அவர்களின் கோரிக்கை.

"நான் கிளம்பட்டுமா, சரசு..." என்றான் மூர்த்தி, எங்கோ பார்த்துக் கொண்டு. தங்கையாய், சிநேகிதியாய், விளையாட்டுத் தோழியாய் இருந்த அவளைப் பிரிவது சங்கடமாகவே இருந்தது.

"அண்ணா" என்று நெருங்கி வந்தவள், அவன் தோளில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவள் உடம்பு குலுங்கியது. இளம் சூடாகக் கண்ணீர்த் துளிகள் அவன் தோள் பட்டையை நனைத்தன.

"எதுக்குடா அழுறே? நான் எங்கே போயிடப் போறேன்... இங்க இருக்கிற மெட்ராசுக்குத்தானே? பார்க்கணும்னா, இன்னி ராத்திரி கிளம்பினா, விடியற போது வந்துட மாட்டேனா...? பாருடா, என்னைப் பாரு... இப்படி அண்ணன் புறப்படற நேரத்துல அழுதா, என்னால சந்தோஷமா புறப்பட முடியுமா....?" என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவனும் உடைந்துதான் போனான்.

மஸ்தான் சாகிபுவின் குதிரை காலை உதைத்துக் கொண்டு நின்றிருந்தது. அது ஒரு காலத்துப் பந்தயக் குதிரை என்று அவர் சொல்லிக் கொண்டிருப்பார். குதிரையைப் பார்த்தால் அப்படி நம்புவது கஷ்டமாகத்தான் இருக்கும். உயிரைத் தக்க வைத்துக் கொண்டு, பாரமும் அது இழுப்பது அதன் அசாதாரண ஆன்ம பலத்தையே காட்டுவதாய் இருந்தது.

அப்பா அவனது பெட்டியை எடுத்து முன் பக்கம் வைத்தார். அம்மா, ஒன்றும் சொல்லாமல் விக்கித்துப் போய் நின்றாள். அப்பாதான் சொன்னார்:

"தெய்வநாயகம் நமக்கு ரொம்ப வேண்டப்பட்டவன், மூர்த்தி. உனக்கு மாமன் முறை. ஒரு காலத்தில் நாம் சௌகர்யமாக இருந்த போது, நம்மால் சௌகர்யப்பட்டவன். அவன் சாப்பிட்டு வளர்ந்தது உன் அம்மா போட்ட சோறு. பயல், ரொம்ப வளர்ந்து, தலைவனாயிட்டாலும் பழசை மறக்கலை. அதனால்தான் தைரியமா உன்னை அவன்கிட்டே அனுப்பறேன். அவன் செல்வாக்காலே உனக்கு ஒரு வேலையும் கிடைச்சு, ஒரு இடமா அமர்ந்தேன்னா, உனக்கும் ஒரு கல்யாணத்தைப் பண்ணிப் பார்த்திடுவோம். பாப்பாவுக்கு, நல்ல இடமா அமைஞ்சா, தையில் கல்யாணத்தை முடிச்சுடுவோம். நீ புறப்படு. அடிக்கடி கடிதம் போடு" என்றார் அப்பா. ஏனோ அவன் முகத்தைப் பார்க்கத் தைரியம் இல்லாதவர் போல் திரும்பிக் கொண்டார் அவர்.

அப்பா முன் மாதிரி பேச வேண்டும் என்பது போல் தோன்றியது மூர்த்திக்கு. 'இடது கை ஓரமாக நட, இரு பக்கமும் பார்த்து ரோட்டைக் கிராஸ் பண்ணு' என்றெல்லாம் சொல்ல வேண்டும் என்று இருந்தது அவனுக்கு. அம்மா சிலை மாதிரி நின்றிருந்தாள். அவளாவது ஏதாவது பேச மாட்டாளா என்று இருந்தது அவனுக்கு. இல்லை. பாஷையையே மறந்து போனவள் மாதிரி அவள் இருந்தாள்.

"அட்ரசை ஞாபகமா எடுத்து வச்சிருக்கியா?"

"உம்."

"போனதும், போய்ச் சேர்ந்ததுக்குத் தந்தி கொடு."

"சரிப்பா!"

# புண்ணிய காரியங்களை ஸங்கிராந்தியில் ஏன் அனுஷ்டிக்க வேண்டும்?

மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரமமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் ஸூரிய பகவான், ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப் புண்ணிய காலங்களில் செய்கிற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம், முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் ஸூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

<u>தேவலர்</u>: ஸங்கராந்தி சமயம் ஸூக்ஷ்மமானது. நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸ்ங்கரமணத்திற்கு முன்பு முப்பது பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குப்பலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்திராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மேஷம் | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயனம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுசு | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

ஸம்க்ஷேப தர்மசாஸ்திரம்

''சரி... புறப்படு தம்பி. முருகன் துணை இருப்பான்.''

அம்மா தலையை மட்டும் ஆட்டினாள். சிரிக்க முயன்றாள். அவளால் அது முடிய வில்லை. அவளை ஒண்டிக் கொண்டு சரசு நின்றிருந்தாள். அம்மாவை இருபது வயது கழித்து, நகல் எடுத்த பிரதி மாதிரி.

''வரேம்மா... வரேண்டா சரசு...''

வண்டிக்குள் ஏறி அமர்ந்து கம்பியைப் பொருத்திக் கொண்டான் மூர்த்தி. குதிரை மிகப் பெரிய சிரமப்பட்டு நகர்ந்தது.

''பட்டணத்துக்கா அத்தா?''

''உம்.''

''தலைவர்களையெல்லாம், நடிகர்களை யெல்லாம் ரொம்பக் கிட்டத்திலேந்து பாப்பீக... ஊம்... அது அதுக்குக் கொடுப் பினை வேணும் அத்தா. என்னைய பாருங்க. ஓடைக்காத்தான் மடு தண்ணிய குடிச்சுட்டே காலத்தைக் கழிச்சுடுன்னு கடவுள் சொல்லி அனுப்பிச்சுட்டான். நமக்கு நாம்பளும், குதிரையும்தான் கதி.''

''ஏன் பாய் கசந்துக்கறீங்க... உங்களுக்கு என்ன குறைச்சல்? ஒரு கௌரவமான தொழில் செய்யறீங்க... சம்பாதிக்கிறீங்க.. குதிரையும் நீங்களுமா பகிர்ந்துக்கறீங்க... அப்புறம் என்ன குறை?''

''போங்க அத்தா... இது ஒரு பொழப்பாக் கும்... அல்லாவுக்கே பொறுக்காத பொழைப்பு...''

மீன் நடக்கவும், தவளை பறக்கவும், கழுகு நீந்தவும் ஆசைப்படுகிறது. மனிதர்க்கு இருக்கும் நிலை கசக்கிறது. அக்கரை, பச்சை யாகப்படுகிறது. மனித குலம் அமைதி இழந்து அலைவதின் அறிகுறியோ இது, என்பதாக நினைக்கத் தோன்றியது மூர்த் திக்கு.

மதுரை பஸ்ஸைப் பிடித்துக் கொடுத்த மஸ்தான் பாய், கூலி வாங்கிக் கொள்ள மறுத்து விட்டார்.

''அத்தா... பெரிய ஆளா வருவீங்க... என்னைப் பட்டணம் கூட்டிப் போய் அண்ணா சமாதி, அடையாறு ஆலமரம், செத்த காலேஜ், உயிர் காலேஜ் எல்லாத்தை யும் சுற்றிக் காட்டுவீகளாம். இதுக்குப் போரிி உங்ககிட்டே சத்தம் வாங்குவாகளாக் கும். போங்க அத்தா. நல்ல பெரிய ஆளா வாங்க...'' என்று ஆசீர்வதித்தார் பாய்.

மூர்த்தி அவரை வணங்கினான்.

மதுரை பஸ்ஸைப் பிடித்து, சென்னை பஸ்ஸையும் பிடித்தான்.

இருட்டிலிருந்து ஒளியை நோக்கிச் செல் வதே பயணம். பஸ் இருட்டிலிருந்து இருட் டுக்குள்ளேயே பயணம் செய்து கொண் டிருந்ததாய் அவனுக்குத் தோன்றியது.

மாலை, இருட்டிய நேரத்தில், தருமமிகு சென்னையை வந்தடைந்தான் மூர்த்தி. நகரம், முடிச்சு முடிச்சாய் வளர்ந்த நகக் கையை விரித்து அவனைத் தனக்குள் எடுத் துக் கொண்டது.

(தொடரும்)



# "நடிப்பு என் தொழில்; ஆன்மீகம் என் வாழ்க்கை"

**ரஜினிகர்ந்த் இப்போதெல்லாம் பத்திரிகைகளுக்குப் பேட்டி தர ஒப்புக் கொள்வதில்லை. நாம் அணுகிய போதும் முதலில் அப்படித்தான் சொன்னார். பிறகு, "வித்தியாசமாய்க் கேள்வி கேட்பதாய் இருந்தால் பேட்டிக்குச் சம்மதம்" என்றார். சினேகபாவத்துடனும் ஆழ்ந்து சிந்தித்தும் அதே சமயம் ரஜினி ஸ்டைலில் படபடவென்றும் பேசினார்.**

*நிருபர்: இன்று சமுதாயத்தில் வன்முறை அதிகமாய் இருக்கிறதே! இதற்கு என்ன காரணம் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?*

*ரஜினிகாந்த்: இன்றைக்கு இருக்கக் கூடிய தலைவர்கள் – அதாவது அரசியல் வாதிகள். அடுத்தது மதத் தலைவர்கள். மூன்றாவது காரணம் சினிமா. சமுதாயத்*

தில் நிலவி வரும் வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் இவற்றால் கஷ்டப்படும் இளைஞர்களை, இன்றைக்கு உள்ள அரசியல்வாதிகள் 'எக்ஸ்பிளாயிட்' பண்ணுகிறார்கள். ஆகவே அவர்கள் வன்முறைக்குப் போகிறார்கள். இது நம் நாட்டில் மட்டும்தான் என்று இல்லை. உலகம் முழுவதும் வன்முறை தலைவிரித்தாட இவைதான் காரணம்.

நிருபர்: வன்முறையைக் கைவிடுமாறு சமுதாயத்தை நல்வழிப்படுத்த என்ன வழி?

ரஜினி: ஆன்மீகம். அப்படியெனில் அமைதி — சாந்தி. மனிதனின் மனம் அமைதியாய் இருந்தால்தான், வன்முறையை நாட மாட்டான். ஆன்மீகம் என்பதை நான் பக்தியிலிருந்து வேறுபடுத்திப் பார்க்கிறேன். ஆன்மீகம் என்பது மதங்களுக்கு அப்பாற்பட்டது. மதங்கள் மனிதனைக் குழப்புகின்றன. எனவே என்னை நான் ஆன்மீகவாதி என்றுதான் சொல்லிக் கொள்வேன். நான் எந்த மதத்தையும் சேர்ந்தவன் இல்லை. முதலில் நான் மனிதன். பின்னர் இந்தியன். அவ்வளவுதான்.

நிருபர்: அப்படி சமுதாயத்தில் ஆன்மீகத்தைக் கொண்டு வருவது யாருடைய பணி?

ரஜினி: அது எனக்குத் தெரியாது. அது என் வேலையுமில்லை. ஒரு தடவை ரமண மகரிஷியிடம் ஒரு பக்தர், ''சுவாமி! இந்த உலகம் இப்படிக் கெட்டு, நாசமாகிப் போய்க் கொண்டிருக்கிறதே! உங்களை மாதிரி மகான்கள் கீழே இறங்கி வந்து மக்களை நல்வழிப்படுத்தாமல், அருணாசலத்திலேயே உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்களே!'' என்று கேட்டாராம். அதற்கு ரமண மகரிஷி, ''உன்னையும், என்னையும், இந்த ஆகாயத்தையும், பூமியையும் படைத்த இறைவனே அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. நீ ஏன் கவலைப்படுகிறாய்? நீ உன்னை முதலில் திருத்திக் கொள். அதே போல் ஒவ்வொருவரும் தன்னைத் திருத்திக் கொண்டால், உலகம் தானாகவே திருந்திவிடும்'' என்று பதில் சொன்னார். அதன் படி, நான் முதலில் என்னைத் திருத்திக் கொள்ளுகிறேன். நான் என் மனச்சாட்சியின் படி வாழ்கிறேன். மற்றவர்களைத் திருத்துவது என் பிரச்னை இல்லை, நான் யாருடைய பாதையிலும் போக மாட்டேன். அதே சமயம், மற்றவர்களை என் பாதைக்கும் கூப்பிட மாட்டேன். எல்லோருக்கும் ஆண்டவன் அறிவைக் கொடுத்திருக்கிறான். அதைப் பயன்படுத்திக் கொள்ளட்டும். தம் வாழ்க்கையைத் திருத்திக் கொள்ளட்டும். அடுத்த கேள்வி?

நிருபர்: உங்களுடைய தினசரி வாழ்க்கையில் ஆன்மீகத்தின் பங்கு என்ன?

ரஜினி: நடிப்பு என்னுடைய தொழில். ஆனால் ஆன்மீகம் இருக்கிறதே, அதுதான் என்னுடைய வாழ்க்கை. நடிக்கும் போது கூட நான் ஆன்மீக விஷயங்கள் குறித்துத்தான் யோசித்துக் கொண்டிருப்பேன். நான் ஆன்மீகம் என்று குறிப்பிடுவது என் 'ஆத்மா'வை — ஆத்ம விசாரத்தை. ஆன்மீகம் சம்பந்தமான புத்தகங்களை நிறையப் படிக்கிறேன். அது என் அறிவை விசாலப்படுத்துகிறது.

நிருபர்: உங்களுக்கு ராகவேந்திர சுவாமிகள்பால் ஈடுபாடு வந்தது எப்படி?

ரஜினி: நான் எட்டு முதல் பதின்மூன்று வயது வரை பெங்களூரில் உள்ள ராமகிருஷ்ண ஆசிரமத்தில் வாழ்ந்தேன். அங்கே எனக்குக் கற்பிக்கப்பட்டவை சமஸ்கிருதம், உபநிஷதங்கள் மற்றும் பல நல்ல விஷயங்கள். எங்கள் குடும்பத்துக்கே குருவான ஸ்ரீ ராகவேந்திரரை, நான் என் ஆன்மீக குருவாய்க் கொண்டிருக்கிறேன். * எந்தக் கடவுளுக்கும் நான் முக்கியத்துவம் தருவதில்லை.

* (ரஜினி, தெ. ஆ. மாவட்டம் புவனகிரியில் கட்டப்பட்டு வரும் ஸ்ரீ ராகவேந்திரர் ஆலயத்துக்கு உதவி விருக்கிறார்.)



* மனிதனைப் பக்குவப்படுத்தும் இன்னொன்று — வயது!



* நான் எந்த மதத்தையும் சேர்ந்தவனில்லை; முதலில் நான் மனிதன்......

'நான்' என்பது என்னுடைய உடம்பு இல்லை; என்னுடைய மனமும் இல்லை. 'நான்' என்றால் எனது ஆத்மா. கடவுள் எனக்குள்ளேயே இருக்கிறார்.

நிருபர்: இப்படிப்பட்ட பக்குவ நிலைக்கு உங்களால் எப்படி மாற முடிந்தது?

ரஜினி: ராமகிருஷ்ண மிஷன் அளித்த அடித்தளம்தான். அதன் பின் நான் பெற்ற அனுபவம். கூலிக்காரனிலிருந்து, சூப்பர் ஸ்டார் அந்தஸ்து வரை பார்த்து விட்டேன். அதுவும் ஒரு குறுகிய கால கட்டத்துக்குள்ளேயே பார்த்தவன். இந்தக் காலக் கட்டத்தில் எனக்கேற்பட்ட அனுபவங்கள்தாம் என் மாற்றத்துக்குக் காரணம். நான் நல்ல நடிகன் இல்லை. But I am a good observer. நான் நிறைய கவனிப்பேன்; சிந்திப்பேன். என்னை நானே ஒவ்வொரு விஷயத்திலும் கேள்விகள் கேட்டுக் கொண்டு, பதில் தேடுகிறேன். ஆண்டவன் கொடுத்திருக்கும் அறிவை உருப்படியாய்ப் பயன்படுத்திக் கொள்வதுதானே முறை? அதில் நான் ஈடுபட்டிருக்கிறேன். மேலும், மனிதனைப் பக்குவப்படுத்தும் இன்னொன்று, வயது. இவை எல்லாவற்றுக்கும் மேலாகக் கடவுளின் ஆசியால்தான் இப்படி மாற முடிந்தது.

நிருபர்: ஆனாலும் கூட, ரஜினி என்றதும் ஒரு வேகம், முரட்டுத்தனம்தானே நினைவுக்கு வருகிறது. இதற்கு அடிப்படைக் காரணம் என்ன?

ரஜினி: நான் வீண் வம்பை விலைக்கு வாங்குவது போல் நடந்து கொள்வதில்லை. ஆனால் நான் சாதுவும் இல்லை. எனக்கு நியாயம் என்று தோன்றுகிற விஷயங்களில் முரட்டுத்தனம் காண்பிப்பது என் இயற்கையான குணம்.

நிருபர்: இந்தக் குணம் இயற்கையாய் அமைய உங்களது இளமைச் சூழ்நிலை காரணமா?

ரஜினி: என்னுடைய இந்த இயற்கைக் குணத்துக்கும், நான் வளர்ந்த சூழ்நிலைக்கும் சம்பந்தமில்லை. ஒருவரின் வாழ்க்கை முன் பிறவியின் தொடர்ச்சி என்று நான் நம்புகிறேன். அதைத்தான் பிராப்தம் என்கிறார்கள். போன பிறவியின் நல்லது, கெட்டதுக்கேற்பவே இந்தப் பிறவி அமைகிறது. எனவேதான், இந்தப் பிறவியில், நான் என் கடமைகளை ஒழுங்காகச் செய்கிறேன்; பொய் சொல்ல மாட்டேன்; என் மனச்சாட்சியின்படி நடப்பேன்; அதன் பயனாய் அடுத்த பிறவி, நன்றாய் அமையுமென்று நம்பிக்கையுடன் வாழ்கிறேன்.

நிருபர்: பழைய நாட்களில் நண்பர்களுடன் பழகிய போது இருந்த நெருக்கம் — அன்னியோன்னியம் இன்றைய உங்கள் அந்தஸ்து மிக்க சினிமா வாழ்க்கையில், இருக்கிறதா?

ரஜினி: ஓ! நிச்சயம் இருக்கிறது. இப்போதும் பழைய நண்பர்களைப் பார்க்கிறேன். எனக்கு வித்தியாசம் ஒன்றுமே அதில் தெரியவில்லை. இப்போது, அந்த நாட்கள் போல நான் விட்டேத்தியாய் ரோட்டில் நடந்து போக முடியாது. கும்பல் கூடும். இந்தப் பிரச்னை, பாபுலாரிடி உள்ள எல்லாருக்குமே உள்ள பொதுப் பிரச்னைதானே?

நிருபர்: மிகச் சாதாரண நிலையிலிருந்து இந்த அளவுக்கு வந்துள்ள உங்கள் முன்னேற்றம் — உயர்வு — அனைவருக்குமே பிரமிப்பூட்டுகிறது. உங்களுக்கும்தானே?

ரஜினி! இல்லை... மற்றவர்கள் போல, இந்த விஷயம் எனக்குப் பிரமிப்பைத் தரவில்லை. ஏனென்றால், மற்றவர்கள் எல்லாம், என்னைத் தொலைவிலிருந்து மட்டுமே பார்க்கிறார்கள். இந்த முன்னேற்றத்துக்குப் பின்னால் எத்தனை கடுமையான உழைப்பு இருந்திருக்கிறது என்பது எனக்கு மட்டுமே தெரியும்; அதனால்தான் எனக்குப் பிரமிப்பு ஏற்படவில்லை.

நிருபர்: சினிமா உலகிற்குள் நுழையாதிருந்திருந்தால் உங்கள் வாழ்க்கை எப்படி அமைந்திருக்கும் என்று எப்போதாவது



* கற்பனையில் கிடைத்த சந்தோஷம், நனவானதும் நிலைக்கவில்லை.



* எல்லோருக்கும் ஆண்டவன் அறிவைக் கொடுத்திருக்கிறான்......

யோசித்ததுண்டா?

ரஜினி: அதை யோசித்து என்ன பயன்? நேரம் வீண்; அந்த நேரத்தில் உருப்படியான விஷயங்களைப் பற்றிச் சிந்திக்கலாமே!

நிருபர்: நடிகனின் திறமைக்கு விருதுகள் ஓர் அளவுகோலா? உங்களுக்கு விருது ஏதும் கிடைக்காதது பற்றி வருத்தமுண்டா?

ரஜினி: என்னைப் பொறுத்தவரை ஜனங்கள் தரும் அவார்டை விடப் பெரிய விருது வேறு எதுவுமில்லை. என் படங்கள் நன்றாக ஓட வேண்டும். விநியோகஸ்தர்களும், தயாரிப்பாளர்களும் நன்றாய்ப் பணம் சம்பாதிக்க வேண்டும். அதுபோதும்; விருது ஏதும் தரப்படவில்லையே என்று நான் வருத்தப்பட்டதே கிடையாது; அதே சமயம் நான் அந்த விருதுகள் மதிப்பு இல்லாதவை என்றும் நினைக்கவில்லை.

நிருபர்: கலைஞனின் கலையுலக வாழ்க்கையில் வயது ஒரு தடையா?

ரஜினி: நோ... நடிகனுக்கு ரிடையர்மெண்ட், வயதைப் பொறுத்த விஷயமில்லை. வயதான பின்னர் கூட நடிக்கலாம்.... கதாநாயகனாகச் சண்டை போட்டு, டூயட் பாட முடியாமல் போகலாம். ஆனாலும் வயதுக்கேற்ற ரோல்களை ஏற்று நடிக்கலாமே!

நிருபர்: உங்களைச் சுற்றி நடக்கும் உலக விஷயங்கள் உங்களைப் பாதிக்கின்றனவா?

ரஜினி: உலகில் எங்கோ நடக்கிற விஷயங்கள் என்னைப் பாதிப்பதில்லை. நான் நேருக்கு நேர் சந்திக்கும் வறுமை, பசி, பட்டினி, வேலையில்லாத் திண்டாட்டம் இவை எல்லாம் என்னை மிகவும் பாதிக்கின்றன.

நிருபர்: அந்தப் பாதிப்பு உங்களை ஏதும் செய்யத் தூண்டுகிறதா?

ரஜினி: இப்படி கஷ்டப்படுகிறவர்களுக்காக ஏதாவது செய்ய வேண்டும் என்று கண்டிப்பாய் நினைக்கிறேன். நிச்சயமாய்ச் செய்யத்தான் போகிறேன்.

நிருபர்: அரசியல் கட்சியில் சேர்ந்தா?

ரஜினி: நான் இப்பவும் அரசியல்வாதி இல்லை; எதிர்காலத்திலும் ஆக மாட்டேன்! (சிரிக்கிறார்)

நிருபர்: கண்மூடித்தனமாய் 'ஹீரோ ஒர்ஷிப்' செய்கிறார்கள் இன்றைய சினிமா ரசிகர்கள்! இது சரியானதாய்த் தோன்றுகிறதா?

ரஜினி: சாதாரண சிவாஜி ராவ் என்பவனை இன்றைக்கு சூப்பர் ஸ்டார் ஆசனத்தில் கொண்டு போய் உட்கார வைத்திருக்கிறார்களே! யார்? ரசிகர்கள்! இன்றைக்கு எனக்காக உயிரையும் விடக் காத்திருக்கிறார்கள். ஏன்? கண்மூடித்தனமான ஹீரோ — ஒர்ஷிப் இல்லை அது. அன்பு — ஆத்மார்த்தமான ஈடுபாடு. அவர்களுக்காக என்ன வேண்டுமானாலும் நான் செய்யத் தயார்.



• ஸ்ரீ ராகவேந்திரர் என் ஆன்மீகக் குரு.

தேவையெனில் உயிரையும் கொடுப்பேன்.

நிருபர்: உங்களது பிஸியான வாழ்க்கைக்காக, குடும்ப வாழ்க்கையில் சில தியாகங்கள் செய்ய வேண்டியுள்ளதா?

ரஜினி: இப்போதெல்லாம் மிகச் சரியான முறையில் திட்டமிட்டு, வேலை செய்வதால் இரண்டுமே சந்தோஷமாய் — பிரச்னை இல்லாமல் நடக்கின்றன. ஆறு மணி வரை ஷூட்டிங். அதன் பின் வீடு. ஷூட்டிங்கில் வேலையை ஸின்சியராய்ச் செய்து விட்டு, வீட்டிற்குப் போய் விட்டால், நான் நடிகன் இல்லை. என் மனைவிக்குக் கணவன்; குழந்தைகளுக்குத் தகப்பன்.

நிருபர்: ஒரு தந்தை என்கிற முறையில், குழந்தைகளுக்கு எந்த அளவுக்குச் சுதந்திரம் கொடுக்கப்பட வேண்டும் என நினைக்கிறீர்கள்?

ரஜினி: ஓரளவுக்கு. பதினொன்று, பன்னிரண்டு வயது வரை கட்டுப்பாட்டிற்குள் வளர்க்கலாம். அதன் பின் உலக வாழ்க்கையைப் புரிந்து கொள்ளும் பக்குவம் வந்ததும், சுதந்திரமாய் விட்டு விட வேண்டும். தேவையெனில் ஆலோசனைகள் சொல்லலாம். என் குழந்தைகளுக்கு 'இண்டிவிஜுவாலிடி' (தனித்தன்மை) இருக்க வேண்டும் என நினைக்கிறேன். அதற்கேற்பச் சுதந்திரம் தரத் தயங்க மாட்டேன். என் குழந்தைகள் பிற்காலத்தில் இப்படி வர வேண்டும் என்கிற ஆசை எனக்கில்லை. அவர்களாக விருப்பப்பட்டு, சினிமாவுக்குள் நுழைந்தாலும் எனக்கு ஆட்சேபணை இல்லை.

நிருபர்: உங்கள் வாழ்க்கை, உங்களுக்குக் கற்றுத் தந்த பாடம் என்ன?

ரஜினி: மிகக் குறுகிய காலக் கட்டத்தில், வறுமை, பசி, பட்டினி — இந்த விளிம்பு; அதே போல் பணம், புகழ், பட்டம், அந்தஸ்து — இந்த விளிம்பு; இரண்டையுமே பார்த்த எனக்கு என்ன தெரிந்தது என்றால் திருப்தி என்பது பொருட்களில் கிடைக்காது. அது மனம் சம்பந்தப்பட்ட விஷயம். இன்ன பொருள் கிடைத்தால், நான் நிரந்தரமாய்த் திருப்தி அடைந்து விடுவேன் என்பது முட்டாள்தனம். காரணம் அந்தப் பொருள் கிடைத்த சில காலத்துக்குள்ளேயே, அந்தக்

திருப்தி மறைந்து விடும். கண்டக்டராய் இருந்த போது, நிறையப் பணம் சம்பாதிக்க வேண்டும். கார், பங்களா வாங்க வேண்டும் என்று கனவுகள் கண்டேன். அந்தக் கற்பனையில் ஏற்பட்ட சந்தோஷம், அவை நனவான போது கிடைத்தாலும், நிலைக்கவில்லை. எல்லாமே நிரந்தரமில்லாதவை. என் கடமைகளை நான் ஒழுங்காகச் செய்ய வேண்டும். அப்பாவுக்கு நல்ல பிள்ளையாய், மனைவிக்கு நல்ல புருஷனாய், பிள்ளைகளுக்கு நல்ல அப்பாவாய், நண்பர்களுக்கு நல்ல சிநேகிதனாய், நாட்டுக்கு நல்ல குடிமகனாய், யாரையும் துன்புறுத்தாமல், யாருக்கும் கெடுதல் நினைக்காமல் எந்த ஆசைகளையும் வைத்துக் கொள்ளாமல் வாழ்ந்தால் நிம்மதி நிச்சயம். 'எனக்கு மிகவும் பிடித்த வாசகம்: **Happiness begins when ambition ends.** ஆக, அபிலாஷைகள் குறையக் குறைய நிம்மதி — சந்தோஷம் அதிகமாகிறது. வாழ்க்கை ஒரு புத்தகம். அதன் முதல் சில பக்கங்களும், இறுதியில் சில பக்கங்களும் காணாமல் போயிருக்கின்றன. அவற்றைத் தேடுவதுதான் வாழ்க்கை. அதாவது, நாம் எங்கிருந்து வந்தோம், எங்கே போகப் போகிறோம் என்று நமக்குத் தெரியாது. அதை அறிய முயல்வதுதான் வாழ்க்கை ஃபிலாசஃபி — தத்துவம். அதை அறிய முயலுபவன்தான் தத்துவ ஞானி—ஃபிலாசபர். காணாமல் போன பக்கங்களைப் பற்றிக் கவலைப்படாமல், கிடைக்கிற பக்கங்களை மட்டுமே படிப்பவன் சாதாரண மனிதன்.

நிருபர்: நீங்கள் சொல்லும் நிம்மதி உங்கள் வாழ்க்கையில் இருக்கிறதா?

ரஜினி: ஓ! பர்ஃபெக்டாய் இருக்கிறது.

நிருபர்: கடைசியாய், இன்றைய சமுதாயத்தில் வன்முறை அதிகரித்திருக்க, சினிமாவும் ஒரு காரணம் என்று சொன்னீர்கள். சினிமாவில் — ரஜினியின் படங்களில் வன்முறை அதிகமாகவே உண்டு. ஆக, வன்முறை கூடாது என்று சொல்லும் ரஜினிகாந்த், மறைமுகமாய்ச் சமுதாயத்தின் வன்முறைக்குக் காரணமாகிறாரே?

ரஜினி: முன்பே சொன்னேன். சினிமா என் தொழில். வாழ்க்கையின் ஒரு பகுதி. எனவே நான் என்னுடைய உணர்ச்சிகளை, கொள்கைகளைச் சொல்ல அடுத்தவர்களின் சினிமாவைப் பயன்படுத்துவது நியாயமில்லையே! நான் நினைப்பதைச் செயல்படுத்தணும்னா துறவியாகி, இமாலயத்துக்குத்தான் போயாகணும். (சிரிப்பு) படங்களில் வன்முறை இருப்பது உண்மைதான். ஆனால் அநியாயத்துக்காக வன்முறையில் ஈடுபடுவதில்லையே! வன்முறையின் முடிவில் நடப்பது நல்லதுதானே?

— எஸ். சந்திரமௌலி.

படங்கள், மேலட்டை வண்ணப்படம்: யோகா










— ஏஜி. மோகன்.

# இன்று இரவு ஷோ

இதுவரை......

ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்வதற்காக விசேஷப் பயிற்சி பெற இந்திய விளையாட்டு வீரர்களும் வீராங்கனைகளும் பயிற்சியாளர்களும் பம்பாய் செல்கிறார்கள். பம்பாய் விமான நிலையத்திலிருந்து அவர்கள் ஹோட்டல் ஒபராய் டவர்ஸ்"க்குச் சென்று கொண்டிருக்கையிலேயே அவர்களில் இருவர் கொலை செய்யப்படுகின்றனர்.

'இந்தியக் கழுகுகள்' என்ற சமூக விரோத அமைப்பின் செயல் இது என்று தெரிய வருகிறது. 'இந்தியப் பாராளுமன்றம் உடனே கலைக்கப்பட வேண்டும்: இந்திய வீரர்கள் இங்கிலாந்தில் நடக்கவிருக்கும் ஒலிம்பிக்ஸ் போட்டிகளைப் பகிஷ்கரிக்க வேண்டும். இல்லாவிட்டால் மேலும் மேலும் கொலைகள் நிகழும்' என்று மிரட்டுகிறது இவ்வமைப்பு.

மத்திய விளையாட்டுத் துறை அமைச்சர் காமோத் பம்பாய் வருகிறார். பிரதமருக்கு விவரங்கள் தெரிவிக்கப்படுகின்றன. பிரதமர் அலுவலகம் பம்பாய் போலீஸை விரட்ட, அவர்கள் ஒலிம்பிக் வீரர்களை நகரின் மையத்தில், கமிஷனர் அலுவலகத்தின் அருகே உள்ள ஹோட்டல் காபிடலுக்கு இடம் மாற்றுகின்றனர்.

இதற்கிடையே கயல்விழி என்ற வீராங்கனை ஹோட்டல் மொட்டை மாடி அறையில் கட்டிப் போடப் படுகிறாள். நிகிலா என்ற நீச்சல் வீராங்கனை விளையாட்டு அரங்க நீச்சல் குளத்தில் பயிற்சி செய்யும் போது மின்சாரத் தாக்குதலுக்கு ஆளாகி இறந்து போகிறாள்.

சென்னையிலிருந்து, கிரைம் பிராஞ்சைச் சேர்ந்த விவேக், பம்பாய்க்கு வரவழைக்கப்படுகிறான். மனைவி ரூபலாவுடன் பம்பாய் வந்து சேரும் விவேக்கை இந்தியக் கழுகுகள் திரும்பிப் போகச் சொல்லி ஃபோனில் மிரட்டுகிறார்கள். விவேக் துணிந்து செயல்படுகிறான். முதல் காரியமாக, இந்தியக் கழுகுகளின் மிரட்டல் விஷயத்தை விளையாட்டு வீரர்களிடமிருந்து மறைக்கக் கூடாது; தெரிவித்துவிட வேண்டும் என்று முடிவெடுத்து அவ்வாறே செய்கிறான்.

## 11

**ம**றுநாள் காலை ஏழு மணி.

ஸ்டேடியத்தின் உள்ளேயிருந்த அந்த நீச்சல் குளத்தின் அருகே காரைக் கொண்டு போய் நிறுத்தி, கீழே இறங்கினான் விவேக். அவனைத் தொடர்ந்து இரண்டு போலீஸ் அதிகாரிகள் இறங்கினார்கள். எஸ்கார்ட்டில் இருந்த செக்யூரிடி ஆபீஸர் வர்மா சல்யூட்டோடு எதிர்கொள்ள, காவலுக்கு இருந்த மற்ற கான்ஸ்டபிள்கள் விறைப்புக்கு வந்து தளர்ந்தார்கள்.

விவேக் அவரை நெருங்கினான்.

"நீங்கள் மிஸ்டர் வர்மா?"

"எஸ்... ஸார்."

"சம்பவம் எப்படி நடந்தது....?"

வர்மா ஒரு நிமிஷ நேரத்தைச் செலவழித்து, நேற்றைய தினம் காலையில் நடந்த அந்த விபத்தைச் சொன்னார். விவேக் உன்னிப்பாய்க் கேட்டு விட்டு, நீச்சல் குளத்தின் ஓரமாய் இருந்த அந்த இரும்புக் கைப்பிடிகளை நோக்கிப் போனான். பூமியினின்றும் இரண்டு ஹூக் மாதிரி எழும்பியிருந்த அந்த கைப்பிடிகளைப் பற்றி வருடிக் கொண்டே கேட்டான்.

"கரெண்ட்டை இதன் மூலமா பாஸ் பண்ணித்தான் நிகிலாவைத் தீர்த்துக் கட்டியிருக்காங்க.... இல்லையா...?"

"ஆமாம்.. ஸார்."

"இந்த கைப்பிடிக்குள்ளே மின்சாரம் பாயற மாதிரி கனெக்‌ஷன் கொடுத்து, அந்த ஒயரைப் பூமிக்கடியில் மறைத்து... ஸ்டேடியத்துக்குப் பின்னாடி இருக்கிற ட்ரான்ஸ்பார்மர் வரைக்கும் கொண்டு போயிருக்காங்க?"

"ஆமாம்.... ஸார்."

"நீச்சல் குளத்தை 'செக்' பண்ணும் போது, செக்யூரிடி ஃபோர்ஸ் இதைக் கவனிக்கலையா...?"

"கவனிக்கலை ஸார்..."

"இது சம்பந்தமா விசாரணை ஏதும் பண்ணியிருக்கீங்களா?"

"ஈ.பி.க்குப் போய் ட்ரான்ஸ்பார்மரைப் பராமரிக்கிற இன்சார்ஜ் பொறுப்பில் இருக்கிறவரை விசாரிச்சேன்..."

"என்ன சொன்னார்...?"

"இரண்டு நாட்களுக்கு முன்பு வரை... இந்த மாதிரியான சில்மிஷம் ஏதும்... ட்ரான்ஸ்பார்மரில் தாம் பார்க்கவில்லை என்று சொன்னார்."

"இந்த நீச்சல் குளத்தைப் பராமரிக்கிற நபர் யார்?"

வர்மா திரும்பி — தொலைவில் நின்றிருந்த ஒரு நபரைக் கையசைத்துக் கூப்பிட்டார். அவன் ஓடோடி வந்தான். விவேக் சரளமாய் இந்தியில் பேசினான்.

"உம் பேரென்ன?"

ராஜேஷ்குமார்



திருடன்: குழந்தே, சமத்துக்கண்ணு இல்லே; இந்தா மிட்டாய்...! உங்க வீட்டு நகையெல்லாம் எங்கே வச்சிருக்கிறாங்க சொல்லு, பார்க்கலாம்!

குழந்தை: சேட்டுக் கடையிலதான்!

— கடுவை கோபால்சாமி.

"பரசுராம் ஸார்."

"இந்த நீச்சல் குளப் பராமரிப்பு உன்னோட பொறுப்பில்தானே இருக்கு....?"

"ஆமா ஸார்..."

"கிட்டத்தட்ட அம்பது மீட்டர் ஒயரை நீச்சல் குள லானிலிருந்து பூமிக்குக் கீழே புதைச்சு, பக்கத்து ட்ரான்ஸ்பார்மர் வரைக்கும் கொண்டு போயிருக்காங்க... உனக்கெப்படித் தெரியாம போச்சு...?"

அவன் கும்பிட்டான். "ஸார் என்னோட ட்யூட்டி நேரம் காலையில் ஆறு மணியிலிருந்து சாயந்தரம் ஆறு மணி வரைக்கும். ராத்திரி நேரங்கள்ல நான் இங்கே இருக்கிறதில்லை. அந்த நேரத்துலதான் இந்தக் காரியத்தை யாரோ பண்ணியிருக்காங்க."

"தரையைக் கொத்தித்தானே இந்த அம்பது மீட்டர் ஒயரையும் புதைச்சிருக்கணும்?"

"ஆமா ஸார்."

"நீ சொன்ன மாதிரி ராத்திரி நேரத்துல இந்த சம்பவம் நடந்திருந்தாலும் மறுநாள் காலையில நீ ட்யூட்டிக்கு வரும் போது கொத்தின இடம் உனக்கு வித்தியாசமாத் தெரியலையா...?"

"ஸார்... அவங்க ஒயரைப் புதைச்ச இடம்... நீச்சல் குளத்தையொட்டி இருக்கிற லான் பரப்புல. லான் பரப்பும் சிமெண்ட் தரையும் ஒண்ணு சேர்ற இடத்துல — மண்ணையும் புல்லையும் கொஞ்சமாய்க் கிளறி— வித்தியாசம் தெரியாதபடிக்குப் புதைச்சிருக்காங்க.. இதனால கொத்தின இடம் எனக்கு வித்தியாசமாத் தெரியலை..... மேலும் ஒரு நிமிஷம் விசாரித்த விவேக் மௌனமாய் போலீஸ் அதிகாரிகள் தொடர, நீச்சல் குளத்தைச் சுற்றிப் பார்த்து விட்டு, ஸ்டேடியத்துக்குப் பின்புறமாய் இருந்த ட்ரான்ஸ்பார்மரிடம் போனான். ட்ரான்ஸ்பார்மருக்குக் கொஞ்சம் தள்ளி — கொத்துக் கொத்தாய்ச் சில குடிசைகள்... தெரிந்தன.

"மிஸ்டர் வர்மா!"

"ஸார்...."

"அந்த குடிசைப் பகுதி ஜனங்ககிட்டே ஏதாவது விசாரணை நடத்தினீங்களா?"

"நடத்தினேன் ஸார்."

"என்ன சொன்னாங்க....?"

"சந்தேகத்துக்கு இடமளிக்கிற வகையில் யாரையும் ட்ரான்ஸ்பார்மர் பக்கம் பார்க்கலைன்னு சொன்னாங்க ஸார்."

"நிகிலா எலெக்ட்ரிக் ஷாக் வாங்கி இறக்கும் போது என்ன நேரம்...?"

"பத்து நாற்பது..."

"அந்த நேரத்தில் ட்ரான்ஸ்பார்மர் அருகே — யாராவது ஒரு நபர் இருந்துதான் மின்சார இணைப்பைக் கொடுத்திருக்க வேண்டும் இல்லையா?"

"ஆமாம்.... ஸார்."

"நிகிலா ஷாக் வாங்கி இறந்த பிறகு, எவ்வளவு நேரம் கழித்து ட்ரான்ஸ்பார்மர் அருகே போனீர்கள்?"

"சுமார் பதினஞ்சு நிமிஷம் கழித்து..."

"அதாவது இரும்புக் கைப்பிடியில் பொருத்தப்பட்டிருந்த ஒயரைக் கண்டுபிடித்து, புதைக்கப்பட்டிருந்த இடங்களைக் கிளறிக் கொண்டே போய், ட்ரான்ஸ்பார்மரைத் தொட உங்களுக்குப் பதினைந்து நிமிஷம் பிடித்திருக்கிறது...?"

"எஸ்... ஸார்."

"நீங்கள் ட்ரான்ஸ்பார்மர் அருகே போனதும் என்ன செய்தீர்கள்?"

"மின் ஒயரின் இணைப்பு ட்ரான்ஸ்பார்மருக்குப் போயிருப்பதைப் பார்த்ததும், எந்த நபராவது தட்டுப்படுகிறானா என்று பார்த்தேன்."

"யாரும் தட்டுப்படவில்லை...?"

"இல்லை..."

"ட்ரான்ஸ்பார்மருக்குப் பக்கத்தில் வாகனம் ஏதாவது நின்றதற்கான டயர் பதிவுகள் இருந்ததா?"

"நான் கவனிக்கலை ஸார்."

"இது ஒரு முக்கியமான பாயிண்ட். எப்படிக் கவனிக்காமல் விட்டீர்கள்?"

வர்மா பேசத் திணறினார்.

விவேக் தொடர்ந்து கேட்டான்.

"ட்ரான்ஸ்பார்மருக்குப் பக்கத்தில் அதைச் சுற்றியிருக்கிற மணல் பரப்பில் ஃபுட் பிரிண்ட்ஸ் ஏதாவது இருந்ததா?"

"ஃபாரன்ஸிக் ஆட்கள் வந்து பார்த்தாங்க ஸார். பட் ஃபுட்பிரிண்ட்ஸ் ஏதும் கிடைக்கலை..."

விவேக் அடுத்த கேள்விக்குப் போக உதடுகளை அசைத்த விநாடி, பத்து வயதில், பரட்டைத் தலையோடு அந்தப் பிச்சைக்காரச் சிறுவன் ஓடிவந்தான்.

"ஸாப்!"

மூச்சிரைக்க விவேக் எதிரில் வந்து நின்றான். கையில் ஒரு பழுப்புக் கவர். விவேக்கிடம் அதை நீட்டிக் கொண்டே இந்தியில் சொன்னான்:

"இந்தக் கடிதம் உங்களுக்கு..."

விவேக் வாங்கிக் கொண்டே கேட்டான்.

"யார்... கொடுத்தாங்க...?"

"பைக்ல வந்த ஒருத்தர். உங்ககிட்ட இந்த லெட்டரைக் கொடுக்கும்படியாச் சொல்லி — பத்து ரூபாயையும் கொடுத்துட்டுப் போனார் ஸாப்."

''எப்போ...?''

''இப்பத்தான் ஸாப்.''

''மிஸ்டர் வர்மா! அந்த பைக் அதிக தூரம் போயிருக்காது. பையனைக் கூட்டிக்கிட்டு உங்க பைக்ல சேஸ் பண்ணிப் பாருங்க.''

''எஸ்... ஸார்...'' வர்மா பையனைக் கூட்டிக் கொண்டு—ஸ்டேடியத்தின் ஓரமாய் நிறுத்தி வைத்திருந்த பைக்கை நோக்கி ஓடினார்.

விவேக் கவரின் வாயை உடைத்து—உள்ளேயிருந்த கடிதத்தைப் பிரித்தான். ஆங்கிலத்தில் டைப் அடித்த வாசகங்கள் வரிவரியாய் ஓடியிருந்தன.

இந்தியாவின் ஒப்பற்ற க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸர் விவேக் அவர்களுக்கு இந்தியக் கழுகுகளின் காலை வணக்கம். பம்பாய் வந்து சேர்ந்ததிலிருந்தே வெகு சுறுசுறுப்பாய் இருக்கிறீர்கள். பாராட்டுக்கள். நாங்கள் வைத்த இரண்டு கோரிக்கைகளையும் இந்திய அரசாங்கம் அலட்சியப்படுத்தியதைத் தொடர்ந்து—எங்களுடைய அதிர்ச்சி வைத்தியத்தைக் காட்ட ஆரம்பித்திருக்கிறோம். உங்கள் தரப்பில் மேலும் ஓர் உயிர் நஷ்டம். இன்று அதிகாலை சுமார் நான்கு மணி அளவில், அந்த உயிருக்கு விடுதலை கொடுத்தோம். இந்த லெட்டரைப் படித்து முடித்ததும், உங்களுடைய போலீஸ் பரிவாரத்தைக் கூட்டிக் கொண்டு நேரே போர்பந்தர் வாருங்கள். திருமூர்த்தி அபார்ட்மெண்ட்ஸ் உருவாகும் காலி மைதானத்திற்கு அப்பால் எருக்கிடங்கு ஒன்று வரும். அந்தக் கிடங்கின் வலது பக்கம் வரிசையாய்ச் சில குப்பைத் தொட்டிகள். அந்தக் குப்பைத் தொட்டிகளில் இடமிருந்து வலம் எட்டாவது தொட்டியில், உங்கள் தரப்பு ஆசாமி ஒருவர் மூச்சுவிட மறந்து, கழுத்தில் பாய்ந்துவிட்ட ஒரு தோட்டாவோடு கிடக்கிறார். நீங்கள் வரும்போது மறக்காமல்,



மார்ச்சுவரி வேன், டாக்டர், போலீஸ் நாய், ஃப்பாரன்சிக் ஆட்கள், இத்யாதிகளோடு வாருங்கள். நீங்கள் இந்த பம்பாய் மண்ணை மிதித்ததற்காக ஏதோ எங்களால் முடிந்த ஒரு சின்ன வரவேற்பு.

கடிதம் முடிந்து போயிருக்க, விவேக் முகம் இருண்டு போய் நிமிர்ந்தான். அதிகாரிகளில் ஒருவரைக் கூப்பிட்டான்.

"மிஸ்டர் கோபிநாத்! நாம் அவசரமாய்ப் போர்பந்தர் போக வேண்டும்..."

**ஜீ**ப் போர்பந்தரைத் தொட்ட போது எட்டு மணி.

போக்குவரத்து ஆரம்பமாகி அந்தப் பகுதி முழுவதும் கசகசப்பாய்த் தெரிந்தது. சிரமமான ஐந்து நிமிஷ பயணத்திற்குப் பின், திருமூர்த்தி அபார்ட்மெண்ட்ஸ் ஏராளமான டீ. வி. ஆன்டெனாக்களோடு வந்தது. ஜீப் நேரே வேகம் பிடித்துப் போக, காலி மைதானம் எதிர்ப்பட்டது. மைதானத்தின் குறுக்கைக் கடந்ததும், மூக்குக்குப் பிடிக்காத நெடியோடு, எருக்கிடங்கு பிரம்மாண்டமாய்த் தெரிய, விவேக் ஜீப்பை நிறுத்தும்படி சைகை காட்டினான்.

ஜீப் நின்றது.

விவேக் இறங்கினான்.

வலப்பக்கம் திரும்பிப் பார்த்தபோது, வரிசையாய்ப் பம்பாய் கார்ப்பரேஷனின் கனமான சிமெண்ட் தொட்டிகள்...... கண்ணுக்குச் சிக்கின.

அதிகாரிகள் பின் தொடர, அந்தக் குப்பைத் தொட்டிகளை நோக்கிப் போனான் விவேக். இருதயம் தவிப்பில் நொண்டியது. கழுத்தில் பிடரியில் ஏராளமாய் வியர்த்தது.

இடமிருந்து வலம் எட்டாவது தொட்டி. — கடித வாசகம் ஞாபகத்திற்கு வர, விவேக் தொட்டிகளை எண்ணிக் கொண்டே போனான்.

நான்கு.

ஐந்து.

ஆறு... ஏழு...

எட்டு.

எட்டாவது தொட்டியின் உள்ளே —

கஷ்டமான கோணத்தில்... சுவாசிக்க மறந்த பூபேஷ்!

(தொடரும்)

## அருள்வாக்கு

**ஒ**ரு விறகுக் கட்டு இருந்து அதைச் சுற்றிப் போட்ட கயிற்றுக் கட்டு முடிச்சு அவிழ்க்க முடியாமல் ஆனால் என்ன செய்வார்கள் தெரியுமா? கட்டு தளர்வதற்கு முதலில் கட்டிய கயிற்றை விட இறுக்கமாக அதை இன்னொரு கட்டுப் போட்ட மாதிரி சுற்றி நெருக்கிப் பிடித்துக் கொள்வார்கள். 'கட்டுப் போட்ட மாதிரி'தானே ஒழிய, முடிச்சுப் போட்டுக் கட்டியே விட மாட்டார்கள். இந்த இறுக்கத்தில் முதலில் முடிச்சுப் போட்டுக் கட்டின கட்டு தளர்ந்து விடும். அதை எடுத்துப் போட்டு விடலாம். அப்புறம், கட்டின மாதிரி ஆனால் கட்டியே விடாமல் சுற்றியிருக்கிற இன்னொரு கயிற்றையும் எடுத்து விட்டால் விறகுகள் கட்டற்று விடுபட்டு விடும். இதே மாதிரி மனஸின் க்ருத்ரிமத்தில் பல நினுசான கார்யங்களால் மணிமுடிச்சாகக் கட்டுப் போட்டுக் கொண்டு ஸம்ஸார பந்தத்தில் கிடக்கிற நாமும் அதிலிருந்து விடுபட, "சாஸ்திர கர்மா" என்று கட்டு மாதிரி உள்ளதைப் போட்டுக் கொள்ள வேண்டும். கன்னா பின்னா கட்டாக இல்லாமல் சாஸ்திர மூலமாக ரிஷிகள் ஒவ்வொருவருக்கும் ஸ்வதர்ம ரூபமாக அநேக கார்யங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ரிஷிகளின் மூலமாக ஈச்வரனே போட்ட ரூல்கள் இவை. நம் சொந்த ஆசையின் மேலே கன்னா பின்னா என்று கார்யங்கள் பண்ணிப் பண்ணி முடிச்சாகப் போட்டுக் கொண்டிருக்கிற கட்டு தளர்வதற்கு இந்த ஸ்வதர்ம கர்மக் கட்டு தான் உதவி புரிவது. இது அசல் கட்டு அல்ல, கட்டு மாதிரி நெரிக்கும். ஆனாலும் இதிலே நெரிபடுவது நம்முடைய தப்பான ஆசைகள்தான். நம்மை நல்லதில் விடுவிப்பதற்கே இந்த நெரிப்பு. இதைப் புரிந்து கொண்டால் சாஸ்திர கர்மாக்களை ரூல்கள் கொஞ்சங் கூடத் தப்பாமல் ஸந்தோஷமாகச் செய்து கொண்டே போகலாம்.



— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

# புதிய முதல்வருக்கு முத்தான யோசனைகள்

**புதிய முதல்வருக்கு மூன்று யோசனைகள் கூறுமாறு வாசகர்களைக் கேட்டிருந்தோம். முத்தான யோசனைகள் இங்கு இடம் பெறுகின்றன.**

- நிர்வாகத்தில் அரசியல் தலையீடு கூடவே கூடாது.
- ஆடம்பரச் செலவுகளைத் தவிர்த்தாக வேண்டும்.
- நாட்டின் முதுகெலும்பாய் விளங்கும் தொழிற் துறைக்கு முன்னுரிமை கொடுத்தே யாக வேண்டும்.

காரை சமரன், காரைக்கால்.

- மக்களைச் சோம்பேறிகளாக்கும், அனைத்து மாநிலப் பரிசுச் சீட்டுக்களும் ( தமிழ்நாடு உட்பட) தமிழகத்தில் விற்கப் படுவதைத் தடை செய்ய வேண்டும்.
- இலவச அறிவிப்புகளைச் செயல் படுத்தி, கஜானாவைக் காலியாக்காமல், முறையான திட்டங்கள் மூலம், வேளாண்மை மற்றும் தொழில்களை வளர்ச்சியடையச் செய்ய வேண்டும்.
- சட்டமன்ற உறுப்பினர்கள் மாதம் ஒரு முறையாவது தமது தொகுதிகளைச் சுற்றிப் பார்த்து, குறைகளை அரசுக்குத் தெரியப் படுத்தி, நிவர்த்தி நடவடிக்கைகளை மேற் பார்வையிட வேண்டும். — இது அரசு ஆணையாகப் பிறப்பிக்கப்பட வேண்டும்.

— கி. நாகராஜன், பழனி — 15.

- சட்டசபை கூடாத போது, எம்.எல்.ஏ.க்கள் தங்கள் தொகுதியில் மட்டுமே தங்க வேண்டும். சட்டசபைக் கூட்டங்களில் தவறாமல் கலந்து கொள்வதோடு, சபையின் கண்ணியம் கெடும் வகையில் நடப்பவர் கட்சியிலிருந்தும், சட்டசபையிலிருந்தும் வெளியேற்றப்பட வேண்டும். இதற்கு ஆளுங்கட்சி முதலில் வழிகாட்டலாமே!
- ஆட்சி ஏறிய பிறகு, ஆளுங்கட்சி உறுப்பினர்கள் ஆட்சியின் எந்த மட்டத்திலும் எந்த வகையிலும் தலையிட அனுமதிக்கக் கூடாது. அமரர் ராஜாஜியின் முன் உதாரணத்தைப் பின்பற்ற வேண்டும்.
- பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் அனைத்துவகுப்பினருள்ளும்ரூ.6000/—க்கும் குறைவான ஆண்டு வருமானம் பெறும் 'ஏழையர்கள்' என்று ஒரு பிரிவு சேர்க்கப் பட்டு விட்டால் பொருளாதாரத்தில் பின் தங்கியவரும் பயன் பெறுவர்.

ஆர். பி. சாரதி, சென்னை — 44.

- கல்வித் திட்டத்தில் குடிமைப் பண்புகளை (Civic sense) கட்டாயப் பாடமாக்கி, அனைத்துப் பள்ளிக் குழந்தைகளுக்கும், சொல்லித் தர வேண்டும்.
- நாட்டின் அனைத்து நகரங்கள், மற்றும் கிராமங்களுக்குக் குடி தண்ணீர் வசதியைச் செய்து கொடுக்க வேண்டும்.
- அனைத்து நகரங்களுக்கும் கழிவுநீர் அகற்று வசதியும், கிராம நிலங்களுக்கு நீர்ப் பாசன வசதியும் செய்து கொடுக்க வேண்டும்.

— மகிழ்நன், கடலூர்.

**கல்கி வாசகர்களின் யோசனைகள் புதிய முதல்வர் பார்வைக்கு அனுப்பி வைக்கப்படும். அருமையான யோசனைகள் அடுத்து வரும் இதழ்களிலும் இடம் பெறும்.**








## பூர்வ கதை

இராஜ இராஜ சோழன் என்று சரித்திரப் புகழ் பெற்ற அருள்மொழி வர்மன், சுந்தர சோழ சக்கரவர்த்தியின் இரண்டாவது மகன். குழந்தைப் பிராயத்தில் காவிரி நதியில் விழுந்துவிட்ட அவனை, ஒரு பெண்மணி காப்பாற்றினாள். அதன் பிறகு 'பொன்னியின் செல்வன்' என்றே அவன் அழைக்கப்பட்டு வந்தான்.

பொன்னியின் செல்வனும் அவன் தமக்கை குந்தவை தேவியும் ஒருவர்பால் ஒருவர் மிகுந்த அன்பு வைத்திருந்ததோடு, சோழ நாட்டு மக்களின் உள்ளம் கவர்ந்தவர்களாகவும் விளங்கினார்கள்.

குந்தவையின் தூண்டுதலின் பேரில் அருள்மொழி, இலங்கைப் போர்க்களத்துக்குச் சென்று வீரப் புகழ் பெற்றான். இலங்கை மக்களுக்கு உகந்த பல நற்பணிகள் செய்தான். பழைய புத்த விஹாரங்களையும் ஸ்தூபங்களையும் புதுப்பித்துப் புத்த சங்கத்தாரின் நன்மதிப்பையும் பெற்றான். அவர்கள் முன்வந்து அளித்த இலங்கை அரசுரிமையை மறுதளித்தான்.

இலங்கையில், வெறிகொண்டவள் போல் அலைந்து கொண்டிருந்த ஓர் ஊமைப் பெண்ணைச் சந்தித்த அருள்மொழி வர்மன், அவளே தன்னைக் காவிரி வெள்ளத்திலிருந்து காப்பாற்றியவள் என்று அறிந்தான். தனது தந்தைக்கும் அப்பெண்ணுக்கும் காதல் இருந்ததையும், அவளுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்ததையும், அவள் சித்திரங்கள் வரைந்து காட்டியதன் மூலம் தெரிந்து கொண்டான். அவ்விரண்டு குழந்தைகள் யாராயிருக்கக் கூடும் என்றும் யூகித்தான்.

சுந்தர சோழ சக்கரவர்த்தி பாரிச வாயுவால் பிடிக்கப்பட்டு மரணப் படுக்கையில் இருந்தார். அடுத்தாற்போல் பட்டம் யாருக்கு என்பது பற்றி நாடெங்கும் பேச்சு எழுந்தது. அவரது மூத்த புதல்வன் ஆதித்த கரிகாலன் காஞ்சியில் அவர் பிரதிநிதியாகவும் வடதிசைச் சேநாதிபதியாகவும் விளங்கி வந்தான்.

ஆதித்தன், மதுரையின் கடைசி மன்னனாகிய வீரபாண்டியனைப் போர்க்களத்தில் முறியடித்து, துரத்திச் சென்று கொன்றான். பாண்டியனைக் கொல்ல ஆதித்தன் வாளை ஓங்கியபோது, நந்தினி என்ற அழகிய பெண் அதைத் தடுக்க முயன்றாள். அப்பெண் சிறுமியாக இருந்தபோது ஆதித்தனின் விளையாட்டுத் தோழியாக இருந்து, பின் பாண்டி நாடு சென்றவள். அவள் பாண்டியனுக்காக மன்றாடியதையும் மீறி, பாண்டியனைக் கொன்றதால் கரிகாலனைக் குற்ற உணர்வு பிடித்தது.

அச்சமயம் சோழ நாட்டில் பழுவூர் சிற்றரசர்களான சின்னப் பழுவேட்டரையரும், பெரிய பழுவேட்டரையரும் பேரதிகாரம் செலுத்தி வந்தனர். இவர்களை மீறி யாரும் சுந்தர சோழரைப் பார்க்கக் கூட முடியாத சூழல் நிலவியது. வீர பாண்டியனின் மரணத்துக்குப் பின் நந்தினி, கிழவரான தனாதிகாரி பெரிய பழுவேட்டரையரை மணந்தாள். கிழவர் அவளுக்கு அடிமையானார். அவள் தூண்டுதலால் சுந்தர சோழரின் புதல்வர்களிடம் துவேஷம் கொண்டு, அன்னவர்களின் பெரிய தந்தையான சிவஞான கண்டராதித்தரின் புதல்வன் மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டத் திட்டம் தீட்டி, கடம்பூர் சம்புவரையர் மற்றும் பல சிற்றரசர்களின் ஆதரவையும் பெற்றார்.

மதுராந்தகனைச் சிவஞானச் செல்வனாக வளர்த்திருந்தாள் கண்டராதித்தரின் மனைவி செம்பியன் மாதேவி. அவனுக்கு அரசாளும் ஆசையை ஏற்படுத்தி, அதை வெறியாக வளரச் செய்தாள் நந்தினி.

சோழ நாட்டில் செல்வாக்கு மிகுந்த வேறு இரு சிற்றரசர்களான திருக்கோவலூர் மலையமானும் கொடும்பாளூர் பெரிய வேளார் பூதிவிக்கிரம கேசரியும் சுந்தர சோழரின் புதல்வர்களுக்கே அரசுரிமை கிடைக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தனர்.

சுந்தர சோழர், இராஜ்யம் தமக்குப் பிறகு பிளவுபடுவதை விரும்பாமல், தம் புதல்வர்களைத் தஞ்சைக்கு அழைத்துச் சமரச ஏற்பாடு செய்ய விரும்பினார். மதுராந்தகனுக்கே சிம்மாசனத்தை உரிமையாக்க அவர் தயாராயிருந்தபோதிலும் செம்பியன் மாதேவி அதற்கு ஒப்பவில்லை.

பழுவேட்டரையரின் ஆதிக்கத்திலிருந்த தஞ்சைக்குப் போக விரும்பாத ஆதித்த கரிகாலன், தந்தையின் கட்டளையை ஏற்பதற்குப் பதில் அவரைக் காஞ்சியில் தான் கட்டுவித்த பொன் மாளிகையில் வந்து தங்கும்படி அழைத்து, நண்பன் வந்தியத்தேவன் மூலமாக ஓலை அனுப்பினான். தஞ்சை செல்லும் வழியில், தனது நண்பனும், கடம்பூர் சம்புவரையர் மகனுமான கந்தமாறனின் இல்லத்தில் தங்கினான்

அமரர் கல்கி

வந்தியத்தேவன். அன்றிரவு ஆதித்த கரிகாலனுக்கெதிராகவும், மதுராந்தகனை மன்னனாக்கவும் அங்கு பல சிற்றரசர்கள் கூடிச் செய்து கொண்டிருந்த சதியைப் பற்றித் தெரிந்து கொண்டான். தஞ்சையை நோக்கிப் பயணத்தைத் தொடர்ந்தபோது சோழ நாட்டு முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒற்றன் ஆழ்வார்க்கடியான் அவனுக்கு அறிமுகமானான்.

சோழ குலத்திடமும் சோழ நாட்டிடமும் மிகுந்த விசுவாசம் கொண்டிருந்தார் அநிருத்தர். நாட்டில் நடந்து கொண்டிருந்த சதித் திட்டங்கள் சோழ நாட்டின் மகோன்னத வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் என்பதால் அவரும் சமரசத்தையே விரும்பினார்.

தஞ்சைக்கு ஓலை எடுத்துச் சென்ற வந்தியத்தேவன் குடந்தை ஜோதிடர் வீட்டில் குந்தவைப் பிராட்டியைச் சந்தித்தான். முதல் சந்திப்பிலேயே அவர்கள் ஒருவர்பால் ஒருவர் அன்பு கொண்டனர். குந்தவை விருப்பப்படி, இலங்கையிலிருந்த அருள்மொழி வர்மனுக்கு ஓலை எடுத்துச் சென்றான் வந்தியத்தேவன். அதில் 'இராஜ்யத்துக்குப் பேரபாயம் வந்திருக்கிறது; உடனே புறப்பட்டு வரவும்' என்று குந்தவை எழுதியிருந்தாள். இளவரசன் அருள்மொழி புறப்பட ஆயத்தமான போது, அண்ணா ஆதித்த கரிகாலன் அவனைக் காஞ்சிக்கு உடனே வரச் சொல்லியிருப்பதாகப் பார்த்திபேந்திரன் செய்தி கொண்டு வந்தான். சுந்தர சோழர் ஆணையின் பேரில் அவனைக் கைது செய்து கொண்டு போக வந்ததாகக் கூறிக் கொண்டு பழுவேட்டரையரின் ஆட்களும் வந்தார்கள்.

தந்தையின் கட்டளைப்படி நடப்பதே தன் முதல் கடமை என்று கருதி அருள்மொழி வர்மன் புறப்பட்டான். கப்பல் நடுக்கடலில் சூறாவளிக் காற்றில் சிக்கிக் கொண்டது. அச்சமயம், வந்தியத்தேவனைக் காப்பாற்ற அருள்மொழி கடலில் குதித்து விட்டான். இருவரும் பூங்குழலி என்னும் ஓடக்காரப் பெண்ணால் காப்பாற்றப்பட்டனர்.

இளவரசனுக்குக் குளிர் காய்ச்சல் கண்டுவிட, பூங்குழலியும் அவள் அத்தான் சேந்தன் அமுதனும் அவனை நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் பத்திரமாகக் கொண்டு சேர்த்தார்கள்.

பொன்னியின் செல்வன் கடலில் மூழ்கி விட்டதாகப் பரவிய வதந்தியினால் சோழ நாடு முழுவதும் மக்களிடையே பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டது.

வந்தியத்தேவன், பழையாறையிலிருந்த குந்தவைப் பிராட்டிக்கு அருள்மொழி பற்றிய உண்மையைத் தெரிவித்தான். அச்சமயம், கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்கு விருந்துக்கு அழைக்கப்பட்டிருந்த கரிகாலனுக்கு ஏதேனும் ஆபத்து நிகழக் கூடும் என்று யூகித்த குந்தவை, கரிகாலன் அங்கு சென்று நந்தினி, பெரிய பழுவேட்டரையர் போன்றவர்களைச் சந்திப்பதைத் தடுக்க வந்தியத்தேவனை அனுப்பினாள். தடுக்க முடியாவிட்டால் ஆதித்த கரிகாலனுடன் இருந்து அவனைப் பாதுகாக்கும்படி கூறி அனுப்பினாள்.

குந்தவையும் கொடும்பாளூர் இளவரசி வானதியும் அருள்மொழி வர்மனை இரகசியமாகச் சந்தித்தனர். அவன் இன்னும் சிறிது காலம் நாகை சூடாமணி விஹாரத்திலேயே இருப்பது நல்லது என்று குந்தவை கூறினாள். வானதிக்குத் தன் பேரில் இருந்த காதலை அருள்மொழி வர்மன் புரிந்து கொண்டான்.

கடம்பூர் செல்லும் வழியில், திருப்புறம்பயம் பள்ளிப்படைக் காட்டில் வந்தியத்தேவன் மற்றொரு சதியைப் பற்றி அறிந்து கொண்டான். நந்தினியும் மந்திரவாதி ரவிதாஸனும் அவர்களுடைய கூட்டாளிகளும் ஒரு சிறுவனைச் சிம்மாசனத்தில் அமர்த்தி, அவனைச் சூழ்ந்து நின்று சபதம் எடுத்துக் கொண்டார்கள். அவனைப் பாண்டிய இளவரசன் என்று கருதுகிறார்கள் என்றும் சோழர் வசப்பட்ட பாண்டிய நாட்டை மீட்டு, மீண்டும் பாண்டிய சாம்ராஜ்யத்தை அவர்கள் ஸ்தாபிக்க எண்ணுகிறார்கள் என்றும் இதற்காக ஒரே சமயத்தில் பல கொலைகளைப் பல முனைகளில் அவர்கள் செய்ய எண்ணுகிறார்கள் என்றும் வந்தியத்தேவன் புரிந்து கொண்டான். அக்கூட்டத்தாரிடம் பிடிபட்ட வந்தியத்தேவனிடம் ஏனோ நந்தினி இரக்கம் கொண்டு அவனை ரவிதாஸனின் கொலை வாளிலிருந்து தப்புவித்தாள். கட்டுண்டு கிடந்த வந்தியத்தேவனை ஆழ்வார்க்கடியான் விடுவிக்க, இருவரும் கடம்பூர் நோக்கிச் சென்றார்கள்.

கந்தமாறனும் பார்த்திபேந்திரனும் உடன் வர, ஆதித்த கரிகாலன் கடம்பூர் நோக்கிச் சென்றான். தாத்தா மலையமானின் அறிவுரையை மீறி, கடம்பூர் மாளிகைக்குச் செல்ல முடிவெடுத்தான். அங்கு நந்தினியைச் சந்தித்து மன்னிப்புக் கேட்க எண்ணினான்.

கடம்பூர் நோக்கிச் செல்கையில் ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் ஐயனார் கோவில் ஒன்றினை அடைந்தனர். அக்கோவிலிலிருந்து ஒரு சுரங்கப் பாதை கடம்பூர் அரண்மனைக்குச் செல்வதைக் கணித்த வந்தியத்தேவன், அதன் வழியே கடம்பூர் அரண்மனையை அடைந்து, சம்புவரையர் மகள் மணிமேகலையைச் சந்தித்தான். அவளுக்குத் தன் பேரில் காதல் இருப்பதைப் புரிந்து கொண்டான். அரண்மனையிலிருந்து தப்பிச் சென்று மீண்டும் ஆழ்வார்க்கடியானுடன் சேர்ந்து கொள்ள, இருவருமாகக் கடம்பூர் நோக்கி வந்து கொண்டிருந்த ஆதித்த கரிகாலன், கந்தமாறன், பார்த்திபேந்திரன் ஆகியோரை எதிர்கொள்ளப் புரவிகளில் புறப்பட்டனர்.

வந்தியத்தேவனைப் பார்த்ததும் அவனைச் சிநேகத் துரோகி என்றும் ராஜத் துரோகி என்றும் குற்றம் சாட்டினர் கந்தமாறனும் பார்த்திபேந்திரனும். நிகழவிருந்த கைகலப்பை ஆதித்த கரிகாலன் கடுமையான எச்சரிக்கை மூலம் அடக்கிவிட்டு, நிகழ்ந்த உண்மைகள் குறித்து வந்தியத்தேவனை விசாரிக்கலானான்.



# அத்தியாயம் 14

## கனவு பலிக்குமா?

நந்தினி மணிமேகலையின் முகவாயைச் சற்று நிமிர்த்துப் பிடித்துக் கொண்டு அவளுடைய மலர்ந்த கண்களை ஊடுருவி நோக்கினாள்.

''என் கண்மணி! உன் அந்தரங்கத்தை நீ என்னிடம் சொல்லாமல் வைத்துக் கொள்வதே நல்லது. பார்க்கப் போனால், உனக்கு நான் பழக்கமாகி முழுமையாக ஒரு நாள் கூட ஆக வில்லை. நெடுநாள் பழகிய தோழிகளிடந்தான் அந்தரங்கத்தைச் சொல்ல வேண்டும்'' என்றாள்.

''இல்லை, அக்கா! உங்களைப் பார்த்தால் எனக்கு வெகுநாள் பழக்கமான தோழி மாதிரியே தோன்றுகிறது. யாரிடமும் சொல்லாத விஷயத்தைத் தங்களிடம் சொல்லும்படி என் உள்ளம் தூண்டுகிறது. யாரிடமும் கேட்கக் கூடாத காரியத்தைத் தங்களிடம் கேட்கும் தைரியமும் உண்டாகிறது......''

''அப்படியானால் கேளடி கண்ணே!''

''உருவெளித்தோற்றம் என்று கதைகளில் சொல்லுகிறார்களே, அது உண்மையாக ஏற்படக் கூடுமா, அக்கா? நம் எதிரில் ஒருவர் இல்லாத போது அவர் இருப்பது போலவே தோன்றுமா?''

''சில சமயங்களில் அப்படித் தோன்றும். ஒருவரிடம் நாம் அதிகமான ஆசை வைத்திருந்தால், அவருடைய உருவம் எதிரில் இல்லா விட்டாலும் இருப்பது போலத் தோன்றும். ஒருவரிடம் அதிகமான துவேஷம் வைத்திருந்தால் அவருடைய உருவமும் தோற்றம் அளிக்கும். மாயக் கண்ணனுடைய கதை நீ கேட்டதில்லையா, மணிமேகலை? ஏன்? நாடகம் கூடப் பார்த்திருப்பாயே? கம்ஸனுக்குக் கிருஷ்ணனின் பேரில் ரொம்பத் துவேஷம். ஆகையால் கண்ட இடமெல்லாம் கிருஷ்ணனாகத் தோன்றியது; கத்தியை வீசி வீசி ஏமாந்து போனான். நப்பின்னை என்னும் கோபிகைக்குக் கண்ணன் மீது ரொம்ப ஆசை. அவளுக்கும் கண்ணன் உருவம் இல்லாத இடத்திலெல்லாம் தோன்றுமாம். தூணையும் மரத்தையும் நதியின் வெள்ளத்தையும் கண்ணன் என்று கட்டித் தழுவிக் கொள்ளப் போய் ஏமாற்றமடைவாளாம்! அடியே, மணிமேகலை! உன்னை அந்த மாதிரி மயக்கி விட்ட மாயக் கண்ணன் யாரடி?''

''அக்கா! முதன் முதலாக நாலு மாதத்துக்கு முன்னால்தான் அவரை நான் நேரில் பார்த்தேன். அதற்கு முன்னால் என் தமையன் கந்தமாறன் அவரைப் பற்றி அடிக்கடி சொல்லியிருந்தான். அப்போதெல்லாம் அவர் உருவம் என் கண் முன் தோன்றுவதில்லை. ஒரு தடவை பார்த்த பிறகு அடிக்கடி என் கனவில் அவர் தோன்றி வந்தார். பகலிலும் சில சமயம் எதிரில் அவருடைய உருவம் நிற்பது போலிருக்கும்......''

''நேற்றுக்கூட அந்த மாயாவியின் உருவெளித் தோற்றத்தை நீ கண்டாய் அல்லவா?''

''ஆம், அக்கா! உங்களுக்கு எப்படித் தெரிந்தது?''

''என்னிடம் மந்திர சக்தி உண்டு என்பதைப் பற்றி உனக்கு யாராவது சொல்லவில்லையா?......''

''ஆம்; சொன்னார்கள். அது உண்மைதானா, அக்கா?''

''நீயே பரீட்சித்துத் தெரிந்துகொள். உன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அந்த யௌவன சுந்தர புருஷன் யார் என்று வேண்டுமானால், என் மந்திர சக்தியினால் கண்டு சொல்லட்டுமா?''

''சொல்லுங்கள், பார்க்கலாம். எனக்கும் அவர் பெயரைச் சொல்லக் கூச்சமாயிருக்கிறது.''

நந்தினி சிறிது நேரம் கண்ணிமைகளை மூடிக் கொண்டிருந்து விட்டுத்

திறந்து, "உன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட ஆசைக் காதலன் வாணர் குலத்தில் வந்த வல்லவரையன் வந்தியத்தேவன்! இல்லையா?" என்றாள்.

"அக்கா! உங்களிடம் மந்திர சக்தி இருப்பது உண்மைதான்!" என்றாள் மணிமேகலை.

"அடி, பெண்ணே! எப்போது உன் உள்ளத்தை அவ்வளவு தூரம் ஒருவருக்குப் பறிகொடுத்து விட்டாயோ, அப்போது ஏன் உன் தமையனிடம் அதைப் பற்றிச் சொல்லவில்லை? மதுராந்தகருக்கு ஆசை காட்டுவானேன்? கரிகாலரை இங்கே தருவித்து வீண் பிரயத்தனம்செய்வானேன்? என்னை அநாவசியமாக இங்கே வரவழைப்பானேன்?"

"அக்கா! என் தமையன் கந்தமாறனுக்கு அவரைப் பிடிக்கவில்லை....."

"அழகாயிருக்கிறது! உன் தமையனா கல்யாணம் செய்து கொள்ளப் போகிறான்? ஆனால் கந்தமாறன்தானே வந்தியத் தேவனைப் பற்றி உனக்குச் சொன்னான் என்றாய்? இங்கே அவனைக் கூட்டிக் கொண்டு வந்ததும் உன் தமையன் தானே?"

"ஆமாம்; கந்தமாறன்தான் அவரைப் பற்றிச் சொன்னான். அந்தப் புரத்துக்கு ஒரு நாளைக்கு அழைத்துக் கொண்டும் வந்தான். ஆனால் பிற்பாடு அவன் மனம் மாறிவிட்டது. அதற்குக் காரணமும் இருக்கிறது. தஞ்சாவூரில் என் தமையனை அவர் கத்தியால் முதுகில் குத்தி விட்டாராம். அக்கா! உங்கள் அரண்மனையிலே என் தமையன் காயத்தோடு படுத்துக் கிடந்தானாமே? உங்கள் அன்பான பராமரிப்பினால்தான் அவன் உயிர் பிழைத்து எழுந்தானாமே?"

"நான் செய்ததை உன் தமையன் அதிகப்படுத்திக் கூறுகிறான். அது போனால் போகட்டும். இப்போது நீ என்ன செய்வாய்? உன் மனத்தைக் கவர்ந்தவன் இப்படி உன் தமையனுக்கு விரோதியாகி விட்டானே?"

"ஆனால் இவர் என்ன சொல்கிறார், தெரியுமா?......"

"இவர் என்றால், யார்?"

"அவர்தான்! நீங்கள் சற்று முன் பெயர் சொன்னீர்களே, அவர்தான்! கந்தமாறனை அவர் குத்தவேயில்லையென்று ஆணையிடுகிறார். வேறு யாரோ குத்தித் தஞ்சாவூர் கோட்டை மதில் ஓரத்தில் போட்டிருந்தார்கள் என்றும், அவர் எடுத்துக் கொண்டு போய்க் காப்பாற்றியதாகவும் சொல்லுகிறார்..."

"இதை எப்போதடி அவர் உனக்குச் சொன்னார்?"

"நேற்றுத்தான்!......"

"நேற்று அந்த வந்தியத்தேவனை நீ நேரில் பார்த்தாயா, என்ன? அவனுடைய உருவெளித் தோற்றத்தைக் கண்டதாகவல்லவா கூறினாய்?"

"அதுதான் அக்கா, எனக்கு ஒரே மனக்குழப்பமாயிருக்கிறது. நேற்று நான் பார்த்தது அவரா, அல்லது அவருடைய உருவெளித்தோற்றமா என்று தெரியவில்லை. நேற்று நடந்தவற்றை எண்ணினால், எல்லாம் ஒரு கனவு மாதிரி இருக்கிறது. அக்கா! சில சமயம் மனிதர்கள் செத்துப்போனால் அவர்களுடைய ஆவி வந்து பேசும் என்று சொல்லுகிறார்களே, அது உண்மையா?" — இந்தக் கேள்வியைக் கேட்டபோது மணிமேகலையின் குரலில் அளவிலாத பீதி தொனித்தது.

நந்தினியின் உடலும் நடுங்கிற்று. எங்கேயோ உச்சி மேட்டைப் பார்த்த வண்ணம் "ஆம்; அது உண்மைதான்! அற்பாயுளில் மாண்டவர்களின் ஆவி அப்படி உயிரோடிருப்பவர்களை வந்து சுற்றும். ஒருவருடைய தலையை வெட்டிக் கொன்று விட்டார்கள் என்றால், சில சமயம் தலைமட்டும் வரும். சில சமயம் உடம்பு மட்டும் தனியாக வரும். இன்னும் சில சமயம் இரண்டும் தனித் தனியாக வந்து 'பழி வாங்கினாயா?' என்று கேட்கும்!" என்றாள்.

பிறகு மணிமேகலையைப் பார்த்து உரத்த குரலில், "அடி பெண்ணே! நீ எதற்காக இந்தக்கேள்வி கேட்டாய்! உன் காதலனுக்கு அப்படி ஏதாவது நேர்ந்திருக்கும் என்று பயப்படுகிறாயா? உன் மனத்தில் இந்தச் சந்தே

கத்தை யார் கிளப்பி விட்டார்கள்?'' என்றாள்.

''இந்த அரண்மனையின் ஆவேசக்காரன் ஒருவன் இருக்கிறான். அவனைக் கூப்பிட்டு அனுப்பினேன். அவனை யாரோ நேற்றிரவு அடித்துப் போட்டு விட்டார்களாம். அவனுக்குப் பதிலாக அவன் பெண்டாட்டி தேவராட்டி வந்தாள். அவள்தான் சொன்னாள்......''

''சீச்சீ! அதையெல்லாம் நீ நம்பாதே!''

''எனக்கும் நம்பிக்கைப்படவில்லை. வெறும் ஆவி வடிவமாயிருந்தால், தொட முடியாதவல்லவா, அக்கா!''

''ஆவியையும் தொட முடியாது; உருவெளித் தோற்றத்தையும் தொட முடியாது. நீ ஏன் கேட்கிறாய்! உன் உள்ளத்தைக் கவர்ந்தவனை நீ நேற்றுத் தொட்டுப் பார்த்தாயா, என்ன?''

''அதுதான் ஒரே குழப்பமாயிருக்கிறது. தொட்டுப் பார்த்தது போலவும் இருக்கிறது; ஆனால் வேறு சில விஷயங்களை நினைத்துப் பார்த்தால் சந்தேகமாகவும் இருக்கிறது.''

''நேற்று நடந்ததையெல்லாம் விவரமாகச் சொல்லடி பெண்ணே! நான் உன் சந்தேகத்தை நிவர்த்தி செய்கிறேன்!''

''ஆகட்டும், அக்கா! நான் ஏதாவது முன் பின்னாக உளறினால் கேள்வி கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்!'' என்றாள் மணிமேகலை. பிறகு அவள் கூறினாள்: — ''நேற்று நான் கிட்டத்தட்ட இதே நேரத்தில் இங்கே இருந்தேன். என் தமையன் சொல்லிப் போயிருந்தபடி தங்களுக்கு இங்கே வேண்டிய சௌகரியம் எல்லாம் பணிப் பெண்கள் சரியாகச் செய்திருக்கிறார்களா என்று கவனிப்பதற்காக வந்தேன். ஒருமுறை, இதோ இருக்கும் கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன்!......''

''உன் அழகை நீயே பார்த்துக் கொண்டிருந்தாயாக்கும்...''

''அப்படியொன்றும் இல்லை, அக்கா! என் முக இலட்சணம் எனக்குத் தெரியாதா, என்ன?''





''உன் முக லட்சணத்துக்கு என்ன குறைவு வந்தது? ரதியும் இந்திராணியும் மேனகையும் ஊர்வசியும் உன்னைப் பார்த்துப் பொறாமைப்பட மாட்டார்களா?''

''அவர்கள் எல்லாரும் உங்கள் கால் தூசி பெற மாட்டார்கள், அக்கா!''

''சரி, சரி! மேலே சொல்! கண்ணாடியில் உன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாய்.....''

''அப்போது திடீரென்று இன்னொரு முகம் கண்ணாடியில் தெரிந்தது. என் முகத்துக்கு அருகில் தெரிந்தது....''

''அது உன் காதலன் முகந்தானே!''

''ஆமாம்; எனக்குத் தூக்கி வாரிப் போட்டது...''

''எதற்காகத் தூக்கிவாரிப் போட வேண்டும்? நீதான் அடிக்கடி அவனுடைய முகத்தைக் கனவில் பார்ப்பதுண்டு என்று சொன்னாயே? உருவெளித் தோற்றத்தைக் காண்பதுண்டு என்றும் கூறினாயே?''

''அதற்கும் இதற்கும் கொஞ்சம் வித்தியாசம் இருந்தது. கனவில் வரும்போது எதிரே சற்றுத் தூரத்தில் தெரியும். உருவெளித் தோற்றத்திலும் அப்படித்தான். ஆனால் இங்கே பின்னாலிருந்து, சொல்லக் கூச்சமாயிருக்கிறது....''

''பாதகமில்லை, சொல்லடி கள்ளி!''

''பின்னாலிருந்து கன்னத்தில் முத்தமிட வருகிறதைப் போல் இருந்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். ஒருவரும் இல்லை. பிறகு கண்ணாடியிலும் அந்த முகம் தெரியவில்லை. எனக்கு ஒரு சந்தேகம் உண்டாயிற்று. இந்த அறைக்குப் பக்கத்தில் உள்ள வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவை உங்களுக்குத் திறந்து காட்டினேன் அல்லவா? நேற்று, கண்ணாடி அந்தக் கதவுக்கு நேரே வைத்திருந்தது. ஆகையால் அந்தக் கதவைத் திறந்து வேட்டை மண்டபத்திலிருந்து யாராவது எட்டிப் பார்த்திருப்பார்களோ என்று தோன்றியது. அப்படியிருக்க முடியாது என்றும் எண்ணினேன். அன்

னிய புருஷன் ஒருவன் அந்த வேட்டை மண்டபத்தில் எப்படி வந்திருக்க முடியும்? ஆயினும் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகக் கதவைத் திறந்து வேட்டை மண்டபத்துக்குள் போய்ப் பார்த்தேன்....''

நந்தினி இதற்குள் ஆர்வத்துடன் கேட்கத் தொடங்கியிருந்தாள். ''வேட்டை மண்டபத்தில் அந்தத் திருடன் ஒளிந்திருந்தானா? அகப்பட்டுக் கொண்டானா?'' என்று கேட்டாள்.

''என்ன அக்கா, அவரைத் 'திருடன்' என்கிறீர்களே?''

''திருடன் என்றால், நிஜத் திருடனா? உன் மனத்தைக் கவர்ந்த திருடனைச் சொன்னேன் அடி! அவன் வேட்டை மண்டபத்தில் இருந்தானா?''

''அதுதானே அதிசயம்! அவர் அங்கே இல்லை. அதற்குப் பதிலாக எங்கள் அரண்மனைப் பணியாள் இடும்பன்காரி அந்த அறையைச் சுத்தம் செய்து கொண்டிருந்தான். அவனுடைய முகம் அய்யனார் கோவில் வாசலில் உள்ள காடு வெட்டிக் கருப்பன் முகம் மாதிரி இருக்கும். 'இங்கே வேறு யாராவது வந்ததுண்டா?' என்று கேட்டேன். 'இல்லை' என்று சாதித்து விட்டான்....''

''அவன் பொய் சொல்லியிருப்பான் என்று கருதுகிறாயா?''

''அது என்னமோ எனக்குத் தெரியாது. ஆனால் இன்னொரு ஆள் அந்த மண்டபத்தில் ஒளிந்திருப்பதாகத் தோன்றியது. 'திருட்டு தானே வெளியாகட்டும்' என்று நான் இந்த அறைக்குத் திரும்பி வந்து விட்டேன்...''

''திருட்டு வெளியாயிற்றா?''

''கேளுங்கள்! நான் இந்த அறைக்குள் வந்து வேட்டை மண்டபத்துக்குள் ஏதாவது பேச்சுக் குரல் கேட்கிறதா என்று கவனித்துக் கொண்டிருந்தேன். பேச்சுக் குரல் கேட்டது. தடபுடலாக ஏதோ விழுகிற சத்தமும் கேட்டது. நான் என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கும் போதே இந்தக் கதவு அசைந்தது. நான் விளக்கை மறைத்து வைத்து விட்டுக் காத்துக் கொண்டிருந்தேன். இந்தக் கதவிலேயே வட்டமான ஒரு சிறிய உட்கதவு இருக்கிறது. அதைத் திறந்து கொண்டு ஓர் உருவம் இங்கே வரப் பார்த்தது. 'அபயம்! அபயம்! என்னைக் காப்பாற்று!' என்று குரல் கேட்டது. குரலும் உருவமும் அவரைப் போல் தோன்றியபடியால், அவர் இந்த அறையில் வருவதற்கு உதவி செய்து விட்டு விளக்கைப் போட்டேன். பார்த்தால் அவரே தான்!''

''மணிமேகலை! இது என்ன அதிசயமடி! விக்கிரமாதித்யன் கதையைப் போல அல்லவா இருக்கிறது?''

''இன்னும் கேளுங்கள்! நாலு மாதமாகக் கனவில் கண்டு வந்தவரை நேரில் பார்த்ததும் என் உள்ளம் பூரித்தது; உடம்பு சிலிர்த்தது. 'ஆனால் கள்ளக் கோபத்துடன் அவரிடம் பேசினேன். 'பெண்கள் வசிக்கும் அந்தப்புரத்தில் எப்படி அவர் திருட்டுத்தனமாகப் பிரவேசிக்கலாம்?' என்று கேட்டேன். அவரைக் கொல்லுவதற்காக் யாரோ சிலர் துரத்திக் கொண்டு வருவதாகக் கூறினார். 'உயிருக்குப் பயந்தோடும் பயங்கொள்ளி' என்று பரிகசித்தேன். அதற்குத் தம்மிடம் ஆயுதம் இல்லை என்று சமாதானம் கூறினார். பிறகு தான் என் தமையனை அவர் முதுகில் குத்தியதைப் பற்றிப் பிரஸ்தாபித்தேன், 'இல்லவே இல்லை' என்று சத்தியம் செய்தார், அக்கா!''

''நீயும் அதை நம்பிவிட்டாயாக்கும்!''

''அப்போது நம்பும்படியாகத்தான் இருந்தது. ஆனால் பிறகு நடந்ததையெல்லாம் யோசிக்கும் போது எதை நம்புவது, எதை நம்பாமலிருப்பது என்றே தெரியவில்லை.....''

''பிறகு இன்னும் என்ன அதிசயம் நடந்தது?''

''அவருடன் பேசிக் கொண்டிருக்கும்போதே என் ஒரு காதினால் அடுத்த அறையில் ஏதாவது சத்தம் கேட்கிறதா என்று கவனித்துக் கொண்டிருந்தேன். பல பேர் நடமா






— ரா. ரகோத்தமன்.

டும் சத்தமும் பேச்சுக் குரல்களும் கேட்டன. ஆகையால் அவரைக் கொல்வதற்கு யாரோ தொடர்ந்து வருகிறார்கள் என்பது உண்மையாகவே இருக்கும் என்று எண்ணிக் கொண்டேன். கேளுங்கள், அக்கா! அந்தச் சமயத்தில் இந்தப் பேதை மனம் எப்படியாவது அவரைக் காப்பாற்ற வேண்டும் என்று உறுதி கொண்டது. அவரைக் கொல்ல வருகிறவர்கள் யார் என்றும் தெரிந்து கொள்ள விரும்பினேன். இடும்பன்காரி இதற்கெல்லாம் உட்கையாக இருப்பானா, அப்படியானால் அவன் இவருக்கு உட்கையா, இவரைக் கொல்ல வருகிறவர்களுக்கு உட்கையா என்றும் அறிய விரும்பினேன். வேட்டை மண்டபத்துக்குள் வரும் இரகசியச் சுரங்க வழி இவ்வளவு பேருக்குத் தெரிந்திருப்பதை நினைத்துத் திகில் உண்டாயிற்று. அதிலும் நீங்கள் இங்கே தங்கப் போகிறீர்கள் என்பதை எண்ணிய போது கவலை அதிகமாயிற்று. தகப்பனாரைக் கூப்பிட்டனுப்பலாம் என்று நினைத்தால், அதற்கும் தைரியம் வரவில்லை. இவர் அந்தப்புரத்துக்குள் வந்திருப்பதைத் தகப்பனார் பார்த்தால், உடனே இவர் உயிருக்கே ஆபத்து வந்து விடும். ஆகையால் இவரை இங்கேயே சற்று இருக்கும்படி சொல்லி விட்டு, வேட்டை மண்டபத்திற்குள் இருப்பவர்கள் யார் என்று பார்த்து விட்டு வருவதற்காகக் கதவைத் திறந்து கொண்டு போனேன். உள்ளே ஐந்தாறு ஆட்கள் மூலைக்கு மூலை சுவர் ஓரமாக இருந்தார்கள். என்னைப் பார்த்து விட்டு அவர்கள் பிரமித்து நின்றதாகத் தோன்றியது. அவர்களை அவ்விதம் பார்த்ததில் என் மனத்திலும் சிறிது ப்யம் உண்டாயிற்று. அந்தப் பயத்தைப் போக்கிக் கொண்டு கடுங் கோபத்தை வரவழைத்துக் கொண்டு, அவர்கள் யார் என்று கேட்பதற்காக வாய் எடுத்தேன். இதற்குள், இந்த அறையில் என் தோழி சந்திரமதி மற்றொரு கதவு வழியாகப் புகுந்து 'அம்மா! அம்மா!' என்று கூப்பிட்டுக் கொண்டு வந்தாள். இவர் இங்கே இருப்பது எனக்கு உடனே நினைவு வந்தது. சந்திரமதி இவரைப் பார்த்து விட்டுக் கூச்சல் போடப் போகிறாளே என்று பயந்து போனேன். வேட்டை மண்டபத்துக்குள் இருப்பவர்களை மறுபடி பார்த்துக் கொள்ளலாம் என்று திரும்பினேன். சந்திரமதியையும் வழி மறித்து அழைத்துக் கொண்டு இந்த அறைக்குள் வந்து பார்த்தேன். இங்கே அவரைக் காணவில்லை. மாயமாய் மறைந்து போய் விட்டார். 'யாராவது இங்கே இருந்தார்களா?' என்று சந்திரமதியைக் கேட்டேன். தான் பார்க்கவில்லை என்றாள். இன்னும் சிறிது தேடிப் பார்த்து விட்டு மறுபடி வேட்டை மண்டபத்துக்குள் போனேன். அங்

கேயும் நான் சற்று முன் பார்த்தவர்கள் யாரும் இல்லை. இடும்பன்காரி மாத்திரம் முன்போலவே அறையைச் சுத்தம் செய்து கொண்டிருந்தான். 'சற்று முன்னால் இங்கே வந்திருந்தவர்கள் யார்? அவர்கள் இப்போது எங்கே?' என்று கேட்டேன். இடும்பன்காரி 'இங்கே ஒருவருமே வரவில்லையே, அம்மா!' என்று ஒரே சாதிப்பாகச் சாதித்தான். அவன் வார்த்தையை என்னால் நம்ப முடியவில்லை. என் தோழி சந்திரமதியோ என்னைப் பரிகாசம் பண்ண ஆரம்பித்து விட்டாள். 'அக்கா! இன்றைக்கு உங்களுக்கு ஏதோ சித்தப்பிரமைதான் பிடித்திருக்கிறது! ஆள் இல்லாத இடங்களிலெல்லாம் ஆள் இருப்பதாகத் தோன்றுகிறது!'' என்றாள். பிறகு நீங்கள் எல்லாரும் கோட்டை வாசலை நெருங்கி வந்து கொண்டிருப்பதாகத் தெரிவித்தாள். தங்களை வரவேற்பதற்காக என்னை என் தந்தை உடனே அழைத்து வரச் சொன்னதாகவும் கூறினாள். உடனே நான் அரண்மனை வாசலுக்குப் புறப்பட்டேன். சீக்கிரம் அங்கே வந்து விடுவதற்காகச் சந்திரமதி வந்த நடையில் சென்று இரண்டு கட்டுக்களைத் தாண்டி மச்சுப்படி வழியாக ஏறி மேல் மாடத்தில் நடந்து போனேன். அப்போது மறுபடியும் ஓர் அதிசயத்தைப் பார்க்க நேர்ந்தது. அந்த வாணர்குலத்து வீரர் நிலா முற்றத்தைக் கடந்து மதில் சுவர் ஓரமாகப் போய்க் கொண்டிருந்தார். சுவரில் ஒரு மூங்கில் கழியை வைத்து ஏறி மதில் சுவரைத் தாண்டிக் குதிப்பதையும் பார்த்தேன். என் கண்களுக்கு அவ்வாறு தோன்றியது. அவையெல்லாம் உண்மையாக நடந்தவையா அல்லது என் சித்தப்பிரமையா என்று இன்னமும் எனக்கு நிச்சயமாகவில்லை....''

ந்தினி சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். அந்த மாளிகை வாசலுக்குச் சற்றுத் தூரத்தில் அடர்ந்த மரங்களுக்கிடையே நேற்று மாலை அவள் பார்த்த இரு முகங்கள் அவள் மனக்கண் முன் தோன்றின. அவர்களைப் பிடிப்பதற்குக் குதிரை ஆட்கள் ஏவப்பட்டிருக்கிறார்கள் என்பதையும் அவள் அறிந்திருந்தாள். அவர்கள் ஒருவேளை இதற்குள் பிடிபட்டிருப்பார்களா? பிடி பட்டிருந்தால் இங்கே கொண்டு வரப்படுவார்களா?......

''அக்கா! உங்களுக்கு என்ன தோன்றுகிறது?'' என்று கேட்டு, நந்தினியின் சிந்தனையைத் தடை செய்தாள் மணிமேகலை.

''எனக்கா! எனக்குத் தோன்றுகிறதையா கேட்கிறாய்? உனக்கு மோகப்பித்தம் நன்றாகத் தலைக்கு ஏறியிருக்கிறது என்று தோன்றுகிறது'' என்றாள் நந்தினி.

''சந்திரமதியைப் போல் நீங்களும் பரிகாசம் செய்கிறீர்களா?''

''நான் பரிகாசம் செய்யவில்லையடி! நேரில் பார்த்துப் பேசிய உனக்கே உண்மையா, கனவா, சித்தப் பிரமையா என்று தெரியவில்லையே? நான் எப்படிச் சொல்ல முடியும்? இந்த அறையிலிருந்து வெளியேறிப் போவதற்கு வேறு ஏதேனும் இரகசிய வழி இருக்கிறதா?''

''எனக்குத் தெரிந்த வரையில் வேறு இரகசிய வழி இல்லை, அக்கா!''

''நீயும் சந்திரமதியும் போன வழியில் அவனும் போய் மச்சுப்படி ஏறிப் போயிருக்கலாம் அல்லவா?''

''அங்கே வழியில் பல பணிப் பெண்கள் இருந்தார்கள், அக்கா! அவர்களுக்குத் தெரியாமல் போயிருக்க முடியாது.''

''அதிசயமாகத்தானிருக்கிறது..... இதையெல்லாம் பற்றி உன் தகப்பனாரிடம் நீ தெரிவிக்கவில்லையா?''

''தெரிவிக்கவில்லை, அக்கா! தகப்பனாரிடம் சொல்லக் கூச்சமாகவும் இருக்கிறது; பயமாகவும் இருக்கிறது. ஒருவேளை அவர் இங்கே வந்திருந்ததெல்லாம் உண்மையாக இருந்தால்......''

''ஆமாம்; புருஷர்களிடம் இதைப் பற்றியெல்லாம் பேசாமலிருப்பதே

மனதில் நிற்கும் மணம்
மாற்றுக்குறையாத குணம்

டி.எஸ்.ஆர்
கோகுல்
பத்திகள்






டி.எஸ்.ஆர் & கோ
கோகுல் கார்டன்ஸ், கும்பகோணம்.

MCS.TSR/280

நல்லது. அவர்களுக்குச் சொன்னாலும் புரியாது......''

''என் தமையனிடம் சொல்லலாமா, வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்......''

''அவனிடம் சொன்னால் கட்டாயம் ரகளையாக முடியும். உன் தமையனுக்கு இப்போது எப்படியாவது உன்னைக் கரிகாலனுக்குக் கல்யாணம் பண்ணி வைத்து விடவேண்டும் என்றிருக்கிறது!......''

''அக்கா! நீங்கள்தான் எனக்கு உதவி செய்ய வேண்டும். கந்தமாறனுக்கு உங்களிடம் ரொம்ப விசுவாசம். நீங்கள் சொன்னால் கேட்பான்......''

''அடி பெண்ணே! நான் எந்த நோக்கத்துடன் இங்கே வந்தேனோ, அதற்கு விரோதமாக என்னுடைய உதவியையே கேட்கிறாயே? வெகு கெட்டிக்காரி நீ! அப்படியே கரிகாலருக்கு உன்னை மணம் செய்து கொடுக்கும் யோசனையைக் கைவிட்டாலும், மற்றவனைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாதே? அவன் உன்னை விரும்புவான் என்பது என்ன நிச்சயம்?''

''அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை, அக்கா! அவர் என்னை விரும்பினாலும் விரும்பாவிட்டாலும்......''

''பெண்களின் தலைஎழுத்தே அப்படித்தான் போலும்! புருஷர்கள் எப்படி நடந்து கொண்டாலும், பெண்கள் அவர்களுக்காக உயிரை விட வேண்டியதென்று ஏற்பட்டிருக்கிறது! ஏதோ உன் அதிர்ஷ்டம் எப்படி இருக்கிறதென்று பார்க்கலாம். மறுபடியும் நேற்று மாதிரி ஏதேனும் நேர்ந்தால் என்னிடம் சொல்வாய் அல்லவா?''

''உங்களிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்வது அக்கா! நேற்றிரவு ஒரு கனவு கண்டேன்; அதையும் சொல்லிவிட விரும்புகிறேன்......''

''பகற் கனவு கண்டது போதாது என்று, இரவிலும் வேறு கனவு கண்டாயா? அது என்ன? மறுபடியும் அவன் கனவில் வந்து உன்னை ஏமாற்றி விட்டுப் போனானா?''

''இல்லை, இல்லை! இது வேறு விஷயம். நினைக்கவே பயங்கரமாயிருக்கிறது. காலை நேரத்தில் காணும் கனவு பலிக்கும் என்கிறார்களே? அது உண்மைதானா, அக்கா!''

''கனவைச் சொல் கேட்கலாம்! வேறு விஷயம் என்றால், இன்னும் யாரையேனும் பற்றிக் கனவு கண்டாயா?''

''இவரைப் பற்றித்தான்! இவரை யாரோ ஒருவன் கத்தியால் குத்த வருகிறது போல் இருந்தது. இவர் கையில் ஆயுதம் ஒன்றும் இல்லை. ஆனால் தரையிலே ஒரு கத்தி பளபளவென்று மின்னிக் கொண்டு கிடந்தது. நான் அதைத் தாவி எடுத்துக் கொண்டு பாய்ந்தேன். இவரைக் குத்த வருகிறவனை நான் முதலில் குத்தி விடுவது என்ற எண்ணத்துடன் ஓடினேன். அருகில் சென்றதும் அவனுடைய முகம் தெரிந்தது. அவன் என் தமையன் கந்தமாறன்!...... 'ஓ!' என்று அலறிக்கொண்டுவிழித்தெழுந்தேன். என் உடம்பெல்லாம் வியர்வையினால் சொட்ட நனைந்திருந்தது. வெகு நேரம் என் கை கால்கள் நடுங்கிக் கொண்டிருந்தன. கனவு அவ்வளவு நிஜம் போல இருந்தது. இது ஒரு வேளை பலித்து விடுமா, அக்கா!''

''அடி பெண்ணே! உன் மனம் உண்மையிலேயே குழம்பிப் போயிருக்கிறது. நிஜமாக நடந்தது பிரமை போலத் தோன்றுகிறது. கனவிலே கண்டது நிஜம் போலத் தோன்றுகிறது! நல்ல தோழி எனக்குக் கிடைத்தாய்! நான்தான் பைத்தியக்காரி என்றால், நீ என்னை விட ஒரு படி மேலே போய்விட்டாய்!'' என்றாள் நந்தினி.

இந்தச் சமயத்தில் சந்திரமதி உள்ளே வந்தாள். ''அவர்கள் வந்து கொண்டிருக்கிறார்களாம்! வீர நாராயண ஏரியைத் தாண்டி வந்து விட்டார்களாம்!'' என்று தெரிவித்தாள்.

(தொடரும்)



# புத்தாண்டில் புது முயற்சி!...




*1989-ம் ஆண்டு பிறந்து விட்டது!*

இப்புத்தாண்டில் நீங்கள் உங்களது எதிர் காலம் வளமாக அமைய நல்லதோர் திட்டம் தீட்டியிருப்பீர்கள்.

வாழ்க்கையில் முன்னேற வேண்டும், வளமான வாழ்வு பெற வேண்டும் என்ற உங்களது குறிக்கோளை அடையத் தேவையான வழி முறைகளை ஆராய்ந்து தன்னம்பிக்கையுடன் செயல்படத் துவங்குங்கள்.

நீங்கள் விரும்பும் முன்னேற்றத்தை அடைய தடைகள் ஏதேனும் இருந்தால் அவைகளை நீக்கிவிட்டு, முன்னேற்றப் பாதையில் முன்னேறிச் செல்லுங்கள்.

உதாரணமாக ... மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசுவதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் அவர்களிடம் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முடியவில்லையே என்ற பெருங்குறை சிலரிடம் காணப்படுகிறது.

ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ, அதைக் கேட்டு மற்றவர்கள் கேலி செய்வார்களோ என்ற தயக்கம் ஏற்படுகிறது.

ஆங்கில மொழியில் முறையான பயிற்சியின்மை தான், நம் தயக்கத்திற்கான மூல காரணமாகும்.

இப்புத்தாண்டில் இத்தயக்கத்திற்கு முழுமையாக விடை கொடுப்போம்.

தமிழகத்தின் தலை சிறந்த கல்வி நிலையம் என்ற தனிப் புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் நீங்கள் தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாக உரையாட, இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இப்பயிற்சியை நீங்கள் மேற்கொள்ளலாம்.

நேர்முகப் பயிற்சி பெற விரும்புவோர்க்கு தனி வகுப்புகள் நடத்தப்படுகின்றன.

இப்பயிற்சியில் சேர்ந்து பயன் பெற வேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள்.

ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்புத்தாண்டில் நிறைவேறப் போகிறது. எனவே இனியும் தயங்காமல் உடனே தொடர்பு கொண்டு பயன் பெறவும்.

நீங்கள் எழுத வேண்டிய முகவரி

---

**விவேகானந்தா கல்வி நிலையம் (Regd)**
**தபால் பெட்டி எண். 4986,**
**9, மேட்லி ரோடு, தி. நகர்,**
**சென்னை - 600 017.**

NAGA

# தினமும் கல்கியை நினைத்துக் கொள்வோம்.

* 'நாட்டின் நலனுக்காகச் சட்டங்களே தவிர, சட்டங்களுக்காக இந்த நாடு இருக்கக் கூடாது — முடியாது' என்கிற எண்ணமே இல்லாதவர்களான இன்றைய காங்கிரஸ்காரர்கள், தாங்கள் தலையங்கத்தில் குறிப்பிட்டுள்ளதைப் போன்றுதான் சட்டங்களை நிறைவேற்றிக் கொண்டிருப்பார்கள்!

பெங்களூர். ப. மூர்த்தி.

* ஆமாம்! கதையில் 'சூர்யா' துப்பறியவே இல்லையே...? 'சீக்கிரம் முடித்து விட வேண்டும்' என்று பரபரப்புடன் செயல்பட்டாற் போல் கடைசி வாரம் மிகுந்த வேகத்துடன் முடிந்திருக்கிறது சூர்யா-கிரண்!

குத்தாலம். வி. சுந்தர் ராமன்.

* வேளாண்மைப் பல்கலைக் கழகத்தின் 'வயல் வெளி அனுபவத் திட்டம்' மூலம் நமது புராதன தொழிலாகிய விவசாயத்தில் ஒரு புரட்சியே ஏற்படும் வாய்ப்புள்ளது என்பது 'விவசாய மாணவர்களும் மாணவ விவசாயிகளும்' கட்டுரை மூலம் தெரிய வருகிறது. புரட்சி, விளைச்சல் பெருக்கத்தில் மட்டுமல்ல மனித மனங்களின் நெருக்கத்திலும் நிகழும் என்பதை வேளாண்மைப் பல்கலைக் கழக மாணவி விஜயப் பிரியாவின் ''இந்த வருஷம் தீபாவளி, கார்த்திகையை இங்கே (கிராமத்தில்) கொண்டாடினோம்'' என்ற வாக்கு மூலம் தெளிவாக்குகிறது.

திருக்குவளை. வெற்றிப்பேரொளி.

* உத்தம சோழன் எழுதிய 'புதிய நந்திகள்'' சிறு கதையில் வெளிப்பட்ட கருத்துக்கள் மிகவும் வரவேற்கப்பட வேண்டியவை. அரசாங்கம் செய்து கொடுத்த வசதிகளைச் சரியாக உபயோகப்படுத்தாமல், தங்களது அலட்சிய மனப்பான்மையினால் அவற்றை இழந்து விட்டு, அரசாங்கத்தின் முன் உண்ணாவிரதம், ஸ்டிரைக் என்று இருக்கும் கபட வேடதாரிகளை மிக அருமையாக வெளிக்காட்டியிருக்கும் கதாசிரியர் நிச்சயம் பாராட்டப்பட வேண்டியவர்.

மதுரை — 1. எம். கண்ணன்.

* கண்களுக்கு விருந்து படைக்கும் வகையில் இயற்கை எழில் கொஞ்சும் காட்சிகளைக் கொண்டு, ஆடம்பரமில்லாமல் எளிமையான வகையில் எங்களுக்குப் புத்தாண்டுப் பரிசை (காலண்டர்) வழங்கி ஒவ்வொரு நாளும் நினைத்துப் பார்க்கும்படி செய்து விட்டீர்கள்!

மதுரை — 7. எஸ். செல்வன்.

* உதயமூர்த்தியின் இவ் வாரக் கட்டுரையைத் துண்டுப் பிரசாரமாக்கி மக்களிடையே பரப்பினால் தேர்தல் நேரத்தில் மிக்க புண்ணியமாய்ப் போகும்! ஆகா! அருமையான கட்டுரை!

குத்தாலம். எஸ். ராஜா.

* டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தி அவர்கள் தம் கட்டுரையில் ஐந்து பேர்களான பாண்டவர்கள் நூறு பேர்களாக இருந்த கௌரவர்களை எதிர்த்து வெற்றி பெற்றதை விளக்கியுள்ளார்கள். இந்த நேரத்தில் வாரியார் அவர்கள் சொன்னது ஞாபகம் வந்தது. 'பாண்டவர்கள் ஐந்து பேர். ஐந்து பேர்களும் நல்லவர்கள். கௌரவர்கள் நூறு பேர். நூறு பேரும் அயோக்கியர்கள். அந்தக் காலத்திலேயே நல்லவர்கள் ஐந்து பேர்கள் என்றால், அயோக்கியர்கள் நூறு பேர்கள் இருந்திருக்கிறார்கள். இந்தக் காலத்தில் கேட்கவே வேண்டாம்!' என்று ஒரு முறை கூறினார் வாரியார்.

ஆலடியூர். இரா. சந்தையா.

* தேர்தல் கால வறட்டுக் கத்தல்களினால் நைந்து போன மனத்திற்கு 'அகஸ்தியனுக்கு அவார்ட்' இதம் தந்தது!

படிக்கும் காலத்தில் காதல் உணர்வுகளைப் புறம் தள்ளுவதன் மூலம் வளமான வாழ்க்கை இலகுவாகும் — என்று போதனையூட்டியது 'மாணவக் காதல்' சிறுகதை!

திருத்துறைப்பூண்டி. ஜெ. பிஸ்மி.

* 'அகஸ்தியனுக்கு அவார்ட்' — இந்த படைப்பு ஒன்றுக்காகவே அகஸ்தியனுக்கு அவார்ட் தரலாம்! அது சரி, அகஸ்தியன் சார்! தொச்சு இனி நாலைந்து வருடங்களுக்கு உங்கள் வீட்டுக்கு வர மாட்டாரா? அந்த மாமனிதன் உங்கள் வீட்டுக்கு வந்தால்தானே எங்களுக்கு இதுபோன்ற நல்ல கதைகள் கிடைக்கும்! தொச்சு உங்கள் வீட்டுக்கு அடிக்கடி வரட்டும்!

கடலூர். ஆர். வேணுமணி.

* புத்தாண்டு இதழில் இரட்டை சந்தோஷம்! அருமையான ஐயப்பன் தரிசனம். அழகிய குளுமையான 1989 காலண்டர். புத்தாண்டுக்குக் கல்கியின் பரிசுகள் தரம் வாய்ந்தவை.

சென்னை — 5. சித்ரபானு.

* சபரிமலை ஆலயம் செல்லாதவர்களெல்லாம் பூரிப்புடன் ஐயப்பன் பற்றிய கட்டுரையைப் படித்தும், அட்டைப் படத்தில் ஆலயத்தைக் கண்டு களித்தும் பெரும் மகிழ்ச்சியடையப் பேருதவியாய் இந்த வாரக் கல்கியைச் சிறப்பாய்த் தந்த தங்களுக்குப் பாராட்டுக்கள்.

புதுச்சேரி — 12. புதுவை ராஜமுனி.

* 1.1.89 கல்கி இதழின் அட்டைப்படம் — ஐயப்பன் கோவிலும், படி பூஜைக் காட்சியும் அருமையிலும் அருமை! ஆனால் ''பேட்டை துள்ளல்'' ஒரு ''தமாஷான சடங்கு'' என்று தங்கள் நிருபர் எழுதியுள்ளது வருத்தம் அளிக்கிறது. இது தமாஷான சடங்கே இல்லை. ஸ்ரீ ஐயப்பன் வழிபாட்டில், மிக முக்கியமான அம்சம் இதுவே. ''நான்'' என்ற அகந்தையை நீக்கி, ''ஐயப்பன் சரண்'' என்ற சரணாகதி தத்துவத்தை உணர்த்துவதே பேட்டை துள்ளல். பேட்டை துள்ளலின் போது, அனைவரும் வித்தியாசமின்றிக் காணப்படும் அந்தக் காட்சியை விவரிக்க வார்த்தைகளே இல்லை. சாமி சரணம்!

இருமேனி. சுந்தரேசன் சாமி.

சங்கர்பாபு

'அந்தச் செய்தி பொய்யாக இருந்துவிடக் கூடாதா?' என்று தோன்றியது காளிக்கு. காளி என்றால் காளியப்பன். கொஞ்ச நேரம் அழலாமா என்று யோசித்தான். யாராவது பார்க்கிறார்களா என்பது மாதிரியும் பார்த்தான். யாருமில்லை. அந்த ஒன்பதரை மணிக்கு, வாடிக்கையாளர் எல்லாம் குளித்துவிட்டுப் போய் விட்ட நிலையில், ஊரை விட்டு ஒதுங்கியிருந்த அந்தக் கிணற்றடிக்கு யார் வரப் போகிறார்கள்? சிரிப்பதென்றால் எல்லோரும் பார்க்கச்சிரித்துவிடலாம். ஆனால் அழுவது அப்படியல்ல. அதற்குத் தனிமை தேவை. காளிக்கு இந்த உண்மை புரிந்திருக்க வாய்ப்பில்லைதான் என்றாலும் அந்தத் தனிமை பிடித்திருந்தது. அவனால் இப்போது சோகப்பட முடிந்தது. மெதுவாய்க் கிணற்றின் கீழ் இறங்கிக் கடைசிப் படிக்கட்டில் வசதியாய் உட்கார்ந்து கொண்டான். ஏற்கெனவே சட்டையைக் கழற்றிப் பந்தாய்ச் சுருட்டி, பொந்தினுள் திணித்து வைத்திருந்தான். எனவே சட்டை நனையுமென்ற கவலை இல்லாது கால்களைத் தண்ணீரில் நனைத்தான். நீர் எங்கோ வட்டம் போட்டுக் கிளம்பியது. எதிர்ப்பக்கச் சுவர் வரை நீர் வட்டம் பரவியது. நீர் ஜில்லென்று இருக்க, காளிக்கு மனம் என்னவோ செய்தது. கிணறு! பாண்டி மாமா!

பாண்டி மாமாதான் இவனை முதலில் கிணற்றுக்கு அழைத்து வந்தவர். இவன் 'வேண்டாங்க வேண்டாங்க' அ ழ த் து வந்தவர். சீ க் கி ர ம ா ய் எழுந்து பள்ளிக்கூடம் பே ா கு முன்னால் ஓர் ஆட்டம் 'சில்லாங் குச்சியோ' இல்லையென்றால் பம்பரத்தில் 'ஆக்கு' வாங்கியோ விளையாடித் திரிந்த காளியை, பாண்டி மாமாதான் 'நீச்ச' கத்துத் தருவதாய் அழைத்து வந்தார். காளிக்கு இதில் விருப்பமில்லைதான். ஆனால் அவர் பிடியில் இ ரு ந் து விடுவித்துக் கொள்ளக் காளியால் மட்டுமல்ல, யாராலுமே முடியாது. அதெல்லாம் ரொம்ப முந்தி. ரெண்டு வருஷத்துக்கு முந்தி. அவன் 'அஞ்சாப்பு' படிக்கிற போது.

"வுடுங்க மாமா, பயமா இருக்கு. நா வரல. நீஞ்ச வரல..." — அழுவான் காளி.

"மாட்டியா? எல, நா இருக்கேம்ல? உன்னைத் தண்ணிக்குள்ளே விட்டுட்டு நா என்ன வானத்தையா பாப்பேன்? உன் வயசுல எங்கூட்டாளிகளோட நா அடிமண்ணு எடுப்பேன், தெரியுமில்லே? உன்னை விட்டாத்தானே?" மாமா இழுத்துப் போய் விடுவார்.

இப்போது காளி மீண்டும் நீர் வட்டம் போட்டான். அந்தப் பாண்டி மாமா இன்னிக்குப் பொழுதோட செத்துட்டாக! நெஞ்சு வலி!

**பொ**துவாகக் காளிக்கு அப்போதெல்லாம் கிணறென்றால் பயம்னா பயம், அப்படி ஒரு பயம். தண்ணீர் என்றால் பயம். தண்ணீரைப் பார்த்தால் நெஞ்சு விரைவாய்த் துடிக்க, எப்படி நீந்தப் போகிறோமோ,



என்கிற மாதிரி ஒரு பிரமிப்பு தட்ட, நிஜமான ஒரு பயம். சுற்றிலும் என்னவோ தென்னந்தோப்பும், சவுக்குத் தோப்புமாய், குளுகுளுவென்றுதானிருக்கும். பம்பு செட் வேறு ஓர் ஓரத்தில் ஏகப்பட்ட வேகத்துடன்




தண்ணீரை அடிக்கிணற்றிலிருந்து தன் உடம்பினுள் சேகரித்து, பத்திரப்படுத்திக் கொண்டு வரும். வாய்க்கால்கள் வழியே அது பயிர்களை வளர்க்கும். பம்பு செட் பக்கத்தில் சின்னதாய், சதுர வடிவில் ஒரு தொட்டி கட்டி விட்டிருப்பார்கள். அதில் தலையை வைத்து, கண்களை மூடிக்கொண்டு இருந்தால் போதும். தண்ணீர் வேகத்தில் தலைமுடி சுத்தப்பட்டுப் பஞ்சு பஞ்சாய் ஆகி விடும். நிறையப் பேர் அதில் குளிக்க வருவார்கள். இவன் கணக்கு வாத்தியார் கூட வருவார்.

இவ்வளவு இருந்தென்ன? மாமா அங்கே இவனைக் குளிக்க விட்டால்தானே? "இது என்னடா, எல்லாரும் குளிச்சம், நாமளும் குளிச்சம்ங்கிற மாதிரி'' என்பார். மேலிருந்து கிணற்றுத் தண்ணீரில் அம்பாய்ப் பாய்வார் — சின்னப் பிள்ளை மாதிரி. காளி வியப்புடன் அந்த நிகழ்ச்சியைப் பார்ப்பான். மாமா உள்ளேயே போய் விட்டாரா? இல்லை! தலையில் நீர் சொட்டச் சொட்ட இந்தப் படிக்கட்டில் உட்கார்ந்திருக்கிறார்.

பின்னர் காளி தயக்கத்துடன் படிக்கட்டில் இறங்குவான். இல்லை என்றால் மாமா வைவார். படிக்கட்டு என்று பெயர்தான் உண்டே தவிர, அது நிஜமாகவே படிக்கட்டு இல்லை. அங்கங்கே கற்கள் உபரியாக வெளியே நீட்டிக் கொண்டிருக்கும். ஒரு காலை அதில் வைத்து, அடுத்த கால் இயல்பாய்க் கீழே போனால் ஊன்றிக் கொள்ள வேறொரு கல் தோதாயிருக்கும். இப்படியே முடிச்சுப் போட்ட கயிறில் இறங்குவது மாதிரி கீழே இறங்கி விட வேண்டும். கீழே மட்டும் உட்கார்ந்து கொள்ளச் சின்னதாய் ஒரு கல் இருக்கும். மாமா அதில் உட்கார்ந்துதான் துணிகளுக்கு மொத்தமாய் சோப்புப் போடுவார். அந்தக் கடைசிப் படிக்கட்டு, கிணற்றின் ஊற்று நீர் பெருகுவதைப் பொறுத்தோ இல்லை மழை பெய்வதைப் பெ்ாறுத்தோ நீருக்குள் போய் விடும். சில நேரங்களில் முழுக் கிணறுமே மூங்கிப் போகும். நிலப் பரப்பும், நீர்ப் பரப்பும் சமமாய் இருக்கும். ஆனால் அதெல்லாம் எப்பவாச்சும்தான். அப்புறம் காளியின் சட்டை, துண்டு, மாற்றுச் சட்டை எல்லாம் நனையாமல் இருக்கத் தோதாய்ப் பொந்தினுள் திணிக்கப்படும். அப்புறம்தான் வினையே.

"வுழுல. நா இருக்கமில்ல? உன்னை என்ன சாக விடுவமா?'' என்பார் மாமா. காளி மௌனமாய் அதை ஆட்சேபிப்பான். மாமா பொறுக்காமல் உக்கிரமுடன் தண்ணீரில் தள்ளி விடுவார். காளி தண்ணீரில் சற்றுக் கீழே போய் மேலே மீள்வான். "மா...'' என்று சொல்லிக் கையையும், காலையும் தாறுக்கு மாறாய் மிதித்து, மீதி

பாதி "...மா"வைச் சொல்லுமுன் உள்ளே போவான். ஒரு வழியாய் மாமா தூக்கி விடுவார். "தவக்கா' மாதிரில்ல இருந்துச்சு" என்று விமர்சித்துச் சிரிப்பார். காளி சோப்பு போட்டுக் கொள்வான். இது நல்ல தண்ணீர் கிணறு. சோப்பு நுரை வரும்.

இந்தக் கிணற்றில் பாம்பு அதிகமென காளி கேள்விப்பட்டிருக்கிறான். "தண்ணிப் பாம்பு தொரத்தின" கதையை விசாரித்து பயந்திருக்கிறான். பாம்புச் சட்டை தண்ணியிலும், சில நேரம் சுவரில் பொந்தோடு பொந்தாய் ஒட்டிக் கொண்டிருப்பதையும் அவன் பார்த்திருக்கிறான். கிணறு என்றால் பயம் வர இது ஒரு காரணம் அவனுக்கு. இன்னொரு பெரிய பிரச்னை கிணற்றின் ஆழம். அது அவனுக்குச் சரிவரத் தெரியவில்லை என்றாலும் "மூணு ஆளு முக்கலாம்" என்றும், "ஒரு போஸ்ட் தூண் முக்கும்" என்றும் வாய்வழியாய்க் கேள்விப்பட்டிருக்கிறான். நண்டுகள் அவ்வப்போது எட்டிப் பார்த்துச் செல்லும். அவை கடித்தால் அப்ப தெரியும் வேதனை!

ஆனாலும் அவனுக்கு அங்கு பிடித்த சில விஷயங்கள் இருந்தன. இலைகள் தண்ணீரில் மிதப்பது, அந்த இலைப் படகுகள் சுவரில் மோதி, மீண்டும் பயணிப்பது, இதமாய்க் காற்று வீச, குளிரில் கை கால் மென்மையாய் நடுங்குவது — காளிக்கு இவை பிடிக்கும். இன்னொன்று மீன்கள். 'ஜிலேபி' மீன்கள். கறுப்பு திராட்சையை உள்ளே போட்ட மாதிரி சலனமில்லாத் தண்ணீரில் தெளிவாய்த் தெரியும் கறுப்பு மீன்கள். அந்தக் கிணற்றில் எத்தனை மீன்கள் இருக்கலாம் என்று காளி யோசித்திருக்கிறான். முதலில் நூறு வரை இருக்கலாம் என நினைத்து அப்புறமாய் ஆயிரம் இருக்கலாம் என்று முடிவு செய்தான். முதன் முதலில் மீன் எப்படி வந்தது? அதுவாய் வந்ததா? இல்லை யாரும் பிடித்துப் போட்டார்களா? என்றும் அவனுக்குச் சந்தேகம் இருக்கிறது. எப்படியோ, மீன்கள் தேவை கிணற்றுக்கு. இல்லை என்றால் தண்ணீர் நாற்றம் அடிக்கும். மேல் வந்து அவை வாயைத் திறந்து தண்ணீரை மேயும் காட்சி அவனுக்குப் பிடிக்கும். 'ஏதாச்சும் தண்ணியில போட வேண்டியது. உடன் மீனு கவ்வ ஓடி வரும். பார்க்க அழகாயிருக்கும்' — காளி அடிக்கடி நினைப்பான். எச்சில் துப்புவான். மீன் அதைக் கவ்விக் கொள்ளும். அது உணவென்று நினைத்து ஏமாந்து போனதாய்க் காளிக்குத் தோன்றும். மாமா இதற்குள் நீரில் அவருக்குத் தெரிந்த வித்தைகளைச் செய்து காட்டுவார். இவனும் "ரயில் மாதிரி மாமா" என்பான். அவர் பல்டி அடிப்பார். தலைகீழாய் 'சொர்க்க'டிப்பார். வில்லிலிருந்து கிளம்பிய அம்பாய் நீரில் பாய்வார். மெத்தையாய் நீரைப் பாவித்துப் புரள்வார். "எண்ணிக்கல" என்று தண்ணீரில் மூழ்க, காளி மேலிருந்து பிரமிப்புடன் 'ஒண்ணு, ரெண்டு' என்று எண்ணுவான்.

அப்புறம் காளிக்கு நீச்சல் கற்றுத் தரப்படும். மாமா இவன் "அண்ணாக்" கயிறைப் பிடிப்பார். வலிக்கத்தான் செய்யும். இவன் கையும், காலும் அடிப்பான். அவன் அறியாத போது மெல்லக் கையை விட்டுவிட, அவன் சில நேரம் கரை சேர்வான், சில நேரம் நீரில் மூழ்கி, தண்ணீர் ஒரு வாய், ரெண்டு வாய்க் குடிப்பான். "அதான நீச்சலு. வேறென்ன? அதான் வந்தாச்சில்ல. இதுக்கு மேல என்ன இருக்கு?" என்றெல்லாம் மாமா உற்சாகப்படுத்துவார். காளியும் தான் நன்றாய் நீந்தியதாய் நம்பி, பன்னீர், 'சுக்கா', காளிதாஸ் போன்ற சக நண்பர்களிடம் பூரித்திருக்கிறான்.

குளித்து, நீந்தி முடித்ததும் குளிரில் உடல் வெடவெடக்கத் தலை துவட்டுவான் காளி. மேனி லேசாய் வலிக்கும். ஆனால் மாமாவுக்கு அப்படி ஏதும் நேர்வது போலவோ, அதனால் அவர் துன்பப்படுவது போலவோ தெரியவில்லை காளிக்கு. மாமாவும், நாமும் ஒண்ணா? பின்னர் இருவரும் "விருசலாய்" மேலே ஏறுவார்கள். காளி சோப், துணி எல்லாம் ஞாபகமாய் எடுத்துக் கொண்டோமா என்று பார்த்துக் கொள்வான். மாமா சைக்கிளை எடுத்து மிதிப்பார். கிணற்று பம்பு செட்டில் ஆட்கள் இன்னும் குளித்துக் கொண்டிருப்பார்கள். சளசளவென்று, புதிதாய்க் கேள்விப்பட்ட விஷயத்தை, புதிதாய்த் திறந்த பெட்டிக் கடையை, லாட்டரியில் பத்து ரூபாய்க்கு நூறே நம்பர்கள் விட்டுப் போனதை, நேற்றுப் பார்த்த படத்தை — எல்லாம் பேசிக் கொண்டிருப்பார்கள். கிணற்று மீன்கள் மீண்டும் காளிக்கு நினைவு வரும். அவற்றை நாளைக்குப் பார்க்கலாம் என்று கூறிக் கொள்வான். மாமாவின் சைக்கிள் ஒற்றையடிப் பாதையில் வேகமாய்ப் போகும்.

**அ**ந்த மாமா இப்போது இல்லை! இன்று காலையிலிருந்து இல்லை. காளி தன் ஏழாம் வகுப்பு வரை வாழ்ந்த வாழ்வில் இம்புட்டு அதிர்ச்சியைச் சந்தித்ததே இல்லை. நெஞ்சு வலி என்றால் எப்படி இருக்கும் என்கிற ரீதியில் யோசித்தான். என்ன, ஒரு பத்து பேர் ஏறி மிதிக்கிற மாதிரி இருக்குமா? காளிக்கு வாய் உலர்ந்து நெஞ்சு வலித்தது. மாமா போய் விட்ட செய்தியைச் சொன்ன நண்பன் சுக்காவின் கன்னத்தில் அடித்ததும், அவன் செவிட்டைத் தடவிக் கொண்டு போனதும் நினைவு வந்தது. ஓவென்று அழுதான் இப்போது. கிணற்றில் இவன் முதன் முதலாய்த் துணையின்றி நீந்திய போது "பரத்திட்டல" என்றும் "இதுக்குத்தானா இம்புட்டு அழுகையும்?" என்றும் மாமா சொன்னது ஞாபகம் வந்தது. கிணறெங்கும் மாமா தெரிந்தார். அவரது கறுப்பு உருவம் தெரிந்தது. மீன்களுக்கு அவர் செத்துப் போன செய்தி தெரியுமா? அவை மாமாவைத் தேடுவதைப் போல் பட்டது காளிக்கு.

எச்சில் துப்பினான். மீன் கூட்டம் மொய்த்தது. "மாமாவே போயாச்சு. இனி இந்தக் கிணத்துல என்ன குளிப்பு?" என்று யோசித்தான். பழைய நினைவுகள் கலங்கிப் போய் ஒன்று போல் வர முயற்சி செய்தன அவனுள். கண்ணீரைத் துடைத்துக் கொண்டான். 'இனி இந்தக் கிணத்துக்கு வரக் கூடாது' 'இன்று குளிக்க வேண்டாம்' என்கிற நினைப்புகளுடன் மேலே ஏறினான். அந்தக் கிணற்றுக்கு மீண்டும் வர அவனுக்கு விருப்பமில்லை. வேறு எங்காவது குளிக்கப் போக வேண்டியதுதான். காளி சட்டையைப் போட்டுக் கொண்டு பம்பு செட் சுவரைப் பார்த்தான். அருகில் காய்ந்து போன கரித்துண்டு கிடந்தது. எடுத்து சுவரில் 'மாமா' என்று எழுதினான். பின் யோசித்து, பக்கத்தில் சிறியதாய்க் 'காளி' என்று கிறுக்கினான். மீண்டும் எப்போது பார்க்கலாம்? எப்போதாவது. ரொம்ப நாளைக்கு அப்புறமா. கல்யாணம் கழிஞ்ச பிறகு. மாமா மாதிரி கொஞ்சம் வயசான பிறகு. ரொம்ப நாளைக்குப் பிறகு.

காளி அமைதியாய்ச் சலனமில்லாமல் கிணற்றிலிருந்து நடந்து கொண்டிருந்தான்.







— வை. வேங்கடேசன்.

# நீரில் மிதக்கும் நிலா

## 24

## சுபா

நீலம், ஆரஞ்சு, சிவப்பு என்று பட்டை தீற்றிய மாபெரும் ஷாமியானா கொட்டகை, காற்றில் படபடத்தது. கொட்டகைக் கூரைக்கு அடியில் கூடியிருந்தவர் கைகளில் பீங்கான் தட்டுகள். தட்டுகளில் ஐந்து நட்சத்திர ஹோட்டலின் பஃபே அயிட்டங்கள். பெண்கள் லிப்ஸ்டிக் கலையாமல் சாப்பிட்டார்கள். ஆண்கள் விஸ்கிக் கோப்பைகளுடன் சிக்கன் ஃப்ரையை ஆண்டு கொண்டிருந்தார்கள்.

பிருத்விராஜ் கையை மார்புக்குக் குறுக்கே கட்டி ஓரமாக நின்றிருந்தான்.

"இங்கே வாய்யா..." இளங்குமரனின் குரல் அழைத்தது.

இளங்குமரனைச் சுற்றி நின்றிருந்த நான்கு பேரில் மூன்று பேர் வேட்டி கட்டியிருந்தார்கள். காற்றில் ஆடும் பாய்மரம் போல் அவர்கள் நிலையாக நிற்காமல் ஆடிக் கொண்டிருந்தார்கள்.

"இவன்தாண்ணே மூலக்கதை. டேய் இதெல்லாம் சினிமாவுக்கு ஒத்துவராதுன்னு தொரத்தியிருக்கலாம். தொரத்தலை... பிருத்வி, இவங்க நம்ப டிஸ்ட்ரிப்யூட்டருங்க. இவரு கோயமுத்தூர், இவரு மதுரை, இவரு சேலம், இவரு சிடி, செங்கல்பட்டு."

"வணக்கம்" என்றார் கோயமுத்தூர். "ரெண்டு வாரமா ஹவுஸ் ஃபுல்லுதான். அடிதடி சண்டைப் படங்களுக்கு நடுவுல திடீர்னு இப்படி ஒரு படம் வரங்காட்டியும் தூக்கிருச்சு. ஒரே தூக்கு. ஹீரோயினு சப்ஜக்டா? தியேட்டருங்கள்ல ஒரே பொம்பளைக் கூட்டம். காலேசுப் புள்ளைங்க எல்லாம் கட் அடிச்சிட்டு மறுக்கா, மறுக்கா வந்து பார்த்துட்டுப் போவுதுங்க. க்ளைமாக்ஸ் இருக்குதே... அதான் டக்கரு. மண்டை காஞ்சிரும்னு நெனைச்சேன்... க்ளைமாக்ஸ்ல ஒரு புடி புடிச்சிட்டீங்க தம்பி!"

"க்ளைமாக்ஸ் ஐடியாவை மட்டும் ரெண்டு மாசமா ராத்தூங்காம யோசிச்சி யோசிச்சி ஸ்க்ரீன்ல கொண்டுட்டு வந்தேண்ணே."

இளங்குமரன் கூசாமல் பேசினான். கை கட்டிக் கேட்டுக் கொண்டிருந்த பிருத்விராஜிற்கு இதயத்தில் வலித்தது.

"ஷில்பா எங்கே டைரக்டர் சார்... கண்லயே காட்ட மாட்டேங்கறீங்க?" — சேலத்துக்காரர் கேட்டார்.

"அதோ, அஸ்வின்கூட அங்கே நின்னுட்டிருக்காளே..."

"நம்ப காமிரா திலகம் எங்கே?"

"ஸ்ரீநாத்தா?"

"அவ... அவருதான்.. காமிரா ஞானின்னு ஒரு பட்டம் குடுக்கலாமின்னு இருக்கோம்."

"அவனுக்கு என்னவோ கோவம் எம்மேல. பிரிஞ்சிட்டோம் ரெண்டு பேரும். காமிரா புடிக்கறவன்னா அதோட நின்னுக்கணும்... நாளைக்கு விரிவா பேட்டி குடுக்கலாம்னு இருக்கேன்..."

"அவன் காமிராவை மட்டும் எங்கே ஒழுங்கா புடிக்கறான்? அங்கங்கே இருட்டாக் காமிக்கறான். கேட்டா லைட்டிங்னு சொல்றான். அந்தத் தத்தாரியை வெரட்டி வுட்டது கூட சரிதாங்க..."

"காமிரா ஞானின்னீங்க...?"

"வேண்டப்பட்டவனாச்சேன்னு பார்த்தேன்...!"

"எனக்கு சந்தோஷமாயிருக்கு ஷில்பா..." என்றான் அஸ்வின் குமார். கையில் மதுக் கோப்பை. இடது கை ஷில்பாவின் தோளில் இருந்தது. லேசாக வினையாடிக் கொண்டிருந்தது. "சாமியார் மாதிரி பேசிட்டிருந்தே வேணாம், வேணாம்னு.. திடீர்னு எப்படி மனசு மாறிச்சு?"

ஷில்பா ஒரு விரலால் நெற்றியில் வந்து புரண்ட முடியை ஒதுக்கிக் கொண்டாள். வசீகரமாகச் சிரித்தாள். அஸ்வின் குமாரின் கைகள் தோளில் தொட்டுக் கொண்டிருந்த பாதிப்பே இல்லாமல் அவனைப் பார்த்தாள்.

"புரொஜக்ஷன் பார்த்துட்டு மூணு புரொட்யூசருங்க அட்வான்ஸோட வந்துட்டாங்க அஸ்வின். அப்பா கபால்னு எப்படி மாறிட்டாரு தெரியுமா? வந்தவங்களை எல்லாம் உக்கார வச்சி டக்கரா பேசி ரேட்டுல்லாம் முடிச்சிட்டாரு" — அஸ்வின் குமாருக்கு வலது புறம் ஒட்டி நின்றிருந்த இலகாதான் சொன்னாள். "நான் வேற ராத்திரி ஆனா வேதம் ஓதற மாதிரி ஓதி ஓதி அக்கா மனசை மாத்திட்டேன்."

பத்திரிகை காமிரா அவர்கள் பக்கம் திரும்பியவுடன் அஸ்வின் குமார் விஸ்கிக் கோப்பையைக் கைசொடக்கி ஒரு விசிறித் தொப்பியை அழைத்து அவனிடம் ''காட்ச்'' என்று எறிந்தான். எப்போதும் ரிசர்வில் வைத்திருக்கும் ஒரு சிரிப்பைச் சிந்தினான். ஷில்பாவின் இடுப்பில் ஒரு கை, திலகாவின் இடுப்பில் இன்னொரு கை என்று போஸ் கொடுத்தான்.

ஷில்பா மாறாப் புன்னகையுடன், ஆனால் விழியோரப் பார்வையால் பிருத்விராஜைத் தேடிக் கொண்டிருந்தாள். அவர்களிடமிருந்து சற்றுத் தள்ளி நின்றிருந்த ஜூபிடர் ரத்தினம், பக்கத்தில் நின்ற ஒரு செழிப்பான ப்ரொட்யூசரிடம், பேரம் பேசிக் கொண்டிருந்தார்:

மார்ச் வரைக்கும் டைட் ஷெட்யூல்ண்ணே. அதுக்கப்புறம் நிச்சயம் உங்களுக்கு இல்லாம வேற யாருக்கு டேட்ஸ் கொடுக்கப் போறேன். ரொம்ப அர்ஜன்டுன்னா திலகாவை வேணும்னா...,

''திலகா நடிச்ச ஒரு படம் வரட்டும் ஜூபிடரு. கமல் வேற ஷில்பாவையே போடுன்றாரு. கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணும்மா. அஞ்சு பத்து கூட வேணும்மா, கேளு....''

''கமலா? கமலா சொன்னாரு?'' ஜூபிடர் சமீபத்தில் கட்டியிருந்த தங்கப் பல் தெரியச் சிரித்தார். ''நாளைக்கு வீட்டுக்கு வாங்கண்ணே. பாத்துப் போட்டுரலாம். உங்களுக்குத் தாராள மனசு. நீங்கள்ளாம் அள்ளிக் குடுத்தாத்தான் உண்டு.''

''என்ன இருந்தாலும் நீ பார்ட்டிக்கு வராம இருந்தது தப்பு ஸ்ரீநாத்.''

பிருத்விராஜ் லேமினேட் செய்யப்பட்ட விளம்பர ஸ்டிக்கரைக் கையில் உருட்டிக் கொண்டே சொன்னான்.

''என்ன தப்பு? எப்படித் தப்பு? நீங்களும் அண்ணாவும் மாங்கு, மாங்குன்னு உழைச்சிருக்கீங்க. படம் ஹிட்டானவுடனே பேரெல்லாம் இளங்குமரனுக்கா?'' புனிதாவிற்கு இப்படி கோபமாகப் பேசக் கூடத் தெரியுமா என்ன?

''இதெல்லாம் இந்த ஃபீல்டுல ரொம்ப சகஜம் புனிதா. பெரிய பெரிய டைரக்டருங்க கூட இதையேதான் பண்றாங்க. என்னை விட உங்கண்ணனுக்கு இது நல்லாத் தெரியுமே'' பிருத்விராஜ் சமாதானம் செய்யும் குரலில் சொன்னான்.

''தோ பாரு... கதை, வசனம், டைரக்ஷன்ல இளங்குமரன் தன் பேரைப் போட்டுக்கிட்டது கூட எனக்கு வருத்தமில்லே. டைட்டில் கார்டுல உன் பேரை எங்க போட்டிருக்கணும்? அஸிஸ்டன்ட் டைரக்டர்னு... ஜஸ்ட் மூலக்கதைன்னு ரெண்டு செகன்ட் காட்டிட்டுத் தூக்கிடறாங்க. நியாயமா பிருத்வி இது? இளங்குமரன் தண்ணியைப் போட்டுட்டு கண்ட குட்டிங்களோட புரண்டிட்டிருந்தான். நீயும், நானுந்தான் பாதிப் படத்துக்கு மேல் ஷூட் பண்ணினோம்... அவனை விடப் போறதில்ல பிருத்வி. நீ யாருன்னு ப்ரூவ் பண்ணிக் காட்டணும். இளங்குமரனுக்கு நாலு புரொட்யூசர்னா, எனக்கு ரெண்டு புரொட்யூசர். நாம ரெண்டு பேரும் ஒரு படம் பண்றோம்... அட்டகாசமான ஒரு டீமை செலக்ட் பண்றோம். ஸீனுக்கு, ஸீன் உக்காந்து ப்ளான் பண்றோம்... ஷில்பாதான் ஹீரோயின். அவளுக்கு இப்ப சூப்பர் மார்க்கெட்.''

''ஸாரி ஸ்ரீநாத். மதுமதியாப் பார்த்த ஷில்பாவை வேற எந்த காரெக்டர்லயும் என்னால கற்பனை பண்ணிக் கூட பார்க்க



முடியாது. ஷில்பாவுக்கு இந்த ஃபீல்டே பிடிக்கலைன்னு சொல்லிட்டிருந்தா... நடிப்பாளோ... மாட்டாளோ...''

''பிருத்வி... இந்தத் தீமை நீங்க ஹாண்டில் பண்ணா என்ன?'' திடீரென உற்சாகமாய் இடையில் புகுந்து கத்தினாள் புனிதா.

''எதை?''

''நீங்க ஃபீல்டுல நுழைஞ்சதிலேர்ந்து நடந்த கதையைத்தான். ஒரு புது நடிகை எப்படி உருவாறா? அவளுக்கு என்னென்ன பிரச்னை? ஒரு ரைட்டர் எப்படி உள்ள நுழைஞ்சு அல்லாடறான். எப்படி அஸிஸ்டண்ட் டைரக்டரா மாறறான். அவனைச் சுத்தி .இருக்கிற பிரச்னை. படத்தோட காமிராமேனோட தங்கச்சி அவனை லவ் பண்ணலாம். ஃபெய்ல் ஆகலாம். உங்களைக் காயப்படுத்தணுங்கறதுக்காக இப்படிச் சொல்லலை... படமா எடுக்க இதெல்லாம் ஒரு நல்ல சப்ஜெக்டா எனக்குத் தோணுது... இதையே ட்ரை பண்ணுங்க...

''நல்ல ஐடியா பிருத்வி... ஷில்பா நடிச்சாலும், நடிக்கலேன்னாலும் இதைத்தான் நாம படமாப் பண்ணப் போறோம். வீ ஆர் ஜாய்னிங். நீ ஷில்பாவை எதுக்கும் கேளு. நீ சொன்னா ஒத்துப்பா.''

**நா**ங்கள் நெருங்கிய நண்பர்கள். தவிர்க்க முடியாத சில காரணங்களால் நாங்கள் பிரிந்து விட்டோம். ஒன்று மட்டும் சொல்வேன். தவறு என் பக்கம் இல்லை. இதற்கு மேல் இதைப் பற்றி நான் எதுவும் சொல்ல-விரும்பவில்லை. எங்கிருந்தாலும் ஸ்ரீநாத் என் நண்பன்தான். அதை நான்

மறக்கவில்லை. மறக்கப் போவதுமில்லை.'

தினத்தந்தி சினிமாப் பக்கத்தை உரக்கப் படித்துக் கொண்டிருந்தாள் திலகா.

ஷில்பா கண்ணாடிக்கு எதிரே நின்று புருவத்திலிருந்து பிசிறு தட்டியிருந்த ஒற்றை முடியைக் கிள்ளி எடுத்தாள்.

''பாப்பா!'' ஜூபிடர் ரத்தினம் அறைக்குள் நுழைந்தார். ''ரெடியாம்மா?... அந்தப் பய உன்னைப் பாக்க வந்திருக்காம்மா.''

''எந்தப் பய?'' என்று அவர் பாணியிலேயே கேட்டாள் ஷில்பா.

''அதாம்மா. அந்த பிருத்விராஜ்.''

பிருத்விராஜ் என்றதும் ஷில்பாவின் முகத்தில் ஒரு மகிழ்ச்சி ரேகை மின்னியதை ஜூபிடர் ரத்தினம் வருத்தத்துடன் கவனித்தார்.

''இதோ வரேம்ப்பா'' ஷில்பா திரும்பி அறையைக் கடக்குமுன் கை நீட்டித் தடுத்தார். ''இத பாரு பாப்பா... பொசுக்குனு நீ வந்து ஹால்ல நின்னா உனக்காகக் காத்துக்கிட்டிருக்கிறவன்லாம் என்ன நெனைப்பான்? மதிப்பே போய்டும். இரு. அந்தப் பையனை உள்ளே அனுப்பறேன்.''

இளங்குமரன் தனக்கெதிரே தோளில் ஜோல்னாப் பையுடன் நின்றிருந்தவனை நிமிர்ந்து பார்த்தான்.

''பேர் என்னய்யா?''

''சுதா மணிங்க'' அந்த இளைஞன் தெய்வ சன்னிதானத்தின் முன் நிற்பவன் போல மகா அடக்கத்துடன் நின்றிருந்தான்.

''அழகழகா பேரை வச்சிக்கிடறானுங்கய்யா... என்ன வேணும் சொல்லு. ஏன் மறுபடி மறுபடி வந்து வந்து என் உயிரை எடுக்கறே?''

''ஓர் அட்டகாசமான கதை வெச்சிருக்கேன் சார்.''

''அட்டகாசமா... அதை நீ சொல்லக் கூடாது... நான் சொல்லணும்.''

''சரிங்க சார்.''

''என்ன சப்ஜெக்ட்?''

''லவ்வுங்க சார்!''

அந்த இளைஞனின் விசாலமான நெற்றியில் புத்திசாலித்தனம் தெரிந்தது. கண்களில் முன்னுக்கு வர வேண்டும் என்ற கனவு. அஸ்வின்குமாரிடம், திலகாவிடம் கால்ஷீட் வாங்கியாகி விட்டது. இன்னும் நல்ல ரொமான்ஸ் சப்ஜக்ட் கிடைக்கவில்லையே என்று அயல்நாட்டுச் சாராயத்தில் மூழ்கியிருக்கும் நேரத்தில் இந்த இளைஞன். அந்தப் பிருத்விராஜ் புதுப்படம் பண்ணப் போகிறானா? ஸ்ரீநாத் அவனுக்கு உதவப் போகிறானா? போகட்டும். போகட்டும். எனக்கு ஆளே கிடைக்க மாட்டானா என்ன?

''எல்லாம் லவ்வுதான்யா! உன்னுதுஎன்ன ரோமியோ ஜூலியட் கதையா? எங்கே ரெண்டு லைன்ல சொல்லு பாக்கலாம்.''

''ரெண்டு ஃப்ரண்ட்ஸ்ங்க... ரெண்டு பேரும் ஒரு கவர்மெண்ட் ஆஃபீஸ்ல உத்தியோகம் பண்றாங்க...''

அந்த இளைஞன் தன் கதையைத் தொடங்க, இளங்குமரன் அவன் பேச்சைக் கவனிக்காதது போல் பின்னால் திரும்பி, ''டேய் யார்ராங்கே... கிளாஸ் காலியா இருக்கு பாரு.. இன்னும் ரெண்டு பெக் ஊத்துங்கடா...'' என்றான்.

''எப்படி இருக்கீங்க பிருத்வி?'' ஷில்பா பிருத்விராஜின் கைகளைப் பற்றிக் கொண்டாள். கண்களில் நெகிழ்ச்சி. ''விழா அன்னிக்கு உங்க கூடப் பேச முடியல்லே. அஸ்வின் அப்படி, இப்படி நகர விடாமப் பண்ணிட்டாரு... எப்படி இருக்கீங்க?''

''ம்'' என்றான் பிருத்விராஜ். ''புதுசா நாலு படம் புக்காயிருக்குன்னு அப்பா சொன்னாரு?''

''ஆமா பிருத்வி. எல்லாம் நீங்க ஷேப் பண்ணி விட்டதுதான். கமல் சார் கூட கே. ஜி. பிலிம்ஸ்ல நடிக்கறேன். ரஜினி சார் கூட ஏ.வி.எம். படத்துல நடிக்கறேன். பாலாஜி கூட டேட்ஸ் கேட்டிருக்காரு... உக்காருங்க பிருத்வி.''

பிருத்விராஜ் உட்காராமல் கைகளைக் கட்டிக் கொண்டு அவளைப் பார்த்தான். பழைய ஷில்பாவா இது? இதயத்தில் எங்கேயோ சின்ன விரிசல் ஏற்பட்ட மாதிரி வலித்தது.

''அன்னிக்கு ஹோட்டல்ல என் கையைப் பிடிச்சிட்டுப் பேசினியே ஞாபகமிருக்கா ஷில்பா. 'நான் உங்க மது பிருத்வி ஷில்பா இல்ல'ன்னு. நான் பாத்த அந்த ஷில்பா இல்ல நீ... வேற ஷில்பா.''

''மொதப் படம் பிருத்வி. ஃபீல்டு எனக்குப் புதுசு. எதிர்பார்ப்பை விட பயந்தான் ஜாஸ்தியா இருந்தது. எல்லாருமாச் சேர்ந்து என்னைக் குழில தள்ளி அமுக்கறா மாதிரி பட்டது.''

''இப்ப சரியாய்டுச்சா?''

''பழகிப் போச்சி.. திலகா! நம்ப ரைட்டர் சாருக்கு ஆப்பிள் ஜூஸ் சொல்லேன்.. என்ன சொன்னேன்.. அ... பழகிருச்சி.. சொல்லப் போனா பிடிச்சிருச்சி. ஷில்பா, ஷில்பான்னு பத்திரிகைக்காரங்களும், ரசிகருங்களும், புரொட்யூசருங்களும் சுத்திச் சுத்தி வர்றப்ப ஒரு மாதிரி... என்ன சொல்றது பெருமையாயிருக்கு. நீங்க சொல்லலாம் இது வெறும் மத்தாப்பூ வாழ்க்கைன்னு... ஆனா இந்த கிளாமர் வாழ்க்கையிலயும் ஒரு சொகம் இருக்கு பிருத்வி. அப்பா கட்டாயப்படுத்தித்தான் ஃபீல்டுக்குள்ள தள்ளினாரு. ஆனா இப்ப எனக்கே இந்த தொழில்ல ஒரு பிரியம் வந்திருச்சி. ஆனா இப்பவும் சொல்றேன்... நீங்க என் பக்கத்தில இருந்தா ரொம்பப் பாதுகாப்பா நெனைக்கறேன். என் கூடவே இருந்துட நீங்களா பிருத்வி?'' ஷில்பா கண்கள் மின்னலடிக்கக் கேட்டாள்.

''உன் கூடவா?'' பிருத்விராஜ் திகைத்துப் போய்க் கேட்டான்.

''ஆமா பிருத்வி. அஸிஸ்டெண்ட் டைரக்டருங்களுக்கு என்ன மரியாதைன்னு

தான் நீங்களே இத்தனை நேரம் தெரிஞ்சிட்டிருப்பீங்களே...? பேசாம என் கூட இருந்து எனக்கு ஹெல்ப் பண்ணுங்களேன் பிருத்வி... என் கால்ஷீட் எல்லாம் நீங்களே பார்த்துக்குங்க... எனக்கு இன்னும் எத்தனை நாள் மார்க்கெட்டோ? அப்புறம் நாம கல்யாணம் பண்ணிக்கிட்டு...."

"ஷில்பா...!" திலகா கொண்டு வந்த ஆப்பிள் ஜூஸை பிருத்விராஜ் உதாசீனப் படுத்தினான்.

"இதில என்ன தப்பு இருக்கு பிருத்வி? நாம எப்பவும் சேர்ந்து இருக்கலாம். அதே சமயம் நானும் எனக்கு வந்த அதிர்ஷ்டத்தை விட்டுக் கொடுக்காம இருக்கலாம்..."

பிருத்விராஜ் ஷில்பாவை அந்நியமாகப் பார்த்தான்.

"ச்ச...ச்...ச்.... எனக்கு எவ்வளவு பெரிய கௌரவம் குடுத்திருக்கே. பிரபல நடிகை ஷில்பாவின் மேனேஜர். ஆஹா... ஆஹா... ஸாரிம்மா. என்னால அந்த கௌரவத்தை ஏத்துக்க முடியும்னு தோணலை. ஒரு நடிகைக்கு மேனேஜர்ங்கற பெருமை எனக்கு வேணாம். அந்தப் பெருமையை வேற யாருக்காவது குடும்மா. என் ரூட் வேற. உன் ரூட் வேற. நான் காமிராவுக்குப் பின்னால நின்னு சாதிக்க நெனைக்கறவன்... ஆனா ஒரு விஷயம். நான் நெனைச்சிட்டிருந்த மதுவை நீ ஸ்க்ரீனுக்குக் கொண்டு வந்தியே... அந்த சந்தோஷம் போறும் ஷில்பா. தாங்க்யூன்னு சொன்னா அந்நியமாப் போய்டும். தெரிஞ்சிதான் சொல்றேன்... தாங்க்யூ."

பிருத்விராஜ் சரேல் என அந்த அறையில் இருந்து வெளிப்பட்டான். பரபரப்பாகப் படிகளைக் கடந்தான். கீழ்ப் படியில் கால் வைக்கும் போது பிருத்விராஜை அந்த விசும்பல் சத்தம் எட்டியது. திரும்பினான். சமையலறைத் தூணுக்குப் பின்னால் ராணி புடைவையைக் குவித்து வாயில் அடைத்திருந்தாள்.

"ஏன் அழுதுக்கிட்டிருக்கீங்க ராணி?"

ராணி தூணுக்குப் பின்னால் இருந்து வெளிப்பட்டாள். இன்னும் பழையபடி சாதாரண நூல் புடைவை கட்டியிருந்தாள்.

"எப்படியெல்லாம் மாறிப் போறாங்க பாத்தீங்களா ரைட்டர் சார். நான் உங்களுக்குன்னு காப்பி போட்டு எடுத்துட்டு வந்தேன். எல்லாம் கேட்டேன். ஷில்பா சினிமால சேரப் போறான்னு தெரிஞ்சதுதான். ஆனா பணத்துக்கு ஆசைப்பட்டுக்கிட்டுச் சொந்த அப்பாவே கண்ட கண்டவன்கிட்ட இளிச்சிட்டு நிக்கறதைப் பாக்கறப்ப... அதுக்கு இந்த ரெண்டு பொண்ணுங்களும் தலையாட்டிட்டுப் போறதைப் பாக்கறப்ப, செத்துப் போயிட மாட்டோமான்னு இருக்கு."

"எங்கே எனக்காக நீங்க போட்ட காப்பி?"

"இதோ தரேன்..." என்று உள்ளே போய்க் காப்பி டம்ளரைக் கொண்டு வந்தாள். காப்பியில் ஆடை படிந்திருந்தது.

பிருத்விராஜ் அதை வாங்கிக் கொண்டான்.

"சினிமாக் கதைக்கு நான் ஏன் நீரில் மிதக்கும் நிலான்னு பேர் வச்சேன் தெரியுங்களா?" பிருத்விராஜ் ஒரு மடக்கு அந்த காப்பியைக் குடித்தான்.

"சொல்லுங்க" என்று புரியாமல் அவனைப் பார்த்துக் கேட்டாள் ராணி.

"நல்லா யோசிச்சிப் பாருங்க. மது கதையும் நீரில மிதக்கிற நிலாதான். என் கதையும் நீரில மிதக்கிற நிலாதான். இல்லேன்னு தீர்மானம் பண்ணது கெடைச்சிரலாம். நமக்குன்னு தீர்மானம் பண்ணது கெடைக்காமப் போலாம். வாழ்க்கைல நாம எதிர்பாக்கறது எல்லாம் நடக்காதுங்க. சமாதானப்படுத்திக்குங்க. நான் சமாதானப்படுத்திக்கலையா? ஒருத்தராவது இந்த வீட்ல எது தப்பு எது ரைட்டுனு எடுத்துச் சொல்றதுக்கு இருந்தாகணும். நீங்களும் ஷில்பாவைக் கை விட்டுடாதீங்க. உங்க காப்பி ரொம்ப நல்லா இருக்கு. வரேன்."

அவன் முதுகு மறைந்த பிறகும் ராணி வெகு நேரம் விசும்பிக் கொண்டிருந்தாள்.

தெருவில் ஒட்டியிருந்த பெரிய பெரிய போஸ்டர்களில் ஷில்பாவின் காந்தம் ததும்பும் கண்களுக்கு, ஒரு பையன் அக்கம் பக்கம் பார்த்து விட்டு அவசரமாக முத்தம் பதித்தான்.

அதைப் பார்த்தும் பிருத்விராஜ் வலியில்லாமல் மேலே நடந்தான்.

(முற்றும்)



திருச்சியிலிருந்து லால்குடி செல்லும் வழியில் உள்ள ஒரு கிராமத்தின் பெயர் "பம்பரம் சுத்தி!"

முசிறி செல்லும் வழியில் உள்ள மற்றொரு கிராமத்தின் பெயர் — "கண்டைக் காய்!"

— தோ பஞ்சு.

# காதல் நோயாளி

சுசரிதா ஆரோக்கிய சாமியிடம் விடை பெறுகின்ற நேரத்தில்தான் காலிங்-பெல் ஒலித்தது. மாடிப் படிக்கட்டு முடியும் வரை வளைவைத் திரும்பிப் பார்த்தாள் சுசரிதா.

தெருக்கதவு திறந்திருந்தால் அந்த வளைவுச் சுவரில் வெளிச்சம் விழும். இப்போது இல்லை.

''தெருக்கதவை மூடிட்டு வந்தியா ஆரோக்?'' என்று கீழுதட்டைக் கோபமாகக் கடித்துக் கொண்டே கேட்டாள் சுசரிதா.

அவள் கோபத்தைக் குறும்பாகப் பார்த்து ரசித்தபடி கண் மூடித் தலையாட்டி ஆமோதித்தான் ஆரோக்கியசாமி.

''உனக்குக் கொஞ்சமாவது மூளை இருக்கா?''

''இப்போ மணி மூணரை. நீ அஞ்சு மணிக்கு பஸ் ஸ்டாண்டிலே இருக்கப் போறே. ஏழரை அல்லது எட்டுக்கு நாம மஹாபலிபுரத்திலே இருக்கப் போறோம். அங்கே போயி எனக்கு என்னென்ன இருக்கு என்னென்ன இல்லேன்னு டிஸ்கஷன் வச்சுப்போம்.''

சுசரிதாவுக்கு இன்னும் கொஞ்சம் ஆத்திரம் அதிகரித்தது.

''உன்னைத் தேடி நான் வர்றதைத் தெருவிலே பல பேர் பார்க்கிறாங்க. கதவை வேற தாப்பாள் போட்டுட்டு வந்துட்டே! சே, என்ன கேவலமா ஒவ்வொருத்தரும் கற்பனை பண்ணிக்குவாங்க...''

காலிங் பெல் மீண்டும் ஒலித்தது.

கோபத்தில் அவள் முகம் சிவப்பதை, உதடு துடிப்பதை, புருவங்கள் நெரிவதை ரசித்தான் ஆரோக்கியசாமி. பிறகு சிரித்தவாறு ''நான் ஒன்னைத் தேடி வருவேன்! ஹாஸ்பிடல் ஆம்புலன்ஸ் டிரைவருக்கு எந்த நேரம் சொந்தம் சொல்லு'' என்றான்.

''சொந்தமா கொஞ்சம் நேரம் கெடைச்சாப் போதும்...'' என்று இழுத்தாள்.

''புகுந்து விளையாடிடுவேங்கறியா?''

''ஓம் புத்தி எங்கே போகப் போவுது ஒன்னை விட்டு?''

''என்னை விட்டு இல்லை கண்ணம்மா! உன்னை விட்டு.....''

இப்படி ஓர் ஆண் தனக்காகப் பேசுவதைக் கேட்க எந்தப் பெண்ணுக்கும் பிடிக்குமோ என்று நினைத்தாள் சுசரிதா.

அவர்கள் காதல் எட்டு மாதமாக ஒரு வசந்த காலத்தில் ஆரம்பித்து எப்போது இலை உதிரும் என்று தீ படரும், என்ற வேட்கையோடு காத்திருந்தது.

ஹாஸ்பிடலில் வேலை செய்து பல பெண்களோடு பழகியும் ஒழுங்காய் இருந்து, எந்த வேண்டாத பழக்கத்திலும் மாட்டாமல் கைச் சமையல் செய்து கொண்டு, கல்யாணத்திற்காகச் செட்டும் சிக்கனமுமாக இருந்து சீட்டுக் கட்டி, நடமாடும் பிரேதங்களையும் நடக்க முடியா உடம்புகளையும் இரவு பகல் பாராது இடம் சேர்க்கிற மனுஷனுக்கு ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் அலுப்பு வராது?

ஆணும் பெண்ணுமாக இணைந்து இணைந்து ஓடியாடும் உலகத்தில் இப்படி எப்போதாவது ஒரு முறை பெண் மடியில் இளைப்பாறும் தாகத்தை எத்தனை காலம் தள்ளிப் போடுவது?

முதலிலிருந்து போட்டு வந்த முட்டுக் கட்டைகளை எல்லாம் மனசு தாளாமல் தான் அன்று அகற்றினாள் சுசரிதா. இதற்கே அவள் முகம் வேண்டாவெறுப்பாக மாறுவதை அணுவணுவாக ரசிப்பது போல் வேடிக்கை பார்த்து விட்டு அவன் சுவரில் பதித்திருந்த வால் க்ளாக்கைச் சுட்டிக் காட்டினான்.

அவர்கள் மஹாபலிபுரம் போக மணி ஆகிறதாம்!

''நீ ஆரோக் இல்லே'' என்று பல்லைக் கடித்தாள் சுசரிதா.

''என்ன பேர் மாத்தறே! 'பிரேம் ரோக்'கா... காதல் நோயாளி?''

''ம்ஹம்ஹும். ரோக். ஆர் ஓ ஜி யூ ஈ.''

அவன் அவளை எட்டிப் பிடிக்க வந்தான். அவள் தப்பித்துக் கொண்டு ஓடுவது போல் திரும்பித் தடதடவென்று படியிறங்கினாள்.

தெருக் கதவின் தாழ்ப்பாளை விலக்கும் போது அவளுக்கு மூச்சு வாங்கிற்று. வெளியே யார் யார் நிற்கிறார்களோ என்று நினைக்கவே மனம் கூசிற்று.

அவள் அங்கு வரும்போதெல்லாம் —

தெருவில் நாலைந்து பேராவது அவ

**வையவன்**

ளைத் திரும்பிப் பார்ப்பார்கள். என்னதான் இது நகரமாக இருந்தாலும், சமூகமாவது சுரைக்காயாவது என்று ஒரு வீம்பு அலட்சியத்தை வருவித்துக் கொண்டாலும், மாடர்னிட்டியின் கவசத்தை எடுத்து மாட்டிக் கொண்டாலும் அந்தத் தெருக் கதவு வரை தலை நிமிரத் தோன்றாது.

ஏதோ தப்பு செய்கிற மாதிரி — நாலு பேர் பார்வையில் தப்பு என்று படுகிற காரியத்தைக் குறித்து எனக்கு அக்கறையில்லை என்று காட்டிக் கொள்கிற மாதிரி ஓர் உறுத்தல்.

ஆரோக்கியசாமிக்கென்ன! ஆண்!

இப்படி சிவப்பாய் லட்சணமாய் ஒரு பெண் அவனைத் தேடி வருவதை நாலு பேர் அறிந்திருப்பதில் ஒரு பெருமையாகக் கூட இருக்கும்.

அந்த இரட்டைக் கதவு தாழ்ப்பாளை விலக்கினால் கூட உடனே திறக்காது. புதிதாகப் பெயிண்ட் அடித்த போது கதவு விளிம்புகளில் இரண்டு கோட்டிங்கில் சாயம் அதிகமாய் ஏறி அடைத்து நின்றது. ஒரு கதவை மூச்சுப் பிடித்து இழுக்க வேண்டும். இழுத்தாள்.

தெருவில் போவோர் கவனத்தைக் கவர்வது போல் 'தொடக்' கென்று சப்தமெழுப்பிக் கதவு திறந்தது.

வெளியே நின்ற அந்த வயது முதிர்ந்த 'நன்'னைப் பார்த்ததும் சுசரிதாவுக்குக் குப்பென்று வெட்கம் வந்தது.

''ஆம்புலன்ஸ் டிரைவர் ஆரோக்கிய சாமி வீடுதானே?''

''ஆமாம்'' என்று தலையசைத்தாள் சுசரிதா.

''அவர் இருக்காரா?''

சுசரிதா அவள் முகத்தைக் கண் மலரப் பார்த்தாள். என்னமோ அந்த முகத்தை



அப்படிப் பார்ப்பது மனசுக்கு இதமாக இருந்தது. கொஞ்சம் மதர் தெரேஸா சாயல். ஒரு வாஞ்சை — சில்லென்று பாதங்களைக் கவிந்து கொள்ளும் — சமுத்திர அலை மாதிரி மனசைத் தழுவிக் கொள்ளும் ஒரு நேசக் குறி.

''இருக்கார்'' என்று மேலே திரும்பிப் பார்த்தாள்.

ஆரோக்கியசாமி கீழிறங்கி வந்து கொண்டிருந்தான்.

சுசரிதா அந்த 'நன்' உள்ளே வர இடம் ஒதுக்குவதற்காகச் சாத்திய கதவுப் பக்கம் ஒதுங்கினாள்.

''ஸ்தோத்திரம் மதர்.''

''ஸ்தோத்திரம்.''

''மேலே வாங்களேன்'' என்று 'நன்'னை அழைத்தான். அவள் சுசரிதாவை ஒரு புன்னகையோடு பார்த்து விட்டுப் படி ஏறி வர அவளுக்கு வழி விட்டுச் சுவரில் ஒட்டி நின்றான்.

கீழே நின்ற சுசரிதா படியேறும் அந்த 'நன்'னின் முதுகுக்குப் பின்னால் ஆரோக்கிய சாமிக்குத் தெரிகிற கோணத்தில் என்ன விஷயம் என்று கேட்கிற பாணியில் வலக் கையை மடக்கிக் கேட்டாள்.

'கொஞ்சம் இரு', என்று பதிலுக்குச் சைகை காட்டினான் ஆரோக்கியசாமி, அந்த நன் அதைப் பார்க்க மாட்டாள் என்ற தைரியத்தில்.

ஆனால் அவள் பார்த்து விட்டாள். பாதிப் படி கடந்தவள் திரும்பிச் சுசரிதா நிற்கிறாளா என்று கவனித்தாள். அந்த ஒரு பார்வையில் எதுவோ அவளுக்கு விளங்கி விட்டது என்று சுசரிதா உணர்ந்தாள்.

உதட்டுக்குள் நுனி நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

''எங்கேயாவது பொறப்படணுமோ?'' என்று ஆரோக்கிய சாமியை நோக்கிக் கேட்டாள். படியேறுவதில் அவளுக்கு மூச்சு வாங்கிற்று. அவளுடைய அங்கியின் சர சரப்பும் லேசாக இழையும் மூச்சொலியும் மெல்ல மெல்ல மேலே நகர்ந்தன.

ஆரோக்கியசாமி ''உடனே இல்லே'' என்று கூறி விட்டுச் சுசரிதாவைப் பார்த்தான்.

ஒரு கதவு திறந்திருக்க மாடிப் படியின் கீழ், தெருப் பார்வையில் நிற்க அவளுக்கு என்னவோ போலிருந்தது.

நன்னும் அவனும் படியேறி அறைக்குள் நுழைந்த பின்னர் சுசரிதா மீண்டும் படியேறினாள். ஆரோக்கிய சாமி கொடுத்த 'ப்ரோக்ராமை' மீண்டும் உறுதி செய்து கொள்ள வேண்டும் போல் தோன்றிற்று.

சுசரிதா இதுவரை அந்த 'நன்'னைப் பார்த்ததில்லை. எனினும் அவள் இங்கே வந்திருப்பதில் ஏதோ ஒரு முக்கியத்துவம் இருப்பதாகச் சுசரிதா உணர்ந்தாள்.

''ஹாஸ்பிடலுக்குப் போயிருந்தேன். நீங்க மார்னிங் ஷிஃப்ட் முடிஞ்சு போயிட்டீங்கன்னு சொன்னாங்க! அட நீ ஏம்மா வெளியேநிக்கிறே. உள்ளே வாயேன்'' என்று 'நன்' அழைத்தாள்.

உள்ளே வந்தாள் சுசரிதா. 'நன்'னைப் பார்த்தாள். அந்த வெள்ளை முக்காட்டிலும் அங்கியிலும் முதுமையின் கோலமிழைந்த முகத்திலும் ஓர் அபூர்வமான சோகத்தின் வசீகரம்.

பிளந்த கருணைக் கிழங்கு மாதிரி வெண்மையும் சிவப்பும் கலந்த நிறம். ஆள் சற்றே குள்ளம். இன்னும் அவளுள் இருந்த ஒரு குதூகலமான குழந்தைமை மாறவில்லை என்று அந்தச் சோகச் சாயலிடையே அவள் கண்ணொளி பேசிற்று. வயசு ஐம்பதைத் தாண்டியிருக்கலாம்.

''ஒங்களுக்கு விஷயம் தெரிஞ்சிருக்குமே!''

''என்னது மதர்?''

''அல்போன்ஸ் சாமுவல் ராஜ் கர்த்தருக்குள் அடைக்கலமாய்ட்டார்!''

அவள் அதைச் சொன்னதும் சுசரிதா நிமிர்ந்து அவள் முகத்தைப் பார்த்தாள். சாந்தமாக ஒரு சிலுவை தாங்கும் புன்னகை அந்த முகத்தில் ஓரிரு விநாடிகள் தங்கியிருந்தது.

''ஆண்டவரே!'' என்று கூறிவிட்டு ஆரோக்கியசாமி தன் நெற்றிக்கும் தோளுக்குமாக ஒரு சிலுவை வரைந்து கொண்டான்.

''எப்போ மதர்?'' அவன் குரல் கம்மிற்று.

''இன்னிக்குக் காலையிலே பதினோரு மணிக்கு. ஒங்க ஹாஸ்பிடல்லதான்.''

''தெரியலே. நான் வண்டியை எடுத்துட்டு வெளியே போயிருந்தேன்.''

சுசரிதா அவன் முகத்தைக் கவனித்தாள். சம்பிரதாயமில்லாத ஒரு நிஜத்துயர் அங்கே நிழலிட்டது.

''எனக்கும் ஒரு மணிக்குத்தான் தெரிஞ்சது. மடத்துக்குப் போன் வந்தது.''

ஆரோக்கியசாமி ஒரு கேள்விக்குறியோடு அவளை நிமிர்ந்து பார்த்தான்.

''அவருக்கே தான் காலமாயிடுவோம்னு தோணிட்டிருக்கு. டாக்டர்கிட்டே அப்படி ஏதாவது நடந்தா தகவல் சொல்லச் சொல்லி மடத்தோட போன் நம்பர் கொடுத்திருக்கார்.''

ஆரோக்கியசாமி அந்த 'நன்'னையே ஆழ்ந்த துயரோடு பார்ப்பதைக் கண்டு சுசரிதா பார்வையைத் திருப்பினாள்.

இப்போது அந்த நன்னின் உதடுகள் மெது வாய்த் துடிப்பதையும் கன்னச் சதைகள் நடுங்குவதையும் கவனித்தாள்.

''நகரத்திலே அவருக்கு வேற யாரும் இல்லே. என்னையும் ஒரு நாள் மடத்து வாசல்லேருந்து வெளி வந்தப்ப பார்த்திருக்கிறார்.''

அவள் பேசுவதன் முன்னும் சொன்ன ஒவ்வொரு சொல்லின் இடைவெளியிலும் அப்புறமும் ஒரு மௌனம் நிலவிற்று. என்ன கனம்!

''நான் என்ன செய்யணும் மதர்?''

''அவர் 'பாடி'யை ஊருக்குக் கொண்டு போயிடணும். அவங்க மனுஷாள் ஊர்ல

இருக்காங்க. அங்கேயே சர்ச்சிலே நல்லடக்கம் செய்துடுவாங்க.''

''எப்போ?''

''இப்போதான்! நீங்க டூட்டி ஆஃப்னு சொன்னாங்க. ஓடியாந்தேன்.''

நன் அவனைக் கோரிக்கையை மறுத்து விடுவானோ என்ற அச்சம் தெரியப் பார்த்தாள்.

சுசரிதாவும் அவனும் பார்த்துக் கொண்டார்கள்.

''ஊருக்கு போன் இல்லே. பக்கத்து போஸ்ட் ஆபீஸுக்கு விஷயம் சொல்லி அங்கேயிருந்து ஆள் போய் முக்கிய பந்துக்களைக் கூட்டி வரணும். ஆசிர்வாதபுரம் தோப்பூர்லேருந்து ஏழு கிலோ மீட்டர் இருக்குமா?''

''பத்து கிலோ மீட்டர்'' என்றான் ஆரோக்கியசாமி.

''வண்டி ஒண்ணு ரெடியா இருக்கு. டிரைவருக்கு ரூட் தெரியாது.''

''உம்ம்ம்'' என்றான் ஆரோக்கியசாமி. மீண்டும் அவன் பார்வை சுசரிதாவிடம் தாவிற்று.

''போன் பண்ணிச் சொந்தக்காரங்க வரலாம். ஒரு நாள் ரெண்டு நாள் ஆயிடலாம். அதுவரையிலே பாடி மார்ச்சுவரியிலே...''

அங்கே அப்போதுதான் அந்த நன் உடைந்தாள். அந்தப் புன்னகை, சாந்தம், வாஞ்சை என்ற சிலுவைச் சமநிலை அகன்று கன்னம் நடுநடுங்கி மனோபாரத்துக்கு வழி விட்டது.

அவசரமாக ஒரு கைக்குட்டையை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டு தன் மீது ஒரு சிலுவை வரைந்தவாறு மெதுவாய்ப் புன்னகை செய்தாள்.

தன்னையே அவள் உற்றுப் பார்ப்பதை உணர்ந்து சுசரிதா ஆரோக்கியசாமியின் பக்கம் பார்வையை மாற்றினாள்.

''அவருக்கு... அட்லீஸ்ட்... ஒரு சாந்தியான நல்லடக்கமாவது கிடைக்கட்டுமே ஆரோக்கியம்!''

அந்த மஹாபலிபுர பிக்னிக்கிற்கு ஆரோக்கியசாமி எத்தனை மாதங்களாகத் திட்டமிடுகிறான் என்று யோசித்த சுசரிதா இதை எப்படித் தவிர்க்கப் போகிறான் என்று உன்னிப்பாகக் கவனித்தாள்.

''ரைட் மதர்!''

சற்று வியப்புடன், ஒரு நிராசையுடன் அவன் கண்களைச் சுசரிதா சந்தித்தாள். ஆரோக்கியசாமியின் இமைகள் தாழ்ந்தன.

''எத்தனை மணிக்குக் கிளம்பணும்?''

''அஞ்சு மணிக்குக் கிளம்பினா போறும். விடிகாலை ஊருக்குப் போயிடலாம்.''

ஐந்து மணி. சுசரிதா பஸ் ஸ்டாண்டில் காத்திருக்க வேண்டிய நேரம்.

''சரி! நான் ஹாஸ்பிடலுக்கு வந்துடறேன் மதர். வண்டி அங்கே இருக்குமா? போய்க் கொண்டு வரணுமா?''

''வண்டி அங்கே வரும். ஒரு சிமெண்ட் கலர் வேன். நம்பர் டபிள் டூ டபிள் த்ரீ.''

''வந்துடறேன் மதர். ஸ்தோத்திரம்.''

அந்த நன் தன் அங்கிக்குள்ளிருந்து எதையோ எடுக்க முயன்றாள். பணம் என்று ஆரோக்கியசாமிக்குப் புரிந்தது.

''வேண்டாம் மதர்!''

''இல்லே. வழியிலே ஏதாவது எதிர் பாராச் செலவு வரும்.''

''நான் சமாளிச்சுக்கறேன்.''

''எதுக்கும் கொஞ்சம் கைவசம் வச்சுக்கிட்டா நல்லது. செலவழிக்கலேன்னா திருப்பிக் கொடுத்துடலாம்.''

''இல்லே வேண்டாம். நானும் அல்ஃபோன்ஸ் சாமுவேல் ராஜ் ஊர்க்காரன் தானே!''

அவள் உதடுகளில் ஒரு வேதனை மயமான புன்முறுவல் ஊர்ந்து மறைந்தது. அவள் தன்மீது ஒரு சிலுவை வரைந்து கொண்டாள்.

''காட் பிளஸ் யூ'' என்று இருவரையும் மாறி மாறிப் பார்த்து இருவருக்கும் பொதுவாய்ச் சொல்வது போல் கூறிவிட்டுக் கீழே இறங்கினாள்.

''வரட்டுமா?''

''செய்யுங்க மதர்.''

நன்னின் அங்கியும் காலணிகளும் ஒலித்தன. அந்தக் காலணி ஓசை மறைந்த பிறகு ஆரோக்கியசாமியைச் சுசரிதா கேட்டாள்.

''ஸோ... மஹாபலிபுரம் கான்சலா?''

''ஆமாம்.'' தொடர்ந்து எதுவாவது சொல்வான் என்று அவள் எதிர்பார்த்தாள்.

அவன் ஒன்றும் பேசவில்லை.

''எட்டு மாசமா திட்டம் போட்டே?'' என்றாள்.

''முப்பத்தி நாலு வருஷம் காத்திருந்த மனுஷன் போய்ட்டார்.''

''யாரு?''

''அல்ஃபோன்ஸ் சாமுவேல் ராஜ். மதரோட முறை மாப்பிள்ளை. இவங்க கன்யாஸ்திரீயானதும் 'மனம் உடைஞ்சு கல்யாணமே பண்ணிக்காம காலம் கழிச்ச மனுஷன்.''

சுசரிதாவின் முதுகு சிலிர்த்தது.

---

சமீபத்தில் என் நண்பர் கண்டமங்கலம் பாலசுப்பிரமணிய ராமன் வீட்டுக்குச் சென்றிருந்தேன். அவர் வீட்டை விட்டு வெளியே போகும்போது அவரது மகனும், தம்பி குழந்தைகளும் ''டாட்டா'' சொல்வதற்குப் பதில் கைகளை ஆட்டி, ''ஜெய ஜெய சங்கர'' என்று சொல்கிறார்கள். இதுதான் வழக்கமாம்!

— ஸ்ரீவத்ஸன்.






# எதிர்ப் பக்கம்

"கங்கிராஜுலேஷன்ஸ்!"

தெருவில் நடந்து போகிறவர்கள் விலகிப் போகிறவிதமாய் நண்பர்கள் கூவினார்கள்.

கணேசன் வரதராஜனை இறுகக் கட்டிக் கொண்டான். மணி, வரது கன்னத்தில் முத்த மிட்டான். சுப்புணி தட்டிக் கொடுத்தான். கலியபெருமாள் இடுப்பில் கைகொடுத்துத் தூக்கி, ஒரு சுற்றுச் சுற்றினான். மனோகர் விடாது கைகுலுக்கினான். மணி விரல் களைத் தலைமுடிக்குள் விட்டுப் பரபர வென்று கலைத்தான்.

"வர ஜனவரி மாசம் ஏழாம் தேதி எனக் குக் கல்யாணம்டா" என்று சொன்ன அடுத்த வினாடியில் இவையனைத்தும் ஒரு சேர நிகழ்ந்தன.

"கலி... கலி... அவனைக் கீழே விடு; விடு சொல்றேன்" — கணேசன் அதட்ட, வரதராஜன் கால்கள் பூமியைத் தொட்டன.

"எது கிழக்குப் பக்கம்? வாங்க, எல்லா ரும் இந்தப் பக்கம் வாங்க!" நண்பர்கள் மேற்குப் பக்கமாய் நின்று கொண்டார்கள்.

## பாலகுமாரன்

''மரியாதை தெரியாத நாயே... இத்தினி நாள் கூடப் பழகிட்டுக் கையில் பத்திரிகை யோட வந்து கல்யாணம் சொல்றியா? எத்தினி நெஞ்சுரம் உனக்கு?'' சந்துரு சட்டையைப் பிடித்தான்.

''இல்லேடா...''

''பேசாதே.''

''ஏன் சொஜ்ஜி பஜ்ஜி நாங்க தின்ன மாட்டோமா? எங்களைக் கூப்பிட்டால் ஆகாதா? ஒரு பேண்ட் துணி எடுக்கத் தெரியாத முண்டம் நீ; ஸ்பார்க் ப்ளக் வாங்க நாலு பேரைக் கடைக்குக் கூட்டிட்டுப் போற குழப்ப கேஸ் நீ. யாரைக் கேட்டுப் பொண்ணு பார்த்தே? யாரைக் கேட்டுக் கல்யாணம் பண்றே?''

''சபைக்கு வராத ரகசியமா வச்சிருந்தது சபையை அவமானப்படுத்தற விஷயம்'' — மணி ஒத்து ஊதினான்.

''தக்க தண்டனைக்குப் பிறகே இதைச் சபை அங்கீகரிக்கும்.''

''கங்கிராஜுலேஷன்ஸுன்னு தெருவே அலர்ற மாதிரி சொல்லிட்டீங்களேடா!''

''அது சந்தோஷம். உடனடி சந்தோஷம். சட்டசபை கலைச்சா ஜனங்களுக்குச் சந்தோஷம்தான். ஆனா உடனடியா கவர்னர் ஆட்சி வரும். ஊழல் பத்தி உடனே விசா



ரணை நடக்கும். இப்ப ஊழல் விசாரணை. நீ குற்றவாளி. புரியுதா?'' மனோகர் கூவ...

''கைகூப்பு!'' என்று கணேசன் உத்தர விட்டான்.

''கூப்புடா!'' கையை ஆட்டினான்.

வரது நடுத் தெருவில் கைகூப்பினான்.

''நண்பர்களே... ந ண் ப ர் க ளே... சொல்லு!''

''வேணாம்டா.''

''சொல்லப் போறியா இல்லையா?''

''நண்பர்களே... நண்பர்களே...''

''என் திருமணத்தை இன்விடேஷன் வர்ற வரைக்கும் மறைத்தது தவறு. மாபெரும் தவறு. இச்சிறுவன் பிழை பொறுத்து எல்லோரும் வந்து நடத்திக் கொடுக்க வேண்டும் என்று...''

'கொடுக்க வேண்டும்' என்று வரது கைகூப்பி முணுமுணுத்தான்.

''உங்கள் பொற்பாத கமலங்களில் விழுந்து கேட்டுக் கொள்கிறேன்.''

''விழுடா.''

''டேய்!''

''விழப் போறியா இல்லையா?''

''தெருவுடா...''

''சத்தியமா ஒரு பய கல்யாணத்துக்கு வரமாட்டான்.''



''டேய்...''

''வுழுந்துட்டு வரதா, தப்புத்தானே மறைச்சது?''

''ரூம்ல வந்து விழறேன்டா.''

''சபை கலையலாம்,'' — நண்பர்கள் விலகிப் போகத் தயாரானார்கள்.

வரதராஜன் லஸ் கார்னர் பெட்ரோல் பங்க் அருகே, மாலை எட்டு மணி சோடியம் லைட் சிரிக்க, நடைபாதை மண் சட்டையில் ஒட்ட, நண்பர்களின் காலில் சாஷ்டாங்கமாய் விழுந்தான்.

''சாமியேய்...சரணம்ஐயப்பா...'' நண்பர்கள் கூவினார்கள். தெரு திரும்பிப் பார்த்தது.

''சபரிகிரி வாசனே சரணம் ஐயப்பா,'' தெரு வியந்து நின்றது.

''எங்கள் குல சாஸ்தாவே... சரணம் ஐயப்பா...'' வியந்தவர் பல் தெரிய நண்பர்கள் கோஷத்துக்குச் சிரித்தார்கள்.

வரது எழுந்திருக்க... நண்பர்கள் ஒவ்வொருவராய்க் கைகுலுக்கினார்கள். தெரு தன் வேலையைக் கவனித்தது.

''போடா ஒரு குட் நியூஸ் சொன்னா தெருவுல வுழவச்சிட்டீங்க.''

''சபைல அவமரியாதை நடக்கக் கூடாது தம்பி. வுடு. இப்ப என்ன.... சமாதானமாயிட்டோம். யாரு பொண்ணு? எந்த ஊரு? எப்ப கல்யாணம்?''

''சொல்றேன்.''

மோட்டார் சைக்கிளுக்குப் போய் முதல் கட்டு எடுத்துப் பிரிக்க, நண்பர்கள் சூழ்ந்து கொண்டார்கள்.

''முதல் இன்விடேஷன் உங்களுக்குன்னு ஆசையா வந்தேன்...!'' வரது முணுமுணுத்தான்.

''தப்பு தோழா... முதல் இன்விடேஷன் லஸ் பிள்ளையாருக்கு. வா... வா'' என்று அவனை அழைத்துக் கொண்டு போனார்கள்.

''சாமிநாத ஐயரே.... நம்ம சிநேகிதனுக்குக் கல்யாணம். டக்கரா ஒரு அர்ச்சனை பண்ணுங்க. பார்ப்போம்!'' பத்திரிகை பெட்டி வாங்கிக் குருக்களிடம் கொடுத்தார்கள்.

''பிள்ளையாரப்பா.... எங்க சிநேகிதன் கல்யாணம் நல்லபடி நடக்கணும். நல்லதா ஆளுக்கு அஞ்சு தேங்கா உடைக்கறோம். வேண்டிக்கங்கடா...'' படபடவென்று கன்னத்தில் போட்டுக் கொண்டார்கள். அர்ச்சனைத் தட்டில் ஆளுக்கு இரண்டு ரூபாய் போட்டார்கள். பிள்ளையாருக்கு முதல் பத்திரிகை வைத்தார்கள். சுவாமிக்குப் போட்ட மாலை வரதுவுக்குப் போட்டு அவனை மாலையோடு சன்னதி வலம் வரச் செய்தார்கள். ''வரது... கல்யாணக் களை வந்துடுச்சு...'' என்று கோஷமிட்டார்கள்.

வரது வெட்கப்பட்டான். லேசாய்க் கண் கலங்கினான்.

''டேய்... எதுக்கு முகத்தைத் தொங்கப் போடறே? நாங்க இருக்கோம். ஓஹோன்னு கல்யாணம் நாங்க நடத்தி வைக்கிறோம்!''

''டேய், இப்ப கொடு பத்திரிகை.''

தனித் தனியா பெயர் எழுதி நண்பர்களுக்கு வரது பத்திரிகை நீட்டினான்.

பிரித்துப் படித்தார்கள்.

''ஜனவரி பதினேழு... ஞாயிற்றுக்கிழமை எட்டு ஒன்பதரையா. கூட்டம் சாயும் வரது. வேறே டேட்டே கிடைக்கலையா?''

''ஜானவாசம் உண்டா? எப்ப ட்ரஸ் எடுக்கப் போறே?''

''கச்சேரி உண்டா? என்ன ஐடியா?''

''ஒண்ணும் புரியலடா! எல்லாத்துக்கும் உங்களை நம்பி இருக்கேன்.''

''மாயவரம் பொண்ணுதானே.... ஏன் மெட்ராஸ்ல கல்யாணம்?''

''எங்கப்பா வேலை. வரதட்சணை சீரு எதுவும் வேணாம். கல்யாணம் மெட்ராஸ்ல நல்லபடி பண்ணுங்கன்னுட்டார். பொண்ணுக்குச் சித்தப்பா மெட்ராஸ்லதான். ஆளுக்குப் போறாது. பாதி பொறுப்பு நம்ம தலைல விழுது. சமையல் ஆளு, கச்சேரி, நாதஸ்வரம் நாமதான் ஃபிக்ஸ் பண்ணணும். சத்திரம் அட்வான்ஸ் கட்டிட்டாங்க.''

''சில்லறை யாருது?''

''அவங்கதான். பொண்ணுக்குச் சித்தப்பா நாளைக்கு ரூமுக்கு வரேன்னுருக்கார். எல்லாரும் வாங்கடா. எனக்கு ஒண்ணும் தெரியாது.''

''வுடு ப்ரதர். நான் ஏ. வி. ரமணன் கச்சேரி ஏற்பாடு பண்றேன். ரமணன் நம்ம ஃப்ரண்டு,'' கணேசன் கையசைத்தான்.

''ட்ரஸ் எங்கிட்ட வுட்ரு.''

''நாதஸ்வரம் மைலாப்பூர்லியே பிராஞ் கூடலாம்.''

''சமையல்?''

''வைத்தி. மியூசிக் அகாடமி வைத்தி — நான் ஏற்பாடு பண்றேன்.''

''தடபுடான்னு போயிடாதீங்கடா!''

''என் தங்கச்சி கல்யாணமா நினைச்சு அடி ரேட்டுக்கு ஏற்பாடு பண்றேன், கவலைப்படாதே.''

''டேய் ரமணன் கிடைக்கலேன்னா...?''

''அந்தப் பேச்சே வேணாம். ரமணனைக் கட்டி இழுத்துட்டு வர்றது என் பொறுப்பு. அந்த ஆள் பாடினா உன் மாயவரக் கூட்டம் அப்படியே மகுடி கேட்ட பாம்பா உட்காரும். உன் வுட்பீக்கு கிக் தானா ஏறும். எத்தினி மணிக்கு வராரு சித்தப்பா?''

''காத்தால எட்டு மணிக்கு.''

''ஆபீஸ் போகணுமே. சரி அரை நாள் லீவு போடறேன். உன் கல்யாணத்தை விடவா ஆபீஸ் பெரிசு...''

**ம**றுநாள், மைலாப்பூர் மாட வீதியில் ஒரு கிளைத் தெருவில், வீட்டு எண் தேடி அலைந்த கிழவரைக் கணேசன் கூட்டி வந்தான்.

''எம் பேர் கணேசன். வரதுவோட சிநேகிதன். வாங்க. உள்ளே வாங்க.''

''வீடு மாதிரி இருக்கே?''

''வீடுதான். ஏழு பேர் வாடகைக்கு எடுத்



— மொறு

''இவ்வளவு தூரம் வற்புறுத்தியும் சாப்பிட மறுக்கிறாரே, அவர் யார்?''
''இந்த ஏட்டின் முதலாளி!''

அடுத்த இதழில்...

**மெஜாரிட்டி கிடைக்குமா?**

— நமது நிருபர்களின் நேரடிச் செய்திகள்

து சமைக்க ஆள் போட்டு ஒண்ணா இருக்கோம்.''

''நீங்க யாரு?'' வெறும் மார்போடு ஷேவ் பண்ணிக் கொண்டிருந்தவனைக் கேட்டார்.

''எம் பேர் மனோகர். இந்தியன் ஏர்லைன்ஸ். அவரு மணி — பாங்க் ஆஃப் பரோடா. இவரு கணேசன் — இந்தியன் ஆயில். அவர் சுப்ரமணி. ரேஸ் கம்ப்யூட்டர் கம்பெனி. இவங்க கலிய பெருமாள் சார்டர்ட் — அகௌண்டெண்ட். தனியா ப்ராக்டிஸ் பண்றார். இதுதான் உங்க வீட்டு மாப்பிள்ளை. அவரும் கம்ப்யூட்டர் ஆளுதான்!''

''எல்லாரும் பேச்சிலரா?''

''இப்போதைக்கு ஆமாம். முத விக்கெட் வரது. இனி மடமடன்னு விழும்.''

''ரொம்ப சந்தோஷம். எனக்கு மெட்ராஸ்தான். இருந்தாலும் சித்த தள்ளிப் பழவந்தாங்கல். மாம்பலத்துல சத்திரம் பாத்திருக்கா. எனக்கு ஓடி ஆட முடியாது. வயசாயிடுத்து.''

''வரது கல்யாணம் எங்க வேலை. ஓடி ஆட நாங்க இருக்கோம். என்ன வேணும் சொல்லுங்க.''

''நீங்கதான் சொல்லணும்.''

**"எ**ட்டு மணிக்குக் கூடின கூட்டம் பன்னிரண்டு மணிக்கு முடிந்தது. நண்பர்கள் உவப்புடன் பெரும் சுமை ஏற்றார்கள். தனித் தனியே அவரிடம் கை நீட்டிக் காசு வாங்கினார்கள். கணக்குக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டார்கள்.

''உட்கார வச்சு சாப்பாடு போட வேண்டிய சிநேகிதாளைச் சிரமப்படுத்தறேன்...'' பெரியவர் கை கூப்பினார்.

கூட்டம் அதற்கு முன்பே கலைந்து போயிருந்தது.

**ஆ**று வருடங்கள் முடிந்து விட்டன, இந்த வீட்டுக்கு வந்து. விளம்பர கம்பெனிக்கு கம்ப்யூட்டர் ப்ரோகிராமராய் வந்த போது, சுப்ரமணியை கம்ப்யூட்டர் விஷயமாய்ச் சந்திக்க, லாட்ஜுக்குத் தினம் நாப்பது ரூபாய் தருகிறேன் என்று பயப்பட, அவன்தான் மைலாப்பூர் வீட்டுக்கு அழைத்து வந்தான். நண்பர்களை அறிமுகப்படுத்தினான்.

எல்லா நண்பர்களுக்கும் நல்லபடியாகப் பெரிய உத்தியோகம். நிறைய பொறுப்பு. போதுமான வருமானம். படிப்பும், பொறுப்பும், வருமானமும், குடும்பச் சூழ்நிலையும் கொண்டு வந்து கொடுத்த நிதானம்.

மேன்ஷன் மாதிரி கஜ கஜா இல்லை வீடு. முன்பு ஒரு பெரியவர் சமையல் செய்து கொண்டிருந்தார். இப்போது அவர் பிள்ளை சமைக்கிறான். சமையல் செய்து விட்டுக் காலேஜ் போகிறான் அவன்!

மைலாப்பூர் காய்கறி மார்க்கெட்டில் நாலு பேர் நின்று பேச முடியாது. கோவில் அருகே குளக் கரையில் சாஸ்திரிகள் கும்பல். பூ விற்கிறவர்கள் கூட்டம். ஏதாவது உற்சவம். மைலாப்பூர் தாண்டி லஸ் சௌகர்யம். சோப்பு, சீப்பு வாங்க. சட்டென்று காப்பி குடிக்க. லஸ் பிள்ளையார் கோவில், பின்பக்கம் காமதேனு தியேட்டர். அருகே சௌகர்யம். அரை இருளாய், மர நிழலாய், பெட்ரோல் பங்க் ஓரமாய், சின்ன மேடையிருக்கும். பெட்ரோல் பங்க் சின்னாவிடம் மாசாந்திர அக்கௌண்ட்ஸ் எல்லோருக்கும் இருந்தது. சின்னாவுக்கும் இவர்கள் நட்பு பிடித்திருந்தது.

அது தவிர லஸ் பக்கம் பெண்கள் நடமாட்டம் அதிகம். நண்பர்கள் யாரும் பெண்களைத் துரத்துகிறவர்கள் இல்லை. பார்க்கிறவர்கள்!

''மச்சி மச்சி... க்ளாஸா ஒரு உருப்படி வருது.' குலுங்கி அவள் கடக்கும் வரை ஆவல் தீரப் பார்த்து விட்டு அரட்டைக்குத் திரும்பி விடுவார்கள்.

மனோகர் ஒருமுறை அத்து மீறி ஒரு பெண்ணைப் பார்த்து 'விஸில்' அடித்த போது, அந்தப் பெண் தூவென்று துப்பி விட்டாள். நண்பர்கள் அதிர்ந்து போனார்கள்.

''காலி பண்ணிடு மனோகர்'' என்று சுப்பிரமணி கட்டளையிட்டான். ''நாளைக்கு ரும் தேடி யாராவது அந்தப் பொண் ஆளுங்க வந்துட்டா நாம அக்கம் பக்கம் தலை காட்ட முடியாது. காலி பண்ணிடு.''

கிட்டத்தட்ட காலில் விழாத குறையாக மனோகர் மன்னிப்பு கேட்டான். அதற்குப் பிறகு பெண்களைப் பார்ப்பதைக் கூட அவன் நிறுத்திக் கொண்டான்.

லாண்டிரி பில் ஓர் ஆள் கவனித்தான். சமையல் செலவு ஓர் ஆள் கவனித்தான். வீடு பெருக்கி வாசலில் கோலம் போட ஒருவன் பொறுப்பேற்றான். வாடகை வசூல் ஒரு நபர் பொறுப்பாயிற்று. ஓர் ஆள் டோட்டலாய் சூப்பர்வைஸ் செய்து கணக்குத் தணிக்கை செய்தான்.

கலிய பெருமாளுக்கு வீட்டு வாசலிலேயே ஆபீஸ். எந் நேரமும் அங்கு சாவி இருக்கும். சாவி எங்கே பூட்டு எங்கே என்கிற தவிப்பு இல்லை.

அங்கே கண்டிப்பு இருந்தது. உறுதியான









நட்பு இருந்தது. அருமையான சாப்பாடு இருந்தது. எல்லார் சுக துக்கம் பற்றி விசாரணை இருந்தது.

சுப்புணி அப்பா உடல்நிலை கவலைக்கிடம் என்றதும் ஐந்து நிமிடம் மனோகர் மதுரை விமானம் நிற்க வைத்து ஏற்றி விட்டான். மரணச் செய்தி வந்ததும் கணேசனும், வரதுவும் துக்கம் விசாரிக்கப் போனார்கள்.

கணேசன் தங்கை மெடிகல் காலேஜில் படிக்கிறாள். அவன் ட்ரெயினிங்குக்கு இரண்டு மாதம் பாம்பே போக, வாரா வாரம் அவளைச் சொந்தத் தங்கையாய்ப் போய்ப் பார்த்துக் கொண்டார்கள்.

மணி என்கிற மணிகண்டனுக்கு அப்பெண்டிசைடிஸ் ஆபரேஷன். மாற்றி மாற்றி அவர்கள் லீவு எடுத்துக் கவனித்துக் கொண்டார்கள்.

இது வீடு. சுகமான வீடு. இப்படிப்பட்ட நண்பர்கள் கிடைப்பது அதிர்ஷ்டம். பத்து பைசா கடன் கேட்காத நண்பர்கள். எந்த உதவிக்கும் அஞ்சாத நண்பர்கள்.

கல்யாணம் என்று முன் கூட்டியே சொல்லியிருக்கலாம். சொல்ல முடியாதபடி நேர்ந்து விட்டது. மூன்று கட்டு பத்திரிகையை ஆபீஸில் கொண்டு வந்து தம்பி வைத்த போதுதான் சகல வேலைகளும் மடமடவென்று நடந்திருப்பது தெரிந்தது.

''அப்பா உன் இஷ்டத்துக்கு இன்விடேஷன் அடிக்காதே... எல்லாருக்கும் இதே மாதிரி மஞ்சப் பத்திரிகை கொடு. அதான் நம்ம வழக்கம்னு சொல்லச் சொன்னா. இதுதான் மரியாதையாம். நீயே கல்யாணம் பண்ணிக்கற மாதிரியெல்லாம் பிரிண்ட் பண்ண வேண்டாம்னா.''

தங்குமிடத்திற்குக் கட்டுக் கொண்டு வரும் போது எவரும் இல்லை. லஸ் போய் விட்டதாய்ச் சமையல்காரப் பிள்ளை சொல்லிற்று.

லஸ் பிள்ளையார் கோவிலுக்குப் போய் நின்ற போதுதான் சகல கூத்துக்களும் நடந்தன. அறைக்கு வந்து படுக்கிற போது கேட்டார்கள்.

''எப்படா பொண் பார்த்தே?''

''தீபாவளிக்குன்னு போனேன்டா வீட்டுக்கு.... யாரோ ஒரு பொண்ணு பட்சணம் எடுத்துக் கொண்டு வந்தது. 'இந்தப் பொண்ணுக்கு உன்னைக் கேட்கறா. பண்ணிக்கறயா?'ன்னு அம்மா கேட்டாள்! பேசிப் பழகுமான்னு பதிலுக்குக் கேட்டேன்.

''போய்ப் பேசிட்டு வாயேன்னா. பொண் பார்க்கற மாதிரி கூடப் போவலடா. தீபாவளி ஆச்சான்னு கேட்கப் போனேன். அக்கா தங்கை மூணு பேர். இவள் பெரியவள்! எல்லாருமே நல்லா பேசினாங்க. அவர்களுக்கு ரொம்ப வசதின்னு சொல்ல முடியாது. ஓ.கே.''

''என்னடா பேசினே?''

''பர்ஸனல்.'' தோள் குலுக்கி வரது புன்னகை செய்தான்.

தூக்கத்திலெல்லாம் கல்யாணியின் முகம் வந்தது. எல்லா பேச்சுக்கும் உங் கொட்டின இனிமை எப்போதும் மனசுள் இருந்தது.

''கம்ப்யூட்டர்னா என்ன...?'' — கேட்ட கேள்வி இன்னும் காதில் ஒலித்தது.

வெட்கப்படவில்லை. கதவோரம் ஒளியவில்லை. குனிந்து வணங்கி 'நிதி சாலா சுகமா' பாடவில்லை. ''வாங்கோ'' கதவு திறந்து விட்டது கல்யாணிதான். காப்பி கொண்டு வந்து கொடுத்தது கல்யாணிதான். சர்க்கரை சரியா இருக்கான்னு கேட்டது கல்யாணிதான். ''இவ ரமா. அக்ரிகல்சுரல் இன்ஜினியரிங் படிக்கறா. இவ சுபா, டென்த். நான்தான் பி.ஏ. லிட்டரேச்சர் எடுத்துண்டு மேல போக முடியாமல் கல்யாணம்னு நிக்கறேன்'' என்றாள்.

''போக முடியாத என்ன... எம்.ஏ. படிக்கலாமே?''

''லிட்டரேச்சர் ரொம்பப் படிச்சா ஒரு மாதிரி ஆயிடுவேனோன்னு பயமா இருக்கு.''

''புரியலை.''

''ரொம்ப கற்பனையா போயிடும். சாதாரண லெட்டர் கூட ஜிவு ஜிவுன்னு எழுத ஆரம்பிச்சு எமோஷனலா போறது. சயன்ஸ் மாதிரி லாங்வேஜ் இல்லை. ப்ராக்டிகலா திங்க் பண்ண லிட்டரேச்சர் விடாது.''

''கற்பனை சுகம்தானே?''

''வெளியே வரணுமே. நாலு பேரோடு பழகணுமே. கதைல வர மனுஷா வேறே. நிஜம் வேறே. எல்லா கதையும் க்ரீம். சொஸைட்டியோட க்ரீம். சொஸைட்டி புளிச்ச தயிர். வெண்ணையா யோசிக்கலாம்; வாழ முடியாது.''

''சபாஷ்!''

''கம்ப்யூட்டர்னா என்ன...?''

வரது விழித்தான்.

''படிச்சேன் புரியலை. அதனால் கேட்கறேன். இரண்டு வார்த்தைல சொல்ல முடியாதுன்னா 'பரவாயில்லை. வேண்டாம்.''

''முடியும். எழுத்தை எண்ணாக மாற்றி எண்ணை எழுத்தாக மாற்றுவது. மிஷின் கறதால வினாடி நேரத்துக்கு நம்மை விட

மூணு மடங்கு ஸ்பீட்ல மாத்தும்.''
''உங்....''
''என்ன உங்?''
''ப்ரோக்கிராமர்னா...?''
''இப்ப உங்க வீட்டுக்கு வரவு செலவு எப்படின்னு சொன்னா அதை வச்சு கம்ப்யூட்டர்ல ப்ரோக்ராம் பண்ணிக் கொடுப்பேன். ஒரு பட்டன் தட்டினா நேத்திக்கு என்ன செலவு போன வாரம் எவ்வளவு செலவு... போன வருஷம் எவ்வளவு செலவு... போன வருஷம் இதே தேதி என்ன செலவு தெரியும்.''
''ஞாபகம் வச்சுக்கற பொட்டி.''
''கரெக்ட். ஆனா அதுக்கு மேல் வித்தை பண்ணணும்.''
''ப்ரோக்ராம் பண்ணணும்.''
''யெஸ்.''
''அப்ப கம்ப்யூட்டரை விட ப்ரோக்ராமர் உசத்தியா இருக்கணும்?''
''யெஸ்.''
''கம்ப்யூட்டர் மனுஷாளை முழுங்கிடாதே?''
''இப்போதைக்கு இல்லை. போகப் போக மனுஷாளை விடக் கெட்டியா ஆயிடலாம்.''
''இப்ப நான் எம்பிராய்டரி பண்ணுவேன். கம்ப்யூட்டர்ல அது உபயோகப் படுமா?''
''பண்ணலாம். ஆயிரம் டிசைன் அதுக்கு ப்ரோக்ராம் பண்ணிட்டா. ஒவ்வொரு டிசைனுக்கும் ஒரு கோட் நம்பர் கொடுத்துட்டா... எம்பிராய்டரி மிஷினோட கனெக்ஷன் கம்ப்யூட்டருக்குக் கொடுத்துட்டு பட்டன் தட்டினால் போதும். கம்ப்யூட்டர் மேற்பார்வைல மிஷின் எம்பிராய்டரி பண்ணும்.''
''உங்க வேலை கஷ்டமானதா...?''
''கொஞ்சம் கற்பனை; கொஞ்சம் கெட்டிக்காரத்தனம்; கொஞ்சம் அனுபவம் வேணும்.''
''கம்ப்யூட்டர் படிச்சவா எல்லாம் ரொம்ப கெட்டிக்காரான்னு கேள்விப் பட்டேனே?''
''அப்படியில்லை. மாடு மாதிரி உழைக்கணும். போட்டுப் போட்டுப் பார்க்கணும். என்ன விதமா உபயோகப்படும்னு யோசிக்கணும்.''
''ரொம்ப டயர்டாயிடுமா?''
''தினமா ப்ரோக்ராம் பண்றோம்? ஒரே நாள்ல பண்றோமா? கொஞ்சம் கொஞ்சமா நடக்கற வேலை அது.''
''சந்தோஷமான வேலையா?''
''வேலை பிடிபட்டுட்டா குஷாலான வேலை. என் செல்லம் பதில் சொல்லும்னு உட்கார்ந்து கம்ப்யூட்டரோட பேசத் தோணும்.''
''பாம்பே டெல்லின்னு போயிட்டா ப்ரைட் ஃப்யூச்சர் இல்லை...?''
''போலாம்.... எனக்கு இஷ்டமில்லை. எனக்கு மெட்ராஸ் போறும்.''
''அப்பாடா!''
''எதுக்கு அப்பாடா?''
''எங்கேயாவது பாம்பே டெல்லின்னு போக வேண்டியிருக்குமோன்னு பயம்...''
''பாம்பே டெல்லி பயமா?''
''நம்ம வீடு சுகம் மாதிரி வருமா? நம்ம ஊர் மாதிரி இருக்குமா?''
''உனக்குப் புடிச்சதே மா ய வ ர ம் தானா?''
''இல்லை. மெட்ராஸ். எல்லா வசதியும் இருக்கு. அதே சமயம் சைலண்ட்.''
''அப்ப என்னைக் கல்யாணம் பண்ணிக்க ரெடியா?''
''நீங்கதானே சொல்லணும்.''
''ஒரு மாறுதலுக்கு நீ சொல்லேன்.''
''எனக்கு உங்க வீடு புடிச்சுருக்கு. தடபுடன்னு அதட்டலை. ஈஸியா இருக்கா. கஷ்டப்படுத்த மாட்டா. நீங்க பதற்றமா பேசலை. உர்ருன்னு இல்லை. டான்ஸ் தெரியுமா... பாட்டு தெரியுமான்னு கேட்கலை....''
''யாருக்குப் பாட்டுத் தெரியாது. எல்லாருக்கும் பாடத் தெரியும். நன்னா பாடறது பயிற்சினாலே...''
''உங்களுக்குப் புடிச்ச பாட்டு எது?''
''சினிமா பாட்டுதான் புடிக்கும்.''
''எது?''
''தொட்டால் பூ மலரும். தொடாமல் நான் மலர்ந்தேன். சுட்டால் பொன் சிவக்கும் சுடாமல் கண் சிவந்தேன்.''
''ஹை... நன்னா பாடறீங்களே!''
''இது பாடறதா...?''
''அம்மாடி! பேசிட்டியா...'' — கீழேயிருந்து குரல் கேட்டது.
''இதோ வந்துட்டேம்மா. போலாமா?''
''நீ பாடவேயில்லையே...''
''நலங்குல பாடறேன்.''
''என்னைப் பிடிச்சிருக்கா... சொல்லவேயில்லையே.''
''கொஞ்சம் கற்பனை. கொஞ்சம் கெட்டிக்காரத்தனம், கொஞ்சம் அனுபவம் இருக்கிறதா சொன்னீங்களே... அதை இப்போ உபயோகப்படுத்த மாட்டீங்களா?''
அதிர்ந்து போய் நிற்கத்தான் முடிந்தது.

அம்மா கேட்டதற்கு. ''கெட்டிக்காரப் பொண்ணும்மா. நான் கல்யாணம் பண்ணிக்கறேன்'' — இரண்டே வாக்கியத்தில் பதில் சொன்னான்.
மாயவரத்தில் பஸ் ஏறினான். இரண்டு தங்கைகளுடன் பஸ் ஸ்டாண்டுக்குக் கல்யாணி வந்திருந்தாள். கோதுமை அல்வாவும், ஆடியோ கேஸட்டும் கொடுத்தாள்.
கேஸட்டில், அவர்கள் மாடியில் பேசிய பேச்சு ரெக்கார்ட் ஆகியிருந்தது. ''இப்போ எங்க அக்கா பாடுவா...'' — கடைசித் தங்கை ரமா குரல் கேட்டது. தம்பூர் சுருதி கேட்டது. 'தினமணி வம்ச...' பாட்டு கேட்டது. 'நெடியோனே, நின் கோவில் வாசலில் படியாய்க் கிடந்து நின் பவளவாய் காண்பனே...' பாசுரம் கேட்டது. 'கண்ணனே நீ வரக் காத்திருந்தேன் ஜன்னலில் பார்த்திருந்தேன்...' — காதல் பொங்கிற்று.

— நண்பர்களுக்கு கேஸட் போட வெட்கமாய் இருந்தது. மேற்கொண்டு ஓர் இடைஞ்சலும் இல்லாமல் கல்யாணி கை பிடிக்க வேண்டுமே என்கிற கவலை வந்தது. பத்தே நாளில் பத்திரிகை வந்து இறங்கியதும் 'அப்பா...!' என்று பெருமூச்சு வந்தது.

காதல்தான் கனவா என்ன? கல்யாணம் கூட கனவுதான். கல்யாண நாள் நெருங்க நெருங்க, கனவு அதிகரித்தது.

வரது எட்டு சாம்பின் துணி பரப்பி சூட்டு—கோட்டு எடுக்க முழித்துக் கொண்டிருந்தான்.

''மாயவரத்துக்குப் போய் ஒரு வார்த்தை கேட்டுண்டு வா... எது எடுக்கணும்னு... போடா கூஸ். இந்த ப்ரௌன் செக்ட் ப்ளு எடு.''

''டேய்... வைத்தி வர மாட்டார். அவர் சிஷ்யன் சங்கரன்னு பேரு. அவன் வரான். அன்னிக்கு செம முகூர்த்தம்டா. காய் கறிக்கு டெம்போ புடிச்சுட்டேன். அதுக்கு அட்வான்ஸ் கேட்கறான். நான் அந்தப் பெரியவர் கிட்ட வாங்கலை. என் காசு போடறேன். பின்னால அட்ஜஸ்ட் பண்ணிக்கலாம்.''

''ரமணன் வராம்மா. ஸ்டீரியோ செட் போட. எனக்காக ஸ்பெஷல் ரேட் பாதிக்குப் பாதி. ஆனா ட்ரான்ஸ்போர்ட் செலவு கேட்கறான்.''

''டேய்... சமையல் சங்கரனோட, கல்யாணச் சத்திரம் போனேன். சீரியல் செட் வேணுமான்னான். ரிஸப்ஷன்னா சீரியல் பல்ப் வேண்டாமா...? ஒத்துக்கிட்டேன். நானூறு ரூபா. சாயந்தரம் மட்டும் எரியும். யார் தரப் போறா. நீயா... உன் மாமனாரா...?''

வரது விழித்தான்.

''அவனை விடுப்பா. தம்பி நீ பத்திரிகை கொடுக்கற வரைக்கும் வச்சுக்கோ. இதை என்கிட்ட விடு.''

நண்பர்கள் பேயாய் அலைந்தார்கள். பிசாசாய் உழைத்தார்கள். வலிய வந்து சுமை தூக்கினார்கள். பிள்ளை வீட்டுக் கூட்டம் பெண் வீட்டுக் கூட்டம் இரண்டும் பஸ்ஸில் வந்து இறங்க, காலை காப்பியிலிருந்து கையலம்புகிற தண்ணீர் வரை பொறுப்பு நண்பர்கள் தலையில் விழுந்தது.

''இலை, நல்ல இலையா இல்லையா? எல்லாம் கிழிஞ்சிருக்கே. சொல்லியிருந்தா மாயவரத்துலேர்ந்து வண்டில போட்டுண்டு வந்திருக்கலாமே.''

''இது மாயவரம் இலைதான் சுவாமிகளே....'' — கணேசன் மரியாதையாய்ப் பேசினான்.

''அப்ப ஏன் கிழிசலா இருக்கு?'' சாப்பிட உட்கார்ந்த பெண் வீட்டுப் பெரிய மனிதர் இங்கிதமில்லாமல் அதட்ட....

''கிழிஞ்சுதான் வரும்.'' கணேசன் கோபம் அடக்கிப் பதில் சொன்னான்.

''யார் சொன்னா...?''

''உங்க ஜிப்பா கிழிஞ்சுருக்கு. அதப் பார்த்துச் சொன்னேன். கோணிக் கதர் ஜிப்பாவே கிழியறது. இலை எப்படி கிழியாத வரும்?''

''டாமிட்... இதுவே மாயவரமா இருந்தா....''

கணேசன் அந்த வார்த்தையைப் பொறுத்துக் கொண்டது பெரிய விஷயம். இது பிற்பகலில்தான் தெரிந்தது. மாலையில் ரமணன் மனைவியோடு கச்சேரிக்கு வந்து இறங்க, பொக்கென்று விளக்குகள் அணைந்தன. 'ட்ரான்ஸ்ஃபார்மர் பர்ஸ்ட் ஆயிடுத்து' – யாரோ விசாரித்துத் தகவல் சொன்னார்கள்.

''அந்தப் பிள்ளையை மைக்குக்குப் பதிலா மெழுகுவர்த்தி புடிச்சுண்டு சுத்தி பாடச் சொல்லுங்கோ... அம்சமா இருக்கும். இதுவே மாயவரமா இருந்தா....''

ஆறு பத்து சூரிய ஒளி மங்க ஆரம்பித்தது.

சங்கரன் ''இருட்டில் சமையல் பண்ணிப் பழக்கமில்லை. சமையல் சுமாராய்த்தான் இருக்கும்'' என்றார். வெளிச்சத்திலேயே சுமாராய் இருந்த சமையல் அது.

மனோகர் எங்கோ ஓடினான். கணேசன் யாரையோ கெஞ்சினான். கலிய பெருமாள் டெலிபோனில் சண்டை போட்டான்.

''என்ன வோய்... சின்ன பசங்களை நடத்த விட்டீர்... சிரிச்சுப் போச்சே ரிஸப்ஷன். நானூறு ரூபாவாம்... சீரியல் செட்டுக்கு – எரிஞ்சாலும் எரியாட்டாலும். எரியாத போனாலும் அழகா இருக்கு. கலர் பேப்பர்லாம் சுத்தியிருக்கா.''

ஒரு பெட்ரோமாக்ஸ் விளக்கை யாரோ தட்டிவிடத் தரை பரவி குபீரென்று தீபிடிக்க, மணி கோணி போட்டுத் தரையில் அழுத்தினான். அவன் விரல் நகம் பொசுங்கிற்று.

''இருட்ல நிப்பானேன். நல்லவேளை நிலா இருக்கு... மாப்பிள்ளையும் பொண்ணும் இப்படி நிலால வந்து நில்லுங்கோ. நிலா இப்போதைக்கு பர்ஸ்ட் ஆகாது'' – தஞ்சை மண் கூடிக் கூடிச் சிரித்தது. நண்பர்கள் கூசிப் போனார்கள். ரமணன் கெட்டிக்காரன். கூட்டத்தை அமைதியாக்க மைக் இல்லாமல் உரத்த குரலில் 'வேழமுடைத்த விநாயகனைத் தொழ.. வாழ்வு மிகுந்து வரும்' பாடினான்.

''லைட் வருமா பாட்டுக்காரரே...?'' யாரோ குரல் கொடுக்க...

பளீரென்று லைட் வந்தது. ஒரு மாமி தன்னை அறியாது கன்னத்தில் போட்டுக் கொண்டாள். வரது பெருமூச்சு விட்டான்.

எண்பது கஜ ஒயர் கடன் வாங்கி, இரண்டு தெருவுக்கு அப்பால் மூன்று கட்டடங்கள் க்ராஸ் செய்து, சத்திரத்துக்கு மட்டும் கனெக்ஷன் வந்தது. சமையலறையிலிருந்து சீரியல் லைட் வரை பளீரென்று இருந்தது.

கணேசன் புத்தி. மனோகர் உழைப்பு. மணி கெஞ்சின கெஞ்சல். கலிய பெருமாள் காசு.

''இருநூறு ரூபாய் லஞ்சம். மணி ஒயர்மென் கால்ல விழுந்துட்டான்டா. காசுக்குக் கூட இல்லை. இவன் கால்ல விழுந்ததுக்குத்தான் கனெக்ஷன் கிடைச்சுது.''

வரது மனைவி கல்யாணியுடன் மாயவரத்துக்கு பஸ் ஏற, நண்பர்கள் முழங்கை உயர வெள்ளிக் குத்து விளக்குகள் பரிசளித்தார்கள்.

. ''அப்ப மறந்து போச்சுடா, ஸாரி!'' மன்னிப்புக் கேட்டார்கள். வரது இரண்டு கைகளை விரித்துச் சகலரையும் தழுவிக் கொண்டான். கண் கலங்கினான்.

''ரொம்ப வேதனைடா உங்களுக்கு.''

''போடா கூஸ். ஆல் இன் த கேம். என் தங்கை கல்யாணம் மட்டுமில்லை. இன்னும் பத்து கல்யாணம் ஒருத்தனா நின்னு முடிப்பேன். அத்தனை அனுபவம் வந்தாச்சு.''

வரது இரண்டே நாளில் சென்னை திரும்பினான். மந்தைவெளியில் வாடகைக்கு ஃப்ளாட் பிடித்தான். மாமனார் லாரி சாமானோடு வர, மறுபடி நண்பர்கள்தான் உதவினார்கள். ஆள் வைத்து மேலே தூக்கினார்கள். இடம் பார்த்து வைத்தார்கள்.

கல்யாணி பால் காய்ச்சினாள். ஒவ்வொருவரையும் தனித் தனியே புகழ்ந்தாள்.

''எப்படி லைட் வந்தது மறுபடி...?'' விவரமாய்க் கதை மாதிரி கேட்டாள். ''மாயவரத்துலயும் பத்து இலைக்கு ரெண்டு கிழிசலாத்தான் இருக்கும். மூணாம் பந்திக்குத் தலை வாழையா போட முடியும்? விடுங்கோ'' – சமாதானப்படுத்தினாள். எங்கப்பா கச்சேரி கச்சேரின்னார். ரமணன் பாட்டு, கச்சேரிக்குக் கச்சேரி லைட் மியூசிக்குக்கு லைட் மியூசிக். என்ன குரல் அந்த மனுஷனுக்கு...! யார் செலக்ஷன் இது...?''

நட்பு கல்யாணி வாயால் அண்ணா அண்ணா என்று உறவாயிற்று. கணேசண்ணா, மணி அண்ணா, கே. பி. அண்ணா... — ''கலிய பெருமாள் அண்ணாங்கறதுதான் கஷ்டமா இருக்கு. கே. பி. அண்ணான்னு கூப்பிடட்டுமா?''

தனியே போட்டோ கிராஃபர் வரவழைத்து, மறுபடி கல்யாண ட்ரஸ் மாட்டி, ஆறு நண்பர்களோடு க்ரூப் போட்டோ எடுத்து, வரது நடு வீட்டில் மாட்டினான். மைலாப்பூர் இடத்திலும் இந்த போட்டோ மாட்டப்பட்டது.

''பொம்மனாட்டி சமையல் பொம்மனாட்டி சமையல்தான்டா. கடனேன்னு சமைச்சுட்டுப் போறான் நம்ம ஆளு. வயறு கெடலையே தவிர, வாய்க்கு ருசி இதுதான். அம்மாடி... வாரம் ஒரு தரம் வத்தக் குழம்பு அனுப்பேன்.''

இரண்டு வாரம் சட்டி வற்றல் குழம்பு போயிற்று. மூணாவது வாரம் ரசம்தான் இன்னிக்கு என்று அனுப்ப முடிந்தது. நாலாவது வாரம் ''முடியலைன்னா... இந்த வாரம் மன்னிக்கச் சொல்லுங்கோ.'' மன்னிப்பு மட்டும் போயிற்று.

''இந்த வாரம் போனாப் போறது.

அடுத்த வாரம் எதாவது அனுப்பு கல்யாணி...'' வரது கொஞ்சம் கெஞ்சினது போல் கேட்டான்.

''மாட்டேன்னு நான் சொல்லலையே.''

''என் கல்யாணத்துக்கு இவா எல்லாரும் ரொம்ப பாடுபட்டிருக்கா.''

''மாயவரத்துலேயே வச்சுண்டிருந்தா யாருக்கும் எந்தக் கஷ்டமும் இருந்திருக்காது. உங்கப்பா எதுக்கு மெட்ராஸ்ல கல்யாணம்னு ஒத்தக் கால்ல நின்னாருன்னு இன்னி தேதி வரைக்கும் புரியலை.''

''உங்களுக்கும் மாயவரம். எங்களுக்கும் மாயவரம். மொத்த ஊரும் சத்திரத்துல சாஞ்சுடும்னுதான்.''

''ஒருவேளைச் சோறு போட்டா சாஞ்சுறப் போறோம்? இங்க வாங்கின காய்கறி மாதிரி மூணு பங்கு வாங்கலாம் அந்த விலைல. சமையல் கூட குமார்தான்.''

''யார் சொன்னா?''

''எல்லாரும்தான்... உங்க அக்கா உட்பட. வைத்தி சமையல் வைத்தி சமையல்னு கடைசில வைத்தியைக் காணோம்!''

''வைத்தி சமையல்னு சொல்லவேயில்லையே. அவா சிஷ்யன் சமைக்கிறான்னு தான சொன்னோம். வேற என்ன சொன்னா...?''

''நலங்குக்கு சினிமா பாட்டு வாசிக்கறான். எந்த ஊர் வாத்தியம்னு கேலி.''

''நான்தான் சொன்னேன். உனக்குப் பிடிக்குமேன்னு... கண்ணனே நீ வரக் காத்திருந்தேன். வாசிச்சானே...''

''ஐயோ நமக்குப் பிடிச்சது நமக்குள்ள. சத்திரத்துல சொல்லலாமா? ஒரே கேலி. வெளிய யார் கிட்டயும் சொல்லாதீங்க.





''கள்ள வோட்டுப் போட்டால், அஞ்சு வருஷம், பத்து வருஷம் ஜெயில் தண்டனை கிடைக்கும் தெரியுமில்லே...!''

''ப்பூ... அவ்வளவுதானா? நல்ல வோட்டுப் போட்டாலும், அஞ்சு வருஷம் 'தண்டனை' அனுபவிக்கத்தானே போகிறோம்...!''

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.

மானம் போயிடும்!''

''மானம் போற விஷயமா இது?''

''நிச்சயம். 'காஸட் உங்களுக்கு அனுப்பலாமா? இங்க வந்தப்பப் பாடச் சொன்னார்; பாடலை'ன்னு நான் கேட்டேன். யார்கிட்டே? என் தங்கைகிட்ட மட்டும். அம்மா அப்பாக்கிட்ட கேட்க முடியுமா? யாருக்கும் தெரியாத அனுப்பறதும் வம்பு. கடைசில தங்கை சொன்னா ரொமாண்டிக்கா எதாவது பாடுடி... அதுக்கு சினிமா பாட்டுதானே பிடிக்கறதுன்னு. பாடினேன். அதே தங்கை என்ன நடந்துதுன்னு பர்ஸ்ட் நைட் முடிஞ்சதும் கேட்டா. உன் வேலையப் பாருடின்னு தொரத்திட்டேன். அத அம்மாக்கிட்டதான் பேச முடியும். அவகிட்டப் பேச முடியாது. கூடாது.''

''இப்ப நீ என்ன சொல்ல வர?''

''அததுக்கு ஒரு இடம் இருக்கு.''

''என் ஸ்நேகிதா குறையாப் படறதா?''

''இது வரைக்கும் இல்லை. இனி எப்படியோ?''

''புரியலை.''

''மூணு ஞாயித்துக் கிழமை வத்தக் குழம்பு ஓகே. வாரா வாரம் கப்பம் கட்டறா மாதிரி அனுப்ப முடியுமா... என்ன? வேணும்னுதான் நிறுத்தினேன்.''

''பாவம்... ஏதோ நாக்கு செத்துப் போய்க் கேக்கறா. அவா இல்லாம கல்யாணம் நடந்துருக்காது கல்யாணி.''

''நிச்சயம் பண்ணின கல்யாணம் யார் இல்லாமலும் நடக்கும்.''

''லைட்டுக்கு அவா பட்ட சிரமம் தெரியுமா உனக்கு? இரண்டு வீட்டுச் சுவர் ஏறி, இஞ்ச் இஞ்சா நகர்த்து, எண்பது மீட்டர் ஒயர்.... மனோகர் இந்தியன் ஏர்லைன்ஸ் ஆபீஸர்! ஒயர்மென் இல்லை; வேலைக்காரன் இல்லை.''

''புரியறது. அவர் கல்யாணத்துல நாம பரிமாறுவோம். இலை எடுத்துப் போடுவோம். இடுப்பு உயரம் வெள்ளிப் படம் கொடுப்போம்.''

''ஃப்ரண்ட்ஷிப் கட் பண்ணச் சொல்றயா?''

''நோ. ஸ்நேகிதா வேணும். சடங்காக் கிடக் கூடாது. என் தங்கை வரலாம். நாலு நாள் தங்கலாம். அப்புறம் கட்டுடி மூட்டையன்னு அஞ்சா நாள் துரத்திடுவேன்.''

''ஏன்?''

''நீங்களும் நானும் இருக்கத்தான் இந்த வீடு. சத்திரமில்லை. டிஸ்டன்ஸ்தான் மரியாதை. டிஸ்டன்ஸ் இருக்கக் கூடாத இடம் எது தெரியுமா...? ஆம்படையான் பொண்டாட்டி உறவு.''

''ஆறு வருஷம் உசிருக்குசிரா பழகினோம். ஒரு தொந்தரவு வரலை. ஒரு சண்டை இல்லை. மூணே வாரம் அவங்க வேற... நான் வேறன்னு பிரிச்சுட்டியே!''

''யெஸ்! அது வேற காலம்; இது வேற காலம். நாலு கட்டு வீடு. மாயவரத்துல எனக்குன்னு தனி ரூம். நான் வளர்த்த நெல்லி மரம், செம்பருத்தி. பிடுங்கி மெட்ராஸுக்குக் கொண்டு வர முடியுமா? கொல்லைப்புறத்துல தோய்க்கற கல்ல உட்கார்ந்து விடிகார்த்தால வானத்துச் சிவப்பைப் பார்த்துண்டு பல் தேச்ச சுகம் வருமா? வராது. ஹால்ல வாஷ் பேசின். வேகமா துப்பினா மூஞ்சில தெரிக்கறது. இங்க அப்படித்தான்னு அட்ஜஸ்ட் பண்ணிக்கணும்.''

''உன் நெல்லி மரமும் கணேசனும் ஒண்ணா? அந்த சீரியல் செட்டுக்கு நானூறு ரூபா இன்னும் உங்க சித்தப்பா தரலை. எரிஞ்ச இரண்டு மணி நேரம் பிறகு 'வேண்டாமே அணைக்கச் சொல்லு'ன்னார்.''

''அப்பா...! அந்தக் கரெண்ட் கூத்து போறும். ஆயுசுக்கும் மறக்காது. மாயவரம் பஸ் ஸ்டாண்ட் பிள்ளையார்கிட்ட ஸ்பெஷலா வேண்டிண்டேன். நிறைவேத்தணும்.''

''மாயவரத்துப் பிள்ளையாரா கரெண்ட் கொடுத்தது? கணேசன், மணி, மனோகர்...''

''வரலைன்னு வச்சுக்கோங்க. மனுஷாளை விட்டுருவேன். தெய்வத்தைத் திட்டுவேன்.''

''ஆனா உங்கள் கூட்டத்துக்கு வாய்க் கொழுப்பு ஜாஸ்தி. இரண்டு பேரையும் நிலால நிக்கச் சொன்னானே... யார் அவன்?''

''அவன் இவன்னு மரியாதைக் குறைவா பேச வேண்டாம்.''

''நீ என் சிநேகிதாளை மரியாதையா நடத்தறியா?'' கோபம் கூச்சலாய் வந்து விட்டது.

கல்யாணி அதிர்ந்து போனாள்.

ஸாரி என்று சொல்லி விட்டுச் சமையல் கட்டுக்குப் போனாள். எரியும் கேஸ் ஸ்டவ் பார்த்தபடி அழுதாள்.

வரது சட்டை மாட்டிக் கொண்டு வெளியே போனான். தனியே பார்க்கில் உட்கார்ந்து புல் கடித்தான். நண்பர்களைப் பார்க்க வெட்கமாய் இருந்தது. மனைவியிடம் கத்தியதும் அசிங்கமாய் இருந்தது.

புருஷனும் மனைவியும் முகம் தூக்கி

வைத்துக் கொண்டு வலம் வந்தார்கள்.

மறுநாள் ஆபீஸில் குறிப்பெடுக்கும் போது போன் ஒலித்தது. கலி பேசினான்.

''எந்த .......டிடா உன்கிட்ட வத்தக் குழம்பு கண்டிப்பா வேணும்னது...'' — எடுத்தவுடன் கத்தினான்.

''என்ன கலி...? எதுக்குக் கத்தற?''

''உன் வொய்ஃப் இப்ப வந்து. ஒரு சட்டிக் குழம்பு கொண்டு வந்து வச்சுட்டு அழுதுட்டுப் போவுது.''

''அழுதாளா?''

''நேத்து திட்டினியாமே. ஏன் வத்தக் குழம்பு அனுப்பலைன்னு கை ஓங்கினி யாமே?''

''கலி.....!''

''சொல்றேனேன்னு தப்பா நினைச்சுக் காதே. உங்களுக்கெல்லாம் எத்தினி தின்னாலும் போறாது. தின்னு கெட்ட வன்னு சும்மாவா சொல்றாங்க! நான் அசைவம், என்னிக்காவது மீன் ஆக்கிப் போடுன்னு நம்ம சமையல்காரப் பைய னைக் கேட்டுருக்கேனா... பொட்டலம் கட்டிக் கொண்ணாந்திருக்கேனா...? கேட்ட வனுக்கு அறிவில்லை. உனக்கு எங்க போச்சு புத்தி. எல்லார் சார்பா நான் மன் னிப்பு கேட்டுட்டேன். என்னிக்குக் கல்யா ணம் ஆச்சோ அன்னிக்கு ஒதுங்கி நிற்கறது மரியாதை. ஊர் விட்டு ஊர் உன்னை நம்பி வந்துருக்கற பொண்ணை இவனுங்களுக் காகக் கை நீட்டறியே... நல்லா வருது வாயில. போ. போய் லீவு போட்டுட்டுச் சமாதானப்படுத்து.''

''லீவு போட முடியாது கலி.''

''சரி. இதோட நம்ம ஃப்ரண்ட்ஷிப் அறுந்து போச்சு ப்ரதர். ஒரு வேடி விட்டு வாசப் படில நின்னு அழுறத என்னால தாங்க முடியாது.'' போன் துண்டிக்கப் பட்டது.

''எதுக்கு அங்கே போய் அழுதே...'' லீவு போட்டு விட்டுப் படியேறி முதல் காரிய மாய்க் கேட்டான்.

''நான் அழலை.... என்னமோ அழுகை வந்துடுத்து. மூணாவது வாரமே கன்னுன்னு கோச்சுக்கும்படி நடந்துட்டமேன்னு கவலை யாயிடுத்து.''

''நான் கை ஓங்கினேனா?''

''நான் அதெல்லாம் சொல்லலை. நான் அழறதைப் பார்த்துட்டு கலிய பெருமாள் தான் அடிச்சானா அடிச்சானான்னு பதறி னார். நான் பதிலே சொல்லாது வந்துட் டேன்.''

'பெண் என்னும் மாயப் பிசாசு! — என் னென்னமோ தோன்றியது வரதுவுக்கு.

''வழக்கத்தை விட வத்தக் குழம்பு நன்னா அமைஞ்சுது. ஒரு சொட்டு விட்டுப் பார்க் கிறேளா? என்னைப் பார்க்கணும்னா லீவு போட்டேள்? சினிமா போலாமா?''

வற்றல் குழம்பு, சினிமா, மனைவி, உடம்பு எதுவும் ஒட்டவில்லை.

''இன்னும் கோவம் தீரலையா, எம் பேர்ல? என்ன யோசனை?''

''நாளன்னிக்கு பாம்பே போறேனும். இரண்டு நாள் ஹெட் ஆபீஸ் ஸ்டே. போனால் யாரை உனக்குத் துணையா வைக் கிறது. சிநேகிதாளையும் பகைச்சுண் டாச்சு.....''

''எனக்கு எதுக்குத் துணை? பட்டிக்காடா நான்? முப்பத்திரெண்டு ப்ளாட் இருக்கு. எல்லா ஃப்ளாட்லயும் பொம்மனாட்டி இருக்கா. கொலாப்ஸிபின் டோர். இழுத்து லாக் பண்ணிட்டுக் கதவைத் தான் போட் டுண்டா என் ராஜ்யம். எங்க வேணா பல் தேய்க்கலாம். எப்படி வேணா பல் தேய்க் கலாம்.''

''இங்கதான் பல் தேய்னு உன்னைச் சொன்னேனா...''

''அப்படியில்லை, நீங்க இருக்கும் போது வீடு வேறே. நீங்க இல்லேன்னா வீடு வேறே. சமைக்கவே மாட்டேன். முதல் நாள் ரசத் தையே ஃப்ரிட்ஜ்ல வச்சு, சூடு பண்ணிச் சூடு பண்ணி ஊத்திக்கலாம். வெறும் பாவாடை சட்டையோட வீட்டுக்குள்ளேயே அலையலாம். எப்ப வருவேள்னு காத்திண் டிருக்கலாம்.''

**பா**ம்பேயில் இருந்த இரண்டு நாட் களும் பாவாடை சட்டையோடு அலைகிற மனைவியின் தோற்றமே பகலும் இரவும் மனசுள் வந்தது.

விட்டால் போதும் என்று விமானம் ஏறி னான். இறங்கி வரும் போது மனோகரைப் பார்த்தான். லக்கேஜ் டிக்கட் சரிபார்த்து விட்டு, சௌக்கியமா என்று மனோகர் கேட்க, துக்கம் பொங்கிற்று.

''நீங்கள்ளாம் எப்படிடா இருக்கீங்க? வேறே ஆள் சேர்த்துட்டீங்களா என் ப்ளேஸுக்கு?''

''இல்லை.''

''ஏன்?''

''ஆறு வருஷ சிநேகமே மூணு வாரத்துல கலைஞ்சுடுச்சு. புதுசா எதுக்குடா?''

''மனோகர்....!''

''தப்பு கணேசன் பேர்ல. வுட்டுறணும்! கல்யாணம் ஆச்சுன்னா குட்பைன்னு வுட் றணும்.''

''என்னால விட முடியலைடா...''

''புரியுது. அதனால்தான் கை நீட்டிப் பொண்டாட்டியை அடிச்சிருக்கே.''

''ஐயோ... நான் அடிக்கலை.''

''தெரியாது. கலி தான் சொன்னான். சோத்துப் பானைன்னு கணேசனைத் திட்டி னான். கணேசனுக்குக் கோவம் வந்து, சாப் பாட்டுப் பாத்திரத்தையெல்லாம் தூக்கி உடைச்சுட்டான். சமையக்காரனை நிறுத் திட்டான். இப்ப எல்லார்க்கும் ஹோட்டல்ல சாப்பாடு.''

''பெரிசு பண்ணிட்டிங்கடா...''

''பெரிசு பண்ணியது உன் பொண்டாட்டி. நீ. இதுக்குப் போய் நீ அடிச்சுருக்க வேண் டாம். அதை அவ மெனக்கெட்டு கலிகிட்டச் சொல்லியிருக்க வேணாம். சரி போ. நம்ம இடம் ஆடிப் போச்சு. அப்புறம் ஒரு விஷ

யம்.''

''என்ன....?''

''எனக்கு வர மாசம் கல்யாணம்.''

''டேய் கங்கிராட்ஸ்டா!'' மனோகர் கை குலுக்கலில் நட்பு இல்லை.

''இங்கே இல்ல. ஊர்ல. குக்கிராமத்துல. ரிஸப்ஷன் உட்லண்ட்ஸ்ல வைக்கறேன். எல்லாத்துக்கும் அதான் சௌகர்யம். கரெண்ட் போனா அவனே அலைஞ்சு கனெக்ஷன் குடுப்பான். ஃப்ரெண்ட்ஸ் யாரும் சுவர் ஏறி நிக்க வேணாம்.''

''மனோகர், ப்ளீஸ். உங்க யார் நட்பும் எனக்குக் கசந்து போகலை...''

''திகட்டிருச்சு வரது! எனக்கே கூட திகட்டிடுச்சு. லஸ் பக்கம் யாரும் போறதே யில்லை.''

''ஏண்டா?''

''வந்தா குளிச்சுட்டு மெஸ்ஸுக்கு ஓடத்தான் சரியா இருக்கு. டோக்கன் வாங்கி, கியூல நிக்கணும். நான் இப்பல்லாம் சாப்பிட்டுட்டுத்தான் ரூமுக்கே போறேன்.''

''சுப்புணி, மணிகண்டன் எப்படி இருக்கான்?''

''சுப்புணிக்கு ஜுரம். ஊருக்குப் போயிட்டான். மணிகண்டன் சிஸ்டருக்கு மேரேஜ் ஆனவுடனே அவங்க பேரண்ட்ஸை இங்கே கொண்டாந்து தனி வீடு போடப் போறானாம்.''

''க்லைஞ்சு போச்சா?''

''அது அவ்வளவுதான்டா. இனி வராது.''

''நான் காரணமா?''

''நோ.. நோ... நீ கல்யாணம் பண்ணி நகர்ந்ததும் எல்லாருக்கும் கல்யாண ஆசை வந்துடுச்சு. உன் மனைவியோட வத்தக் குழம்பு காரணமா, இல்லை... வந்து அழுதது காரணமா, தெரியலை. பேச்சுலர் லைஃப் ஒரு ஸ்டேஜ். மாறும் போது சிரமம் வரும். நாம கொஞ்சம் சுகமா, தனியா, அமைப்பா, இருந்துட்டமா... வலிக்குது! குடித்தனம் செட்டிலாக டைம் ஆகுது. ஒரு விஷயம் — ஒய்ஃப்தான் முக்கியம். சிநேகிதம் வரும், போகும். பொண்டாட்டிய சிநேகிதமா வச்சுக்கடா. எங்களை நினைச்சு அவளைத் திட்டாதே. 'ஐயோ... நல்லா இருப்பீங்களா'ன்னுகுடித்தனப்பொண்ணுநினைச்சா உருப்பட மாட்டோம். ப்ளீஸ்.''

வரதுக்கு மறுபடி விமானம் ஏறி பாம்பே போய் விடலாமா என்று தோன்றியது.

''அப்பாடா... வந்தாச்சா. இரண்டு நாள் தவிச்சுப் போயிட்டேம்பா. இனிமேல் நீங்க ஊருக்குப் போனா நான் மாயவரம் போயிடப் போறேன்.''

''ஏன்?''

''நீங்க இல்லாதது பைத்தியம் பிடிச்சா மாதிரி ஆயிடுத்து. சண்டை போட்டுட்டாலும் சரி... எதிர்க்க இருக்கேள்ங்கறதே பெரிய சந்தோஷம். உங்களுக்குத் தோணலையா அப்படி?''

தோன்றியது.. தோன்றியதுமே அழிந்தது. மறுபடி தோன்றியது.

''எனக்கென்ன வாங்கிண்டு வந்தேள் பம்பாயிலிருந்து?''

கடை பரப்பினான்.

''ஐயோ தாள்...! புடைவை மூணும் எனக்கா? ஏன் கொஞ்சம் டல்லடிக்கறேள். பசியா?''

''மனோகரைப் பார்த்தேன். அவங்களுக்குள்ளே பெரிய சண்டையாம். உன்னால.நீ அழுததால.''

அப்ப அவா சிநேகிதாளே இல்லை. ஒரு பொட்டச்சியால பிரியணும்னா அது சிநேகமே இல்லை. அவாளுக்குப் பிரியணும்னு தோணித்து. பிரியறா. நான் சாக்கா? வேணா இப்பவே போய் விழுந்து நமஸ்காரம் பண்ணி மன்னிப்பு கேட்கிறேன்.''

''வேண்டாம். மனோகர் கல்யாணம் பண்ணிக்கப் போறான். மணி, அப்பா அம்மாவைக் கூட்டிண்டு வந்து செட்டில் ஆறான்.''

''நல்லது நடக்கறதுன்னு சொல்லுங்கோ. பேச்சிலராவே யாரும் இருக்கப் போறதில்லை. இருக்கிறதும் தப்பு. உங்கம்மா நாளைக்கு வராளாம். லெட்டர் வந்துருக்கு.''

''என்ன விசேஷம்?''

''சும்மா உங்களையும் என்னையும் பார்க்கிறதுக்கு....''

''அவ உண்டாயிருக்காடா. உன் கிட்டச் சொல்லலையா...'' — அம்மா உள்ளே நுழைந்த அரை மணியில் கேட்டாள்.

''இல்லையே!''

''பயமாம்... சொன்னா வேண்டாம் இப்போதைக்குனு ஏதாவது சொல்வியோன்னு பயமாம்.''

''அம்மா என்ன இது...''

''நீ யார்கிட்டயும் ஒட்டாத, ஹாஸ்டல், சமையல்காரன் சோறுன்னு, வளர்ந்துட்டே... உனக்குக் குடித்தனம் பிடிபடலை. தெரியறது.''

''எப்படித் தெரியறது?'' தலையில் அடித்துக் கொள்ளாத குறையாய்ப் பேசினான்.

''கேட்டதும் துள்ளிக் குதிச்சு, பொண்டாட்டி கன்னத்தைக் கிள்ள வேண்டாமா? இதெல்லாம் அம்மாவா சொல்லித் தருவா. பொம்மனாட்டிக்குப் புருஷன்தான்டா உசிர். தன் மடியிலேயே சர்வ சதா காலமும் இருக்கணும்னு வெறி எல்லாருக்கும் உண்டு. த்தோ.... பார்... சுள்ளு புள்ளுங்காதே! இதமா நடந்துக்கோ. நாலு இடம் கூட்டிண்டு போ.''

மாமியாரும் மருமகளும் அரை மணியில் இத்தனை பேசியிருக்க முடியுமா. இல்லை பேசாமலே புரிந்து கொண்டார்களா?

''நான் ஒரு மாசம் இருக்கேன். அவளை மாயவரத்துக்கு அனுப்பு. அவ அப்பாவுக்குக் கடிதாசு போடு. மூணைல மஞ்சள் குங்குமம் தடவு. பெத்தவகிட்ட நின்னு பொண், தன் புருஷனைப் பத்திக் கண் கலங்கப் படாது. மகா பாவம் அது... ஆமா, நான் வத்தக் குழம்பு பண்ணினா புடிக்குமோன்னோ உனக்கு?''

'நடிகை பார்க்கும் நாடகம் — இதில்
ரசிகர் எல்லாம் பாத்திரம்.'
பாட்டு மனசுள் ஒடிற்று.

**க**ல்யாணி மாயவரம் கிளம்பிப் போனாள். வரது வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தான். நண்பர்களைப் பார்க்க வெட்கப் பட்டான்.

மனோகர் கல்யாணத்திற்குப் போனான்.

கல்யாணத்திற்குக் கணேசன் வரவில்லை. மணிகண்டம் அதிகம் பேசவில்லை. சுப்புணி கம்ப்யூட்டர் பத்தி அளந்தான். கலிய பெருமாள் வரவேற்பில் பரபரத்தான்.

''கலி, எனக்கு ஏதாவது வேலை கொடுடா.''

''வா... நில்லு. பன்னீர் தெளி. கல்கண்டு கொடு.''

''இதான் வேலையா?''

''மனோகர் யாரையும் நம்பலை. ஊர் லேர்ந்து வெள்ளைச் சட்டையும் பெரிய மீசையுமா ஆளுங்க கொண்டாந்துட் டான்.''

வரது பாதி ரிசப்ஷனிலேயே திரும்பி விட்டான்.

**க**ல்யாணி தன் அம்மாவுடன் ஊர் திரும்பினாள். கொண்டு வந்த பட்சணத்தில் வரது அம்மாவுக்குப் பாதி கொடுத்து ஊருக்கு அனுப்பினாள்.

மகளுக்கு மேல் மாமியார் இருந்தாள். மாப்பிள்ளையைக் கண்டதும் குடிகாரனைப் பார்ப்பது போல் பின்வாங்கிச் சமையல றைக்கு ஓடினாள். போர்த்தியபடி பேசி னாள்./

கல்யாணிக்கு நடக்க முடியவில்லை. படி யேற முடியவில்லை. குமட்டலும் வாந்தியும் படாதபாடு படுத்திற்று.

''கொஞ்சம் சீக்கிரமே கூட்டிண்டு போகட்டுமா?'' மாமியார் பதவிசாய்க் கேட்டாள். மறுக்க முடியவில்லை. ஐந்தாம் மாதம் கல்யாணி ஊருக்குப் போனாள்.

வீடு வெறிச்சிட்டது.

''ஹோட்டலில் சாப்பிட்டு வயிற்றைக் கெடுத்துக் கொள்ள வேண்டாம். அவசிய மானால் மைலாப்பூர் போய்க் கணேசன் அறையில் சொல்லி, மறுபடி சமையல் காரன் வைத்து அங்கே சாப்பிடவும்...'' — கல்யாணியிடமிருந்து கடிதம் வந்தது. 'கலைச்சுட்டியேடி கடங்காரி!' உள்ளே துக்கம் வந்தது.

மனோகர் இல்லை. மணிகண்டன் இல்லை. வாடகை உயர்த்தி விட்டார்கள். சமையல்காரன் கட்டுப்படியாகாது என்று கணேசன் சொல்ல, கச்சேரி ரோடு மெஸ் ஸில் டிக்கெட் கூப்பனுடன் நிற்கும்படி யாயிற்று.

எதிரும் புதிருமாய்க் கணேசனுடன் ஒரு நாள் உட்காரும்படியாயிற்று.

''சார்... வத்தக் குழம்பு விட்டுக்க றேளா...?'' — பரிமாறுபவன் கணேசனைக் கேட்டான்.



''வேண்டாம். எனக்குப் பிடிக்காது'' — கணேசன் மறுத்தது பார்த்து வயிறு கலங் கிற்று.

''ஏன் கணேசா... கல்யாணம் பண்ணிக் கலையா. நான் பெண் பார்க்கட்டுமா?''

''வேண்டாம் வரது. இப்போதைக்கு அந்த ஐடியா இல்லை.''

''வயசாறதே...''

''இப்படி தனியா இருந்து பழக்கமாயிடுத் துடா. பொம்மனாட்டியோட குடித்தனம் பண்ண பயமாயிருக்கு.''

''என்ன பயம். நாங்க செய்துக்கலை?''

''அதைப் பார்த்துட்டுத்தான் பயம் வரது.''

''என்ன கணேசா?''

''நம்ம ப்ரஸண்ட் ஸிஸ்டம் தப்போன்னு தோணறது. பால்ய விவாகம்தான் ரைட் டுன்னு நினைக்கறேன்.''

''நான்ஸென்ஸ்!''

''இல்லேடா. பதினாறு பதினேழு வயசுல ஒருத்தர் கல்யாணத்துக்குப் பக்குவமாயிட றும். முப்பது வயசு வரைக்கும் முத்தி முதிர்ற வரைக்கும் காலைப் பரப்பித் தூங் கிட்டுத் திடீர்னு கல்யாணம் பண்ணி ஒரே கட்டில் இரண்டு பேர்ங்கறது....''

''புரியாமல் பேசறே... குடும்பம், சுகம்.''

''வாஸ்தவம். குடும்பத்தோட வளர்ந்த வனுக்குச் சுகம். என்னை மாதிரி அனாதைப் பயல் அனாதையாகவே இருக்கறது பெட்டர். வரேன்.''

**வீ**டு, ஆபீஸ், மெஸ், வீடு, ஆபீஸ், மெஸ் என்று பொழுது போயிற்று. ப்ரமோ ஷன் கிடைத்தது.

கல்யாணி பெண் குழந்தைக்குத் தாயா னாள். 'அவர் கிடந்து அவஸ்தைப்படுவார்!' என்று மறு மாசமே சென்னை வந்தாள். குழந்தையோடு அம்மாவோடு படியேறி னாள்.

''அங்கே டாக்டர் சரியில்லை. நல்ல ட்ரஸ் கிடைக்கலை. ஓட்டு வீடா. ஒரே சூடு. மண்



''போலீஸ் வரைக்கும் போச்சே அந்தக் கேஸ் என்னாச்சு?''

''போலீஸ் கேட்ட லஞ்சத்தைப் பார்த்து ரெண்டு பார்ட்டியுமே சமாதான மாயிட்டாங்க!''

— ஐயாறு ஐந்தாமரை.

காந்தல். தூக. மெட்ராஸ் மாதிரி வராது. குழந்தை உங்க ஜாடையே உரிச்சு வச்சுருக்கு. அடுத்ததுக்கு அஞ்சு வருஷமாவது கேப் குடுக்கச் சொல்றா. எனக்குக் குளிப் பாட்டவே தெரியலை. அம்மாவைக் கூடக் கூட்டிண்டு வந்தேன். உங்களுக்குக் கோப மில்லையே. அம்மா இருக்கலாமில் லையா?''

'மாயவரத்துல குழந்தைகளே கிடையாதா?' — ஆச்சரியமாய் இருந்தது வரதுவுக்கு.

வீடு முழுக்கப் பொடித் துணி... துணியெல்லாம் டெட்டால் வாசனை. கல்யாணி குழந்தையை விட்டு நகரவேயில்லை. மாமியார்தான் வழக்கம் போல் பயந்து பயந்து பணிவிடை செய்தாள்.

''குழந்தை பிறந்த மறு மாசம் உங்களுக்குப் ப்ரமோஷனாமே... கை கொடுங்கோ. மணிகண்டன் சொன்னார். என்னடா கூட சம்பளம் வர்றதே... நமக்குத்தான் மறந்து போச்சோன்னு நினைச்சேன். அவ செலவுக்கு அவளே காசு சம்பாதிச்சுக் கொடுத்துட்டா. அதிர்ஷ்டக்காரி... அப்பா பாரு... அப்பா பா ரு... அப்பாவுக்கு முத்தாக்குடு... குடு.''

குழந்தை உங் கொட்டிற்று. மூன்றாம் மாதம் உதறி உதறித் தவழ்ந்தது. பிறகு ஒரு விரலைப் பிடித்துக் கொண்டு நடந்தது. அத்தே... அத்தே என்று கூவிற்று. அப்பா ஜோ... அப்பா ஜோ... என்று வாசப்படி காட்டிற்று. இறக்கி விட்டால் வீடு முழுக்க ஓடிற்று.

''இங்கிலீஷ் பர்த்டே முன்னால் வர்றது. தமிழ் பர்த்டே' பின்னால் வர்றது. என்ன பண்ணலாம்? இங்கிலீஷ் பர்த்டேக்குக் கோவில்ல அர்ச்சனை வச்சுக்குவோம். தமிழ் பர்த்டேக்கு ஆயுஷ் ஹோமம் பண்ணலாம்.''

குழந்தையைத் தோளில் போட்டுக் கொண்டு லஸ் பிள்ளையார் கோவிலுக்குப் போனார்கள். குழந்தை பெயரில் அர்ச்சனை செய்தார்கள். சுவாமிக்குப் போட்ட மாலை குழந்தைக்குப் போட்டார்கள். சன்னதி சுற்றினார்கள். வரது கோவில் விட்டுக் குழந்தையுடன் வெளியே வந்தான். பெட்ரோல் பங்க் சின்னா எதிர்ப்பட, குசலம் கேட்டான்.

''ஏம்பா இப்ப யாரும் இங்கே டேரா போடறதில்லையா?''

''ஏன் இல்லை. வேறே க்ருப் வருது. அதோ நிக்கறாங்களே.''

''எங்கே...?'' குழந்தையுடன் எட்டிப் பார்க்க, நன்றாய் உடுத்திக் கொண்டு பத்து பேர் நின்றிருந்தார்கள்.

வரது தன்னையறியாமல் அங்கே போனான்.

''ஹாய் பேபி...! பர்த்டேயா.. உனக்கு?'' யாரோ முன் வந்து குழந்தை கன்னம் நிமிண்டினார்கள். ''மாமாவுக்கு ஹலோ சொல்லு...'' கை நீட்டினார்கள். குழந்தை மிரண்டது. முகம் திருப்பி இவன் தோளில் ஒட்டிக் கொண்டது.

''கல்யாணி, இதான் எங்க ஜாயிண்ட். நான், கணேசன், மணி, சுப்புணி, மனோகர், கலி எல்லாம் இங்கதான் தினம் நிப்போம்.''

''ப்ச்சு... வாங்கோ... சட்டுன்னு. தடித் தடியா பசங்க நடுவுல எதை எதையோ சொல்லிண்டு'' நடைபாதையில் இறங்கித் தெரு க்ராஸ் செய்தாள்.

வரது குழந்தையுடன் பின்னே நடந்தான். லாரி வரச் சற்று நின்றான்.

''அறிவு கெட்ட முண்டம்! லேடீஸ் வரச் சொல்ல ஹாய் பேபின்னா என்ன அர்த்தம்! தப்பாயிடுச்சு பார் இப்ப... அசிங்கமா சொல்லிட்டுப் போறாங்க. இனிமே இங்கே வராதே.''

— உரக்க ஒரு குரல் பின்னே கேட்டது.

வரது மறுபடி போய்ச் சமாதானப்படுத்த விரும்பினான். அவன் மேல தப்பில்லைங்க என்று சொல்ல ஆசைப்பட்டான்.

''வாங்க சீக்கிரம்.'' எதிர்ப்பக்கம் கல்யாணி கை காட்டினாள். வரது குழந்தையுடன் மௌனமாய்த் தெருவைக் கடந்து எதிர்ப்பக்கம் போனான்.

''பெண் குழந்தைக்கு இருக்கிறதை விட, பிள்ளை குழந்தைக்குத்தான் நிறைய வித விதமா புதுப் புது மாடலா ட்ரஸ் இருக்கு. இல்லேன்னா...?'' கல்யாணி நடந்தபடியே கேட்டாள்.

வரது ''.ஆமாம்!'' என்றான்.

(முற்றும்)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 380/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

# "யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ் மேன் தான் எவ்வளவு நல்லவர், என் வீட்டில், சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கு நவீன முறைகளை அறிமுகப்படுத்திய இனிய நண்பர் அவர்தான்"

திருமதி. அர்ச்சனா கம்பானி, பம்பாய்



வரும் நாட்கள் ஏதேனும் ஒன்றில் யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டி, அடையாளச்சீட்டுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார்.

அவர் பேச்சில்தன்னம்பிக்கை தொனிக்கும் — இதில் வியப்பேதும் இல்லை. ஏனெனில், இவர் இந்தியாவிலே இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் வெற்றி வாகை சூடியதுமாகிய விற்பனை நிறுவனத்தின் அங்கத்தினர் ஆவார். இந்நிறுவனம் விற்பனைக்குப் பின் நம்பகமான சேவை புரியும் பின்னணி கொண்டது.

தூசு, சூழ்நிலை அசுத்தம், அசுத்தமான நீர் மற்றும் வீட்டு வேலைகளில் உதவியின்மை போன்ற இன்றைய பிரச்சினைகளை சமாளிப்பதற்கென நவீன வீட்டுப்பயோக சாதனங்களை அவர் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார்.

செயல்முறை விளக்கத்திற்கு இவரிடம் இரண்டு இணையற்ற தயாரிப்புகள் உள்ளன: யூரோக்ளீன் — அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம். இது வேக்யூம் க்ளீனரை விட சிறந்தது. மற்றும் அக்வாகார்ட் — நீர் பைப்பிலேயே பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபயர்.

யூரோக்ளீன் — உங்கள் வீட்டில் உள்ள தூசு மற்றும் சிறு துரும்புகளையும்கூட சிரமமின்றி எளிதில் அகற்றுகிறது. கண்ணிற்கு புலப்படாத தூசுகள்கூட அகன்று விடும். அக்வாகார்ட் — ஒரு ஸ்விட்சை இயக்கி, குழாயைத் திறந்தால், கிருமிகள் அற்ற பாதுகாப்பான, சுத்தமான குடிநீரை உங்கள் குழாயிலேயே நீங்கள் பெறலாம்.

உங்கள் குடும்பத்திற்கு, சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கான நவீன முறைகளை இத்தயாரிப்புகள் எவ்விதம் வழங்குகின்றன என்பதை யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டிலேயே உபயோகித்து விளக்குவார். அதன் மூலம் உங்களைச் சுற்றிலும் சுத்தமும் சுகாதாரமும் நிறைந்த உலகம் உருவாகும்.

அவர் உங்கள் வீட்டிற்கு வரும் நாள் வரை நீங்கள் காத்திருக்க வேண்டாம். விரைவில் வருகை புரிய கீழ்க்காணும் யூரேகா ஃபோர்ப்ஸ் அலுவலகங்கள் ஏதேனும் ஒன்றில் தொடர்பு கொள்ளுங்கள், அல்லது இம் முகவரிக்கு எழுதுங்கள்: யூரேகா ஃபோர்ப்ஸ், பி.ஓ. பாக்ஸ் 936, ஜி.பி.ஓ. பம்பாய்- 400 001.

## யூரோக்ளீன்

அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம் — வேக்யூம் க்ளீனரை விட சிறந்தது.

## அக்வாகார்ட்

நீர் பைப்பில் பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபயர்.

## யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட்

நவீன முறை சுத்தம் சுகாதாரத்தின் முன்னோடிகள்.

87/EFL/552-tm

